# பஞ்சாப் துயரம்

இரண்டாம் பாகம்




## வாக்குமூலங்கள்

எஸ். கணேசன் அண்டு கோ,
திருவல்லிக்கேணி, சென்னை.

1920



அமிர்தசரஸ்

| | | |
|---|---|---|
| 1. | கிர்தாரிலால் ... ... ... | 1 |
| 2. | மாக்பூல் மகமுத் ... ... | 17 |
| 3. | மகமுத் அமீன் ... ... ... | 18 |
| 4. | மிஸ். நெல்லி பெஞ்சாமின் ... ... | 26 |
| 5. | மகமுத் சாடிக் ... ... ... | 28 |
| 6. | சேத்குல் மகமுத் ... ... | 31 |
| 7. | பிரிஸ்லால் ... ... ... | 41 |
| 8. | லாலா கன்னியாலால் ... ... | 49 |
| 9. | ஹர்கோபால் கண்ணு ... ... | 47 |
| 10. | லாலா குஜர்மால் ... ... | 49 |
| 11. | காஹன் சண்டு ... ... ... | 50 |
| 12. | பண்டிட் சாலிக்ராம் ... ... | 51 |
| 13. | லாலா கிஷோராம் ... ... | 52 |
| 14. | பலோச்சன் ... ... ... | 53 |
| 15. | டாக்டர் கிச்லூ ... ... | 54 |

லாகூர்

| | | |
|---|---|---|
| 16. | கோகல்சண்டு நாங் ... ... | 60 |
| 17. | டாக்டர் கோபிசண்டு ... ... | 74 |
| 18. | ஷாம்ஜீ மோஹன் ... | 76 |
| 19. | ஆஸ்குவித் ... ... ... | 78 |
| 20. | லாலா காளுராம ... ... | 79 |
| 21. | கே. ஸி. ஹிதேஷி ... ... | 81 |
| 22. | ஹரிகிஷன்லால் ... ... | 84 |

23. மோல்வி அப்துல்லா தர் ... 89
24. ஷெயிக் அமினுடின் ... ... 94
25. மகமத் மோரான், etc.

குஜ்ரன்வாலா

26. லாலா ராஸ்யாராம் சோப்ரா ... 99
27. ஹரிகிஷன் தாஸ் ... ... 104
28. பகவான்சிங் ... ... ... 108
29. மேலா ராம் ... ... ... 110

வாசிராபாத்

30. பிரிதம்தாஸ் ... ... ... 117
31. அல்லாடின் ... ... ... 129

ணைசாமபாத் அகல்கார் முதலிய இடங்கள்

32. மிஸ்ரா பீ ஹார்பெக் ... ... 121
33. திவான் பான்ஸிலால் ... ... 124

---

34. மகாத்மா காந்தி ... ... 128
35. ஜெனரல் டையர் ... ... 157

அபிப்பிராயங்கள்

i. ஆர்தர் ஹென்டர்சன் M. P. ... ... 175
ii. H. G. வெல்ஸ் ... ... ... ,,
iii. C. P. ஸ்காட் ... ... ... 176
iv. ப்ரொபஸர் ஹாப்ஹௌஸ் ... ... ,,
v. ஹால் போர்ட் ணைட் ... ... 177
vi. J. R. கிளின்ஸ் M. P. ... ... 178
vii. பென் எம். ஸ்பூர் M. P. ... ... ,,

# பஞ்சாப் துயரம்

## இரண்டாம் பாகம்

I

### வாக்குமூலங்கள்——அமிர்த சரஸ்

பஞ்சாப் மாகாண வர்த்தக சபை டிபுடி சேர்மெனும், அமிர்த சரஸ் ப்ளோர் அண்டு ஜனரல் மில்ஸ் கம்பெனி (Flour and General Mills Company) மானேஜிங் டைரக்டருமாகிய ஸ்ரீமான் கிர்தரி லாலின் வாக்கு மூலம் :

நான் 1919ஹு எப்பிரல் மாதம் 11-ந்தேதி கான்பூரி விருந்து அமிர்த சரஸ் போய்ச் சேர்ந்தேன். காலையில் அம்பாலா ஸ்டேஷனில் என் நண்பர் வித்யாதார் (Vidya Dhar) மூலமாயும் வழியில் ரெயில்வே உத்தியோகஸ்தர்கள் மூலமாயும் ஆங்குள்ள கொடூரமான கஷ்டங்களை யுணர்ந்தேன். ஆயினும் விரிவாய் ஒன்றும் விளங்கவில்லை. நான் ரெயிலை விட்டிறங்கினதும் அந்தவிடம் ராணுவஸ்தலம் போலவே எனக்குத் தோற்றியது. சிலர் அங்கு நடந்தன வனைற்றையும் எனக்குச் சொல்ல இஷ்டப்பட்டாராயினும் பயத்தால் பேசாதிருந்தனர். சர்தார் பிக்ராம் சிங் (Sardra Bikram Singh) என்னைக் கண்டதும் பட்டணத்திற்குட் பிரவேசிக்க வேண்டாமென்று சொன்னார். நான் சற்றுத் தயங்கி 20 நிமிஷம் சென்றபின் பிரயாசைப்பட்டு ஒரு கூலியாளைப் பிடித்து, என் சாமான்களை 'சுவர்ணாலயம்' வரையில் கொண்டுபோக ஏற்பாடு செய்தேன். வாராவதியினருகில் சில ஐரோப்பிய ஸோல்ஜர்கள் காவலாகவிருந்து ஒவ்வொருவருடைய சாமான்களையும் நன்கு பரிசோதிக்காமல் பட்டணத்திற்குள் விடுவ

தில்லை. முறையே என்னுடைய சாமான்களும் நன்ருய் பரிசோதனை செய்யப்பட்டபின் அனுமதிபெற்று நான் பிரயாணமானேன். எங்கு நோக்கினும் துப்பாக்கியுடனும் கத்தி கபடாக்களுடனுங் கூடின போலீசாரோ அல்லது ராணுவஸ்தர்களோ கொஞ்ச தூரத்திற்கப்பால் இடையிடையே புலப்பட்டனர். இக்கோலங்கள் 14 அல்லது 15-ந் தேதிவரையிலிருந்தன. ஜல சப்ளை முற்றிலும் நிறுத்தப்பட்டது. பட்டணம் முழுவதும் மின்சார விளக்குகள் முதலியனவும் நிறுத்தப்பட்டன. "சுவர்ணாலயம்" சமீபம் நெருங்கிச் செல்லுகையில் நான் கொடூரச் செயல்களின் சின்னங்களையும், தந்திக்கம்பிகளறுபட்டும் சில கட்டிடங்கள் எரிந்து போயிருப்பதையும் கண்டேன். கடைகளனைத்தும் மூடப்பட்டிருந்தாலும் எங்கும் அமைதியாகவேயிருந்தது. ஆனல் ஒவ்வொருவரும் பயந்து ஏக்கம் பிடித்திருந்தனர்.

நான் அமிர்தசரஸில் இல்லாமையால் ஏப்ரல் மாதம் 10-ந்தேதி நிகழ்ந்தனயாவும் நேரிலறியாவிடினும், வந்ததும் தீர விசாரித் துணர்ந்தவற்றைச் சொல்லுகிறேன்.

காலையில் சுமார் 10 மணிக்கு டாக்டர் கிச்சுலு (Dr. Kitchlew) டாக்டர் சத்தியபால் (Dr. Satyapal) இவ்விருவரும் டிபுடி கமிஷணரால் அழைக்கபபட்டனர். இதற்கு முன்பாக முக்கியமான ஐரோப்பியர்கள் டிபுடி கமிஷணரின் பங்களாவில் கூடினதாகவும், அதில், வெளியில் எங்கே சென்ருலும் துப்பாக்கியுடன் செல்ல வேண்டுமென்று தீர்மானத்திற்கு வந்ததாகவும் கேள்விப்பட்டேன். ஹான்ஸ்ராஜ், டாக்டர் கிச்சுலு, சத்யபால் இவர்களுடன் டிபுடி கமிஷணர் பங்களாவிற்குட் சென்றதும் அங்கு ஒரு மோடார் வண்டி தயாராக விருந்தது. அதில் போலீஸ்

சூபரின்டெண்டெண்டு ரஹில் (Rehill) சில சிப்பாய் களுடன் காத்திருந்தனர். டிபுடி கமிஷனர் இவ்விரு டாக்டர்களையும் தேச பிரஷ்டம் செய்ய உத்திரவு பெற் றிருப்பதாகச் சொன்னார். உடனே இருவரும் தத்தம் குடும்பங்களுக்கு ஒரு லிகிதம் எழுதி, (கவர்ன்மெண்டா ரால் பின்னர் கேஸில் அப்புரூவராக (Approver) எடுத்துக் கொள்ளப்பட்ட) ஹான்ஸ் ராஜினிடம் கொடுத்தனர். ஹான்ஸ் ராஜ் கொஞ்ச நேரம் கழித்து திரும்பிப்போக அனுமதிபெற்று பட்டணத்துட் சென்று கடிதங்களைக் கொடுத்த பின்னர், டாக்டர் சத்தியபாலின் தந்தை லாலா முனி ராமை (Lala Muni Ram) அழைத்துக்கொண்டு கடைத்தெருவின் மார்க்கமாய்ச் சென்று அங்கே ஜனங் களை கடைகளை மூடிக்கொண்டு அனைவரும் டிபுடி கமிஷ ணரை யணுகி தேசப்பிரஷ்டம் செய்யப்பட்ட கிச்சுலு, சத்யபால் இருவரையும் விடுவிக்கும்படி பிரார்த்திக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டான். உடனே கடை கள் மூடப்பட்டன. ஜனங்கள் கூட்டமாகக்கூடி டிபுடி கமிஷணர் பங்களாவை நோக்கிப் போயினர். டிபுடி சூபரின்டெண்டெண்டு ப்ளோமர் (Plomer) இதை யறிந் ததும் சில போர்வீரர்களுடனும், பெக்கட் (Becket) லாலா குண்டன்லால், கான்னர் (Connor) இவர்களுடனும் வந்து ரெயில்வே மேற் பாலத்தடியில் தங்கினர். பின்பு ஹால் கேட், லோகார் இவ்விரு பக்கங்களினின்றும் ஜனங் கள் நிராயுதபாணிகளாய் பாலத்தினருகில் வரவும் அதி லொருவர் அதிகாரிகளை நோக்கித் தாங்கள் யாதொரு குற்றமும் செய்யவில்லையென்றும் அனைவரும் டிபுடி கமிஷ ணரை யணுகி தேசப்பிரஷ்டம் செய்யப்பட்ட தலைவரிரு வரையும் விட்டுவிடும்படி பிரார்த்திக்க வந்திருப்பதாகவும் சொல்ல பதிலுத்தரம் ஒன்றுமேயில்லை. ஆனால் கூட்டங்

கலைந்து அவரவர் திரும்பிச்செல்ல வேண்டுமென்றுரைத்த னர். ப்ளோமரோ அல்லது ஸேமோரோ (Seymore) அங்குவந்து கூடின ஜனங்களை நிந்தித்து சவுக்காலடித்த னர். ஜனங்கள் டிபுடி கமிஷணர் பங்களாவிற்கு அவசியம் போகவேண்டுமென்று சொல்லவும், ப்ளோமர் தன் பரி வாரங்களுடன் ரெயில்வேஸ்டேஷன் ரோட் பக்கமாகச் செல்லத்துவக்கினர். பாலத்திற்கு மறுபக்கம் சென்ற வுடன் கூட்டத்தை நோக்கி சுட வாரம்பித்தனர். சிலர் காயம்பட்டுயிரிழந்தனர். ப்ளோமர் தன் பரிவாரங் களுடன் கொஞ்சதூரம் சென்று திரும்பவும், சில ஜனங் கள் காயம்பட்டோரைப் பாதுகாக்கும் பொருட்டு கூடினதைக்கண்டு, மறுபடியும் சுட வாரம்பித்தனர். ஜனங் கள் உடனே திரும்பி ஓடத்துவக்கினர். பின்தங்கின சிலர் காயம்பட்டோரையும் பிணங்களையும் ஹால்பெஜாரில் கொண்டு கடத்தினர். இக்கொடூரமான காக்ஷி ஜனங் களின் கோபாக்கினியை மூட்டவும் அவர்கள் மறுபடியும் கூடி தண்டம், மரப்பலகை, விறகுகட்டை, எதெது அகப் பட்டதோ அவைகளை யெடுத்துக்கொண்டு பாலத்தை நோக்கிச் சென்றனர்.

இஃதிப்படியிருக்க, டிபுடி கமிஷணர் ஜில்லா கோர்ட் டுத்தலைவர்களுடன் இந்த சங்கதி கேழ்வியுற்றதும் விரை வாய் பாலத்தடியில் வந்து சேர்ந்தனர். சில வக்கீல்களும் ஜனங்களைத் தங்களாலியன்ற வரையில் சமாதானப்படுத்து வதாகச் சொல்லி டிபுடி கமிஷணரிடம் அனுமதி பெற்ற னர். டிபுடி கமிஷணர் மற்றய உத்தியோகஸ்தர்களுடனும் சில துருப்புகளுடனும் பாலத்தின்மீது செல்லவும் ஜனங் கள் திரளாக ரெயில்வே ஸ்டேஷனை நோக்கிச் செல்வதைக் கண்ணுற்றனர். குலாம் யாசின் (Ghulam Yasin) என்ற பாரிஸ்டர் ப்ளோமரின் வேண்டுகோளிற் கிணங்கி

ரெயில்வே ஸ்டேஷன் சென்று ஜனங்களைத் திரும்பும்படி செய்தனர். மற்றய வக்கீல்களும் பாலத்தடியில் கூடின ஜனங்களைக் கலைத்து அனைவரும் திரும்பும்படி கேட்டுக் கொண்டதற்கிணங்கினர். அச்சமயம் கோட்டைப் பக்கத்திலிருந்து 10 அல்லது 12 ஸோல்ஜர்கள் வந்துகொண்டிருந்தனர். அவர்கள் தந்தியாபீசினருகில் வரவும் அதிலொருவன் ஜனங்களை நோக்கிச் சுட்டான். ஜனங்கள் உடனே கோபங்கொண்டு மீளவும் பாலத்தை நோக்கிச் சென்றனர். உடனே துருப்புகள் சுட ஆரம்பித்து விட்டனர். வக்கீல்கள் எடுத்துக்கொண்ட பிரயாசை, தந்தியாபீசினின்றும் அகாரணமாய் சுடப்பட்டதால், பிரயோசனமில்லாமற் போயிற்று. சுமார் 20 பேர்கள் மாண்டனர். காயம்பட்ட 10, 15 மனிதர்களை ஜனங்கள் ஹால் பெஜார் கொண்டு சேர்த்தனர். இதைக்கண்ட ஜனங்களில் பலர் மனங்கலங்கி அடங்காக் கோபங் கொண்டு கட்டிடங்களை எரித்து, பாங்கியிலுள்ளவற்றை கொள்ளையிட்டனர். ஹால் பெஜாரில் மூன்று ஐரோப்பியரையும் கோட்டையின் சமீபத்தில் ஒருவரையும் ரெயிலடியில் ஒரு வரையும் கொலை செய்தனர். ஒரு ஐரோப்பிய பெண்ணையும் அடித்தனர். அமிர்த சரஸில் நான் சந்தித்த ஒவ்வொருவரும் இச்செயல்களை இகழ்ந்தும் கண்டித்தும் பேசினர். ஸ்டூவர்ட் (Stewart) தாம்ஸன் (Thomson) இருவரும் என்னுடைய ஆத்ம நண்பர்கள். அவர்களின் முடிவைக் கேள்வியுற்றதும் ஸ்தம்பாகாரமாய் விட்டேன். இச்செயல்களனைத்தும் சாயுங்காலம் சுமார் 4½ மணியுடன் நின்று பட்டணம் அமைதியடைந்தது. போலீசார் யாதொரு முயற்சியின்றி மேற் சொல்லிய செய்கைகளைத் தடுக்காமல் வேண்டினேர்க்குதவிபுரியாமலிருந்தனர். அவர்கள் தங்கள் கடமைகளைச் செய்திருப்பா

ராயின் இவ்வளவு அக்கிரமங்கள் நடந்திராவென்பது நிச்சயம். பின்பு நாலைந்து நாட்கள் வரையில் ஒன்றும் நிகழவில்லை. போலீஸார் ஒருவிதமான வேலையும் செய்யவில்லை. இரவில் ஜனங்களே பந்தோபஸ்து நிமித்தம் ரோந்து சென்றனர்.

வழக்கப்படி ஸ்ரீராமநவமியன்று டிபுடி கமிஷணர் அழைக்கப்பட்டு அதற்கிணங்கி அலஹாபாத் பாங்கியில் வந்திருந்தனர். தகுந்த மரியாதைகள் செய்யப்பட்டன. ஜனங்கள் வாத்திய கோஷங்களுடன் செல்லுகையில் "காந்தி மகா ராஜாவிற்கு ஜே!" "சத்தியபாலுக்கு ஜே!" "கிச்சுலுக்கு ஜே!" "ராமச்சந்தற்கி ஜே!" என்று சொல்லிக் கூச்சலிட்டது டிபுடி கமிஷணருக்கு கோபத்தை யூட்டியது. இரண்டு தலைவர்களையும் தேசப் பிரஷ்டம் செய்ததற்கு கர்னல் ஸ்மித்தே காரணமென்றும், இக் கூட்டத்தைக் கண்டதும் பொறுக்காமல் டிபுடி கமிஷணரை, கிச்சுலு சத்தியபாலை தேசப் பிரஷ்டம் செய்யும்படி கேட்டுக்கொண்டும் அதற்கிணங்காமையால் லாகூரையடைந்து லெப்டினண்டு கவர்னரிடம் ஒரு உத்திரவு கொண்டு வந்ததாகவும் சகலரும் சொல்லிக் கொள்ளுகின்றனர்.

11-ந்தேதியன்று ஜனங்கள் சுடுபட்டு மாண்ட சரீரங்களை ஊர்கோலத்துடன் சென்று தகனம் செய்ய வெண்ணி அதிகாரிகளை யணுக, அதற்கு ராணுவத்தலைவர்கள் ஒவ்வொரு பிரேதத்துடனும் நான்கு பேர்களுக்கு மேல் செல்லக்கூடாதென்றனர். மறுபடியும் ஜனங்கள் அதிகாரிகளையணுகி கடைசியாகச் செய்ய வேண்டிய கிரியைகளைத் தடையின்றிச் செய்ய உத்திரவு கேட்க, டிபுடி கமிஷணர் அவ்வேண்டுகோளுக் கிணங்கி 2 - மணிக்குள் பட்டணம் திரும்பி வரவேண்டுமென்றுத் திரவளித்தனர். அம்மாதிரி

யே ஜனங்கள் ஆரவாரத்துடன் சென்று கிரியைகளை முடித்து 1 மணிக்குள் திரும்பினர்.

சுமார் 4 மணிக்கு நான் வேலை நிறுத்தலை (Hartal) முடிவிற்குக் கொண்டுவர எண்ணி லாலா தோடர்மாலின் கிரஹம் சென்றேன். அங்கே லாலா டோலன் தாஸ் முதலிய அநேகர் யோசனை செய்துகொண்டிருந்தனர். லாலா டோலன் தாஸ் தன்னை அதிகாரிகள் ரெயில்வே ஸ்டேஷனில் சந்திக்கும்படி சொன்னதற்கிணங்கிச் செல்ல அங்கே டிபுடி கமிஷணர், சேமோர் (Seymore) இன்னும் மற்றவர்களுமிருந்தனராம். சேமோர் கொலை செய்யப் பட்ட ஒவ்வொரு ஐரோப்பியருக்கும் 1000 இந்தியர் களை பலிவாங்க வேண்டுமென்றுரைத்தனராம். சிலர் சிலர் பட்டணத்தையே பீரங்கிகளால் சுட்டுப் பாழு செய்யலாமென்றனராம்.

அதற்கு லாலா டோலன்தாஸ் அதிகாரிகளை நோக்கி எவ்விதத்திலாவது 'சுவர்ணாலயத்தை'ப் பாழாக்க முயற் சித்தால், அதனால் அளவிலாத் துன்பங்கள் நேரிடுமென் றுரைத்தனராம். லாலா தோடர்மால் வீட்டில் நடந்த மீட்டிங்கில் ஒருவிதமான முடிவிற்கும் வரவில்லை. நானும் லாலா டோலன்தாஸும் பிரயாசைப்பட்டும் ஜனங்கள் ஹான்ஸ்ராஜின் பிரசங்கத்தின் பயனாக ஹார்த்தாலை (Hartal) நிறுத்தச் சம்மதிக்கவில்லை.

12-ந்தேதி யன்று குண்டுகளுக் கிரையாகி மாண்ட வர்களின் சரீரங்கள் ஆயிரக்கணக்கான ஜனங்களுடன் தெருக்கள் வழியாய்க் கொண்டுபோகப்பட்டன. இவர் கள் ஸ்மசானத்தினின்றும் திரும்புகையில் சூல்தான் விண்ட் கேட்டினருகில் (Sultanwind Gate) ஆயுதங்க ளுடன் கூடின வண்டியையும் (Armoured Car) போலீ ஸாரும் சிப்பாய்களுமடங்கிய ஒரு படையையும் கண்ட

னர். இவர்களில் 10 அல்லது 12-பேர்கள் பிடித்துக் கைது செய்யப்பட்டனர். போலீஸ்டேஷனை யடைந்தவுடன் மணிக்கணக்காக கொடும் வெயிலில் நிற்கச்செய்து பின்னர் விடுவிக்கப்பட்டனர். அன்று மாலை புக்கா (Bugga) என்பவரும் இன்னும் அனேகரும் கைது செய்யப்பட்டனர். வீடுகள் சரியான காரணமில்லாமலே பரிசோதிக்கப்பட்டன. நாளுக்குநாள் ஜனங்களைக் கைது செய்வதும் வீடுகளிலிருந்த ஸ்திரீகளையும் 'மற்றவர்களையும் பலவிதமாக நிந்தித்து சொல்லொணுத் துன்பங்களுக்குள்ளாக்குவதும் அதிகரித்துக்கொண்டே வந்தன. உத்தியோகஸ்தர்கள் பட்டணத்துட் செல்லும் பொழுதெல்லாம் சிப்பாய்கள் பின் தொடர்ந்தனர். இதைக் காணும்போதெல்லாம் ஜனங்கள் தங்கள் வீடுகளுக்கோடுவார்கள். நான் லாலா டனிச்சண்டை (Lala Duni Chand M. A.) யும் இன்னும் மற்றவரையும் அதிகாரிகளை யணுகி, ஜனங்களுக்கு சாந்தத்தை யுண்டுபண்ணும்படியான செயல்களை யனுஷ்டிக்கும்படி சொல்லுமாறு கேட்டுக்கொண்டாலும் அவர்கள் துணியவில்லை. ஹான்ஸ்ராஜ் 12-ந்தேதி மாலையில் ஒரு பிரசங்கஞ் செய்தார். மறுநாள் ஜலின்வாலா (Jallianwala Garden) தோட்டத்தில் ஒரு மீட்டிங்கு நடைபெறுமென்றும் அன்று சொல்லப்பட்டது.

ஏப்பிரல்மாதம் 13-ந்தேதி சுமார் 12-மணிக்கு நான் ' சுவர்ணலயத்தி' னருகாமையில் ஒரு நண்பர் வீட்டிலிருந்தேன். அப்பொழுது லாலா தயாராம்சூரி (Lala Daya Ram Suri) அவ்விடத்தில் வந்து போலீஸ்டேஷனுக்கருகில் ' ஒருவரும் எந்த மீட்டிங்கிற்கும் செல்லக்கூடாதென்றும், பட்டணம் அன்றுமுதல் ராணுவச்சட்டத்திற்குட்பட்டதென்றும்' விளம்பரம் செய்யப்பட்டதாகச் சொன்ஞர். ஜனங்கள் பட்டாளங்களைக்கண்டதும் விளம்பாத்தை

முற்றிலும் செவிகொடுத்துக் கேட்காமலே ஓடத்துவக்கினராம். நானிருந்த பக்கத்தில் அம்மாதிரி விளம்பரம் செய்யப்படவுமில்லை, அச்சு நோடீஸ்கள் கொடுக்கப்படவுமில்லை என்று நான் நிச்சயமாய்ச் சொல்வேன். தயாராம் சொன்னதைக் கொஞ்சங்கூட கவனிக்காமல் பட்டணம் ராணுவச்சட்டத்திற் குட்படுவதைப்பற்றி கவர்ன்மெண்டார் அறிக்கை செய்ததைக் குறித்து மிகவும் மயங்கினேன்.

12-ந்தேதி யன்று உசேனியிலிருந்துவந்து கேம்பிரிட்ஜ் (Cambridge Hotel) ஹோட்டலில் தங்கியிருந்த எனது நண்பர் மிஸ்டர் ராபர்ட்ஸ் (Roberts) தன்னைவந்து பார்க்கும்படி எனக்கு ஒரு கடிதம் எழுதினார். உடனே பட்டணத்தை விட்டு வெளியே செல்ல ஒரு பாஸ் (Pass) வேண்டுமென்று முயன்றும் கிடைக்கவில்லை. கடைசியாக பாசில்லாமலே போகலாமென்றெண்ணிச் சென்று ஒருவிதமான தொந்திரவுமின்றி ஹோட்டலையடைந்து எனது நண்பரைப் பார்த்தேன். பின்பவரிடம் விடைபெற்றுத் திரும்பி டிபுடி கமிஷணரைக் கண்டு மிஸ்டர் ராபர்ட்ஸ் பட்டணத்திற்கு வருவதில் ஆக்ஷேபனை யுண்டாவென்று கேட்பதற்காகச் சென்றேன். டிபுடி கமிஷணர் வெளியில் சென்றுவிட்டதாகக் கேள்வியுற்று மீளவும் ஹோட்டலை யடைந்தேன். மிஸ்டர் ராபர்ட்ஸ் தானே டிபுடி கமிஷணருக்குக் கடிதம் எழுதுவதாகச் சொன்னார்.

அப்பொழுது நான் ஹோட்டலின் முன் பக்கத்தில் 40, 50 சிப்பாய்களும் ஆயுதவண்டியும் போவதைக் கண்டேன். பின்னர் ப்ளோமர், (Mr. Plomer) முதலானோர் மோட்டார் வண்டியிற் சென்றனர். உடனே மீட்டிங் நடக்கக் கூடாதென்ற விளம்பர விஷயம் ஞாபகத்திற்கு வரவும் ராம் பாக் (Ram Bagh Gate) கேட் வழி

யாக வெகு வேகமாய்ச் சென்றேன். வழியில் கண்ட ஜனங்களை மீட்டிங்குக்குப் போகவேண்டாமென்றுசொன்னேன். ஹக்கீம் சிங்கு முதலான எனது நண்பர்களிடம் சென்று ஒருவரையும் மீட்டிங்கிற்குப் போகவேண்டாமென்று தடுத்தேன். லாலா டோலன்தாஸ் தனது மகன் சீதாராமுடன் வீட்டின்மேலிருந்து பார்த்துக்கொண்டிருந்தனர். நானும் அங்கே சென்று தூரதிருஷ்டிக் கண்ணுடியினுதவியால் பார்த்தேன். சிப்பாய்கள் துப்பாக்கிகளுடன் ஜலின்வாலா தோட்டத்திற்கு ஓடினர். ஹான்ஸ்லி என்கிற சற்று உயரமான இடத்தில் நின்றுகொண்டனர். உடனே சுடுவதற்கு உத்திரவு கொடுக்கபப்ட்டது. ஜனங்களுக்கு யாதொரு எச்சரிக்கையும் கொடுக்கவில்லை. 10 - அல்லது 15-நிமிஷங்கள் வரையில் விடாமல் சுட்டனர். நூற்றுக்கணக்கான ஜனங்கள் உடனே மாண்டனர். அவ்விடத்தில் சுமார் 12 அல்லது 15 ஆயிரம் ஜனங்கள் கூடியிருந்தனர். அவர்களில் பலர் கிராமங்களினின்று "வைசாக" உத்சவத்திற்காக அமிர்தசரஸ் வந்தவர்கள். அதி சீக்கிரத்தில் சுடும் குண்டுகள்தான் உபயோகப்படுத்தப்பட்டன. மிகவும் கேவலமாயும் கொடூரமாயுமுள்ள செய்கை ஜனங்கள் கூட்டமாய் ஓடிக்கொண்டிருந்த கேட்டுகளை (Gates) நோக்க சுட்டமையே. அந்த ஜலின்வாலா தோட்டத்திற்கு 4, 5 வழிகள்தான் உண்டு. அந்த வழிகள் தோறும் ஜனங்களின்மேல் குண்டுகள் மழைபோல் விழுந்தன. ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டு ஓடும்பொழுது மிதிபட்டிறந்தோர் பலர். சிப்பாய்கள் முழங்கால்களில் கீழே மட்டிபோட்டு சுட்டார்கள். அதனுல் தரையில் படுத்துக்கொண்டவர்களும் சுடப்பட்டார்கள். உடனே சுடுவதை நிறுத்தி அவ்விடத்தை விட்டு துருப்புகள் சென்றன. இறந்தவர்களையும் காயம்

பட்டு விழுந்து கிடப்போரையும் கவனிக்கக்கூட சர்க்கார் ஒருவிதமான ஏற்பாடும் செய்யவில்லை.

நூற்றுக்கணக்கான ஜனங்கள் லாலா டோலன்தாஸி னுடைய கிரஹத்தில் புகுந்தார்கள். நான் அந்த சமயம் என்னால் கூடிய உபகாரத்தைச் செய்தேன். தோட்டத் தில் குப்பல் குப்பலாய் பிணங்கள் கிடந்தன. அப்பொழுது பார்த்ததில் சுமார் ஆயிரம் பேர்கள் மாண்டுகிடந்தனர். அந்தோ! பார்க்கச் சகிக்காத பயங்கரமான காக்ஷி. ஜனங் கள் அவரவர்களுடைய பந்துக்களையும் மக்களையும் தேடிக்கொண்டிருந்தனர். சுமார் 300 பிணங்கள் அவ் விடம் விட்டுக் கொண்டுபோகப்பட்டன. 8 மணிக்குப் பின் மறுபடியும் சுடுவார்களோ என்று பயந்து ஜனங்கள் அங்கு விட்டு ஓடினார்கள். அமிர்த சரஸின் வாசிகள் வருஷப்பிறப்பாகிய 'வைசாக' உத்சவத்தை இவ்விதமாகக் கொண்டாடினார்கள்.

14-ந்தேதி டிபுடி கமிஷனர் ஒரு மீடிங்கு கூட்டினார். அதற்கு நானும் சென்றேன். நான் போவதற்கு முந்தியே கமிஷனர் வந்து பின்வருமாறு ஹிந்துஸ்தானியில் பேசின தாக அறிந்தேன்.

"ஜனங்களே! உங்களுக்குச் சண்டை போடவேண்டுமா அல்லது சமாதானமாயிருக்க விரும்புகிறீர்களா ? நாங்கள் எதற்கும் சித்தமாயிருக்கிறோம். ஜனரல் உங்களுக்கு உத்திரவிடுவார். பட்டணம் அவருடைய சுவாதீனத்தி லிருக்கிறது. என்னால் ஒன்றும் செய்யமுடியாது. அவரு டைய உத்திரவுகளுக்குக் கீழ்படிந்து நடக்க வேண்டும்."

மிஸ்டர் கிட்ச்சன் (Kitchen) 2 நிமிஷந்தான் பேசி னார். உடனே ஜனரல் (General Dyer) டையர் தன் பரி வாரங்களுடன் அங்குத் தோன்றினர். உடனே நின்று கொண்டு உருது (Urdu) பாஷையில் பின்வருமாறு

பேசினர். அவர் நின்றுகொண்டு பேசினதால் நாங்களெல்லோரும் நிற்கும்படியாய் விட்டது:

"ஜனங்களே! நான் ராணுவத்தைச் சேர்ந்த சிப்பாய். உங்களுக்குச் சண்டை செய்வதில் பிரியமா அல்லது சமாதானமா யிருக்க இஷ்டமா? சண்டைபோட இஷ்டமாயின் கவர்ன்மெண்டார் சித்தமாயிருக்கிறார்கள். இல்லாவிடில் என் உத்திரவிற்குக் கீழ்ப்படிந்து நடவுங்கள். கடைகளை உடனே திறக்கவேண்டும். இல்லாவிடில் சுடுவேன். எனக்கு பிரான்ஸ் (France) தேச சண்டைக்களமும் அமிர்த சரஸும் ஒன்றுதான். நான் ராணுவச் சிப்பாய். நினைத்தகாரியத்தை சிறிதும் தவறாது முடிப்பேன். சண்டையில் இஷ்டமானால் உடனே சொல்லுங்கள். அப்படியில்லாவிட்டால் எனது உத்திரவு நீங்கள் கடைகளை உடனே திறக்கவேண்டுமென்பதுதான்.. நீங்களெல்லாரும் கவர்ன்மெண்டுக்கு விரோதமாய்ப் பேசுகிறீர்கள். ஜெர்மெனி (Germany) தேசத்திலும் பங்காளத்திலும் கல்வி கற்றோர் ராஜத்துவேஷம் பேசுகின்றனர். நான் இதுகளை அடியோடழித்துவிடுகிறேன். சொன்னபடி கேளுங்கள். நீங்கள் வேறெது சொன்னாலும் என் செவிகளிற்படாது. நான் ராணுவத்தில் 30-வருஷங்களுக்குமேல் உழைத்திருக்கிறேன். நான் இந்திய சிப்பாய்களையும் சீக்ஜாதியாரையும் நன்கறிந்தவன். நீங்கள் நான் சொல்லும்படி கேட்டு கடைகளைத் திறக்காவிட்டால், பலாத்காரமாய் கடைகள் திறக்கப்படும். சோம்பேரிகளைப்பற்றி எனக்கு நீங்கள் சொல்லவேண்டும். அவர்களைச் சுடுகிறேன். நான் சொல்வதைக்கேட்டு கடைகளைத் திறவுங்கள். சண்டைவேண்டுமானாலும் வாய்திறந்து சொல்லுங்கள்." இவர் பேசிய பின் மைல்ஸ் (Miles Irving) இர்விங்கு என்பவர் இன்னும் கடுமையாகப் பேசினார்.

"நீங்கள் ஜனரலின் உத்திரவைக் கேட்டீர்கள். பட்டணம் முழுவதும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கிறது. அவருடைய உத்திரவு கடைகளை திறக்கவேண்டுமென்பதே. நீங்கள் கீழ்ப்படக்கூடியதுதான். அதுவிஷயமாய் ஏதேனும் உங்களுக்கு கஷ்டங்களிருக்குமாயின் சொல்லுங்கள். நான் கேழ்க்கிறேன். நீங்கள் இங்கிலீஷ்காரரைக்கொன்றதால் கேவலமான செய்கைக்குள்ளாய்விட்டீர்கள். அதற்கு பழிக்குப்பழி உங்களிடமிருந்தே வாங்கவேண்டும். நீங்கள் கடைகளை உடனே திறக்கவேண்டும். கவர்ன்மெண்டார் உங்களிடத்தில் மிகவும் கோபங்கொண்டிருக்கிறார்கள். உங்களால் சர்க்காரை எதிர்க்க முடியாது. சர்க்காருக்கு விரோதமாய்ப் பேசுவோர்களைக் கடுமையாய்த் தண்டிப்பேன்." இப்படி இவர் பேசி முடிந்ததும், சில வர்த்தகர்கள் தங்களுக்கு கடைகளை இரவில் 10-மணி வரையில் திறந்துவைக்கும்படி உத்திரவுகேட்க, ஜனரல் டையர் "இன்று என் உத்திரவை ரத்துசெய்ய முடியாது. ஆனால் மறுநாள் அதைப்பற்றிக் கவனிக்கப்படும்" என்று சொன்னார். கான்பஹதூர் குலாம்சிங் ஏதோ பேசவாரம்பிக்கவும், டிபுடி கமிஷனர் அவரைத்தடுத்து "கான் சாகிப்! பேசாமலிரும். உங்களுடைய தப்பான வார்த்தைகளால்தான் இவ்வளவுதூரம் நடந்தன," என்று சொல்லி ஜனரல் டையர் முதலிய அனைவரும் அங்குவிட்டகன்றனர்.

15-ந்தேதி கடைகள் திறக்கப்பட்டன. அப்படியிருந்தும் சமாதானவழிகளைவிட்டு, ஜனங்களுக்கு மனதில் பீதியை யுண்டுபண்ணும்படி அதிகாரிகள் நடந்துகொண்டனர். பட்டணத்திலிருந்த வக்கீல்களனைவரும் ஸ்பெஷல் போலீஸ் உத்தியோகஸ்தர்களாய் நியமிக்கப்பட்டனர். அவர்களைக் கூலிகளைப்போலவே அதிகாரிகள் நடத்தினர். பட்டணத்திலுள்ள அனைவரும் இங்கிலீஷ்காரரைக் கண்ட

போதெல்லாம் சலாம் செய்யவேண்டுமென்று உத்திரவு பிறந்தது. கீழ்படிந்து நடக்காதோர் உடனே கைது செய்யப்பட்டனர். சிலர் கடுமையான வெயிலில் மணிக் கணக்காய் நிறுத்திவைக்கப்பட்டார்கள். எங்கும் பெரிய மனிதர்களை கைவிலங்கிட்டுக்கொண்டுபோவதே சகஜமாய் முழங்கியது. மனுஷத்தனமற்ற நகர்ந்துசெல்ல வேண்டு மென்ற உத்திரவு பலநாட்கள்வரையிலிருந்தது. கண்க ளிழந்த கபோதியும் அவ்வுத்திரவின்படி நடக்கவேண்டி யிருந்தது. போலீசாரின் அநாகரீகக் கொடுஞ்செயல்கள் பலவாயிருந்தன. கைகளைக்கட்டிச் சவுக்காலடிப்பதும், மனிதர்களின் கைகளை கட்டில்கால்களின் கீழ்வைத்து மேலே அவர்கள் உட்கார்ந்துகொள்ளுவதும் சகஜமா யிருந்தது. அடிப்பதும் மீசை தாடியைப் பிடித்திழுப்ப தும் மிகவும் சாதாரணமான தண்டனைகளாகும். ஒருவர் கைகளிற் ஆணிகளடிக்கப்பட்டன. ஒருவர் சிறுநீர் பரு கும்படி செய்யப்பட்டார். ஆசனவாயில் கழிகள் ஏற்றப் பட்டன.

எனக்குத் தெரிந்தவரையில் 12-ந் தேதிமுதல் ஜனங் களை போலீசார் கைதுசெய்யத் துவக்கினர். அன்று முதல் தினந்தோறும் இன்னாரைக் கைதுசெய்வது என்ன குற்றத்திற்காக வென்றில்லை. சந்தேகப் பட்டவர்கள் பலாத்காரமாய் வீடுகளிலிருந்து கைவிலங்கிட்டு சிறையி லடைக்கப்பட்டனர். பத்துருல் இஸ்லாம் ஆலிக்கான் (Badrul Islam Alikhan) இவ்விதம் கைதுசெய்யப்பட்ட போது, காங்கிரஸ் மகாசபையைச் சேர்ந்தோர்களுக்கு இக்கஷ்டங்கள் உண்டென்று தோற்றியது. நானும் அகப் பட்டுக்கொள்வேனென்று சிலர் சொன்னார்கள்.

கான்பூரில் எனது பந்து ஒருவர் சீக்காயிருந்ததால் நான் அடிக்கடி கான்பூர் போகவேண்டி யிருந்தது. எப்பி

ரல் 11-ந் தேதி இங்குவந்ததுமுதல் சங்கதி ஒன்றும் தெரி மையால் மனங்கலங்கி பலதந்திகள் கொடுத்தும் பதிலில்லை. பிறகு போலீஸ் இன்ஸ்பெக்டர் மூலமாய் வெகு பிர யாசைப்பட்டு ராணுவச்சட்ட பாஸ் ஒன்றுபெற்று கான் பூருக்குப் பிரயாணமானேன். ப்ளாட்பாரத்தில் ரெயில் வரும் வரையில் ஒருவரும் விடப்படவில்லை. பியஸ் ஆற்றி னடுவில் வண்டியை நிறுத்தி போலீசார் பிரயாணி களின் சாமான்களைப் பரிசோதித்தனர். ஐரோப்பியரைத் தவிர்த்து மற்ற அனைவருடைய சாமான்களும் பரிசோதிக் கப்பட்டன. நான் ஏப்பிரல்மாதம் 22-ந் தேதி கான்பூரை யடைந்து அங்குச் சிலநாட்கள் தங்கிப் பிறகு லக்னௌ முதலான விடங்களுக்குச் சென்றேன். திரும்பி கான்பூர் வந்ததும், என்னைக் கைதுசெய்யும்படி உத்திரவு வந்திருப் பதாயறிந்து கான்பூர் போலீஸ் சூபரின்டெண்டெண் டைப்போய்ப் பார்த்தேன். நான் அவர் சொற்படி நடப்ப தாகச்சொல்லி என்பேரில் என்ன குற்றமென்று வினவ, அவர் நானே வந்து கீழ்படிந்தமையால் ஆச்சரியத்தை யடைந்து அமிர்த சரஸினின்றும் வந்த தந்தியைக் காண் பித்தார். அவர் என்னிடத்தில் மிகவும் மரியாதையுட னிருந்தார். அவராலனுப்பப்பட்ட உடுப்பில்லாத சப் இன்ஸ்பெக்டர் இன்னும் சிலபோலீஸ் சேவகர்களுடன் அமிர்தசரஸ் போய்ச் சேர்ந்தேன். அங்கே போலீஸ் சூப்பரின்டெண்டெண்டு ரஹில் பங்களாவிற்குச் சென்ற தும், அவர் நான் அமிர்தசரஸைவிட்டு உத்திரவில்லாமல் எப்படிப்போனேனென்று வினவ, ராணுவச்சட்டபாஸ் அவர் முன்னிலையிலேயே பெற்றதாக அவருக்கு ஞாபகப் படுத்தினேன். உடனே கைவிலங்கிடப்பட்டுச் சிறைபி லடைபட்டேன். நானடைபட்டிருந்த அறை 11-அடி நீளமும் 9-அடி அகலமுமுள்ளது. 12-அல்லது 14-அடி

உயரமுள்ளது. அதில் 10-அல்லது 11-பேர்களிருந்தனர். ஒருமூலேயில் சிறுநீர்கொண்ட பானை வைக்கப்பட்டிருந் தது. நாற்றம் சகிக்க முடியவில்லை. ஒருவரும் ஸ்நானம் செய்யவாவது வேறு ஆடைகளுடுக்கவாவது அனுமதி கொடுக்கப்படவில்லை. நடுமத்தியானத்தில் அந்த விடம் அதிக உஷ்ணமாயிருந்தது. குடிதண்ணீர் கத்தினாலும் கிடைக்கவில்லை.

23-ந்தேதி 2-மணிக்கு என்னைக் கைவிலங்கிட்டு வெளி யில் கொண்டுபோயினர். அங்கே என் வாக்குமூலம் வாங் குவதற்காக ப்ளோமர் முதலானோர் காத்திருந்தனர். என்னைக் கண்டதும் சுக்கசிங் கோபத்துடன் நான் அமிர்த சரஸை விட்டுப் போனதைப்பற்றியும், நான்போன இடங் களையும் அவ்விடங்களில் அமிர்தசரஸில் நிகழ்ந்ததைப் பற்றிச் சொன்னதுண்டாவென்றும் கேட்டார். நான் ஏராளமான சம்பளம் வாங்குவதாகவும், என்னைப்போ லொத்தவர்களாலேயே வியாபாரத் தொழில் பாழாய் விட்டதாகவும் சுக்கசிங் ப்ளேர்மரிடத்தில் சொன்னார். நான் எல்லாக் கேழ்விகளுக்கும் பதிலளித்தேன். பேபர் களுக்கு ஹார்த்தாலைப்பற்றி தந்தி கொடுத்ததாக ஒப் புக் கொண்டேன். நான் ராணுவச்சட்ட பாஸ்பெற்றதும் என்னுடைய சாமான்களை அவர் சோதித்தபொழுது ஒன்றும் கெடுதலாக அகப்படாமையும் சுக்கசிங்கிற்கு வருத்தத்தை யுண்டுபண்ணிற்று. இப்படிப்பல மூடத் தனமான கேழ்விகள் கேட்டு பதிலுத்தரம் பெற்றதும் திரும்பவும் அறையில் அடைக்கபபட்டேன்.

24-ந்தேதி என்னை வேறு ஜெயிலுக்குக் கொண்டு போயினர். அங்கு பட்ட கஷ்டங்கள் சொல்லமுடியாது. அவரவரே அறையை விளக்குமாறு கொண்டு சுத்தி செய்துகொள்ளவேண்டும். எங்களுக்குக் கொடுத்த உண

வும் ரொட்டியும் மானிடருண்ணக்கூடியதாகவில்லை. 25-ந் தேதி என்னை பண்டிட் கோட்டுயாலுடன் சேர்த்து விலங்கிட்டு லாகூருக்குக் கொண்டுபோனார்கள். கைதிகளைக் கொண்டுபோகக் கூடிய வண்டியில் ஏற்றினர். எங்களைக் காணவந்த பந்துக்களுடன் பேசமுடியவில்லை. ஸ்டேஷனில் கைதிகளுடன் பேசின சிலரும் கைதி செய்யப்பட்டனர். ஸ்டேஷனிலிருந்து கோர்ட்டிற்கு நடந்தே செல்ல வேண்டியிருந்தது. கோர்ட்டில் மாலை வரையில் விலங்குடன் நின்று, கடைசியில் லாகூர் சென்டரல் ஜெயிலில் அடைக்கப்பட்டேன். அங்கு இடமில்லாமையால் வேறு ஜெயிலுக்குக் கொண்டுபோகப்பட்டேன். இப்படி இடம் விட்டு இடம் மாறி பலவித துன்பகளுக்காளாகி கடைசியாக ஜூன்மாதம் 6-ந்தேதி மாலையில் விசாரணையில்லாமலே பஞ்சாப் கவர்ன்மெண்டாரின் உத்திரவின்பேரில் என்னை விடுவித்தார்கள். துன்பப்படும் இதர சகோதரர்களுக்கு என்னால் கூடியவரையில் உதவி செய்யும்படி என்னை விடுவித்ததற்கு நான் கவர்ன்மெண்டாருக்கு மிகவும் நன்றியறிவுள்ளவனா யிருக்கிறேன்.

II

அமிர்த சரஸில் ஐகோர்ட்டு வக்கீல் மிஸ்டர் மாக்பூல் மகமுத் (Maq bool Mahmood) கொடுத்த வாக்குமூலம்: அவர் வயது 23.

நான் அமிர்தசரஸில் 1918-வருடமுதல் வக்கீல் வேலை பயின்று வருகிறேன். நான் காங்கிரஸ் மகாசபை வரவேற்பு கமிட்டியில் ஒரு மெம்பர். நான் ரவுலட் மசோதா சட்டமாகாதிருக்கவேண்டி யேற்பட்ட கிளர்ச்சியில் சம்பந்

தப்பட்டவனாயினும் சாத்விக எதிர்ப்பில் சோவில்லை. ஹிந்து மகம்மதிய ஐக்கியத்திற்கு மிகவும் பாடுபட்டேன்.

எப்பிரல் மாதம் 10-ந் தேதி கோர்ட்டில் நாங்கள் டாக்டர் கிச்சுலு, டாக்டர் சத்யபால் இருவரையும் தேசப் பிரஷ்டம் செய்துவிட்டதாயும் அதனால் கிளர்ச்சி யேற் பட்டு சிப்பாய்கள் ஜனங்களைச் சுட்டதாகவும் கேழ்விப்பட் டோம். சில வக்கீல்கள் உடனேகூடி ஜனங்களுக்கும் அதி காரிகளுக்கும் சச்சரவேற்படாது தங்களாலியன்றவரை யில் தடுக்கவெண்ணி என்னை டிப்டி கமிஷணரிடம் அனுப்பி னர். அவர் எங்கள் வேண்டுகோளுக் கிணங்கி உடனே பட்டணத்திற்குச்சென்று ஜனங்களைச் சாந்தப்படுத்தும் படி சொல்ல, நாங்கள் ஒரு மோட்டார் வண்டியில் சென் றோம். மாதன் கடையினருகாமையில் (Madan's Shop) ப்ளோமரையும் ராணுவச் சிப்பாய்களையும் கண்டோம். அச்சமயம் ஜனங்களிற்சிலர் எங்கள் வண்டியைச் சூழ்ந்து கொண்டு நிராயுதபாணிகளாய் கிச்சுலு சத்யபால் இவர் களைவிடும்படி டிப்டி கமிஷணரை யணுகிப் பிரார்த்திக்கப் போன ஜனங்களை காரணமின்றி சுட்டார்கள் என்று சொல்ல, நாங்கள் அவர்களைப் பொறுமையா யிருக்கும்படி கேட்டுக்கொண்டோம்.

ப்ளோமர் என்னை தந்தியாபீசுக்கும், சிலரை ரெயில் வேஸ்டேனுக்கும் போகும்படி சொல்ல நான் உடனே தந்தி ஆபீஸிற்குப்போக அங்கே பெரிய கூட்டத்தைக் கண்டேன். சிலர் தண்டங்கள் வைத்துக்கொண்டிருந்த னர். நான் அவர்களைப் பொறுமையுட னிருக்கும்படி வேண்டினேன். அப்பொழுது ரெயில்வே ஸ்டேஷனில் மறுபடியும் சுடப்படுகிறார்கள் என்று கேட்டதும் நான் போய்ப்பார்த்து வருவதாய்ச்சொல்லி ரெயில்வே ஸ்டேஷ னுக்கு ஓடினேன். அங்கே யாரும் சுடவில்லை. அங்கிருந்த

ஜனங்களையும் அழைத்துக்கொண்டு பார்க்குக்கு (Park) வந்துசேர்ந்தேன். தோடர்மால் (Todar Mal) என்னுடன் சேர்ந்ததும் நாங்கள் ஜனங்களை பொறுமையா யிருக்கும் படி கேட்டுக்கொண்டோம். அவர்கள் தங்களிற் சிலர் சுடுபட்டு கிடந்ததைப் பார்க்கும்போதெல்லாம் மனக் கொதிப்பை யடைந்தனர். ஆதலால் நான் அவர்களை ஜலி யன்வாலா தோட்டத்திற்குச் செல்லும்படி சொன்னதை அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அச்சமயம் தந்தி ஆபீஸ் பக்கத்திலிருந்து ஒரு குண்டு சுடப்பட்டது. மறு படியும் கிளற்சியேற்பட்டு மிகவும் பிரயாசைப்பட்டு சாந் தப்படுத்தினோம். தோடர்மாலும் நானும் ஜனங்களிற் பெரும்பாலரை யழைத்துக்கொண்டு ஹால்கேட்டிற்குள் ளழைத்துச் சென்றோம். அப்பொழுது யாரோ ஒருவர் ரெயில்வேபாலத்தில் ஏராளமான சிப்பாய்கள் வந்திறங் கியதாகவும் பட்டணத்தை முற்றுகைபோடப் போவ தாயும் சொல்ல, அனைவரும் ரெயில்வே பாலத்தைநோக்கி யோடினர். டிப்டி கமிஷணர் சிப்பாய்களுக் கிடையில் குதிரைமேலிருந்தார். கர்தபால் (Kardia! Singh Salaria) கீழ்பாலத்திலிருந்து ஓடிவந்து என்னுடன் சேர்ந்துகொண் டார். நானும் சலாரியாவும் துருப்புகளை அங்குவிட் டழைத்துச் செல்லும்படி பன்முறை கத்தினோம். கூட்டத் திற்சிலர் கட்டைகளையும் கற்களையும் எறிய உடனே சிப் பாய்களை சுட்டார்கள். ஜனங்கள் 20-அல்லது 25-பேர் கள் மாண்டும் காயம்பட்டும் கீழேவிழ திரும்பி ஓடத் துவக்கினார்கள்.

நான் உடனே சிப்பாய்களையணுகி காயம்பட்டோரை சிகிச்சைசெய்ய சமீபத்திலிருந்த ஆஸ்பத்திரிக்குப்போக உத்திரவு கேட்க, கூடாதென்று தடுத்தார்கள். ஆனால் சேமோர் (Seymore) மிகவும் வணக்கமாய்க் கேட்டுக்

கொள்ளவும், அனுமதி கொடுத்தார். டாக்டர் தணபதராய் தன் மனிதர்களுடன் வந்து சேர்ந்தார். நாங்கள் திரும்பி ரெயில்வே பாலம் செல்ல, மைல்ஸ் இற்விங் என்பவர் நானும் சலாரியாவும் கூட்டத்திற்குமுன் நிற்கும்பொழுது சுடும்படியானதைப்பற்றி துக்கித்தார்.

டிபுடி கமிஷணரால் கொடுக்கப்பட்ட குதிரைமீதேறி நாஷணல் பாங்கு (National Bank) ஐரோப்பியர்களின் நிலைமையை அறிய பட்டணம் சென்றேன். நான் போய்ப் பார்க்கவும் பாங்கு கட்டடம் எரிந்து கொண்டிருந்தது. பொருள்களனைத்தையும் கொள்ளையிட்டு மூன்று ஐரோப்பியர்களையும் கொலை செய்ததாகக் கேழ்விப்பட்டு டிபுடி கமிஷணரிடம் சொன்னேன். ஜனங்களைச் சுட்டது பெரிய பிழை. சுட்டபொழுது டிபுடி கமிஷணரும் இருந்தார். டிபுடி கமிஷணருக்கு நானும் சலாரியாவும் அமிர்தசரஸ் பாரிஸ்டர்களென்றும் ஜனங்களை சாந்தப்படுத்தி பட்டணத்திற்குத் திரும்பும்படி பிரயத்தனபடுவதும் தெரியும். அதிகாரிகள் கொஞ்சம் பொறுமையுடனிருந்து சுடாமலிருந்தால் நாங்கள் ஜனங்களை திருப்பியழைத்துச் சென்றிருப்போம். நாங்கள் சுடப்படாமல் தப்பியதே தெய்வாதீனம். ஜனங்கள் ஓட வாரம்பித்த பின்னும் சுட்டார்கள். அன்று அநேக கொடூரமான காக்ஷிகளைக்காண நேர்ந்தது. 16 அல்லது 17 வயதுள்ள ஒரு சிறுவன் சுடப்பட்டு குடல் வெளிவந்து கிடக்க நானும் டாக்டர் தணபட்ராயும் சலாரியாவும் சமீபத்திற் சென்றோம். அச்சிறுவன் மெதுவாக "நான் இறக்கப் போகிறேன். என் சகோதரர்களைக் கவனியுங்கள். ஹிந்து முசல்மானுக்கு ஜே!" என்று சொல்லி அடுத்த நிமிஷம் இறந்தான்.

எப்பிரல் 11-ந்தேதி காலையில், டிபுடி கமிஷணர் என்னையும் யாசின் என்பவரையும் தருவித்து பிணங்களை

ஊர் கோலத்துடன் கொண்டு போகக்கூடாதென்றும் ஒவ்வொரு பிணத்துடன் நான்கு பேர்களுக்குமேல் போகக்கூடாதென்றும் ஜனங்களுக்குச் சொல்லும்படி சொன்னார். நாங்கள் அம்மாதிரியே போய்ச்சொல்ல ஒருவரும் கேட்கவில்லை. நான் இன்னும் சிலருடன் மறுபடியும் டிபுடி கமிஷனரிடம் வந்து சங்கதியைச் சொல்ல அவர் அடங்காக் கோபங்கொண்டு சில கடுமையான வார்த்தைகள் சொல்ல நாங்கள் திரும்பி விட்டோம். அச்சமயம் அங்கிருந்த கர்னல் ஸ்மித் பட்டணத்தை பாம் (Bomb) போட்டு சமாதானப் படுத்தலாமென்று சொன்னார்.

எப்பிரல் மாதக் கடைசியில் ராபின்ஸன் ரௌலாண்ட்ஸ் இவர்களுடைய கொலை சம்மந்தமாகப் பிடிக்கப் பட்டிருக்கிற மனிதர்களை அவர்கள்தானென்று ரூபிப்பதற்கு என்னைத் தருவிக்க நான் போனேன். போலீஸாரிடத்தில் நான் முன்னதாகவே எனது வாக்குமூலத்தில் என்னால் ரூபிக்க முடியாதென்று எழுதியனுப்பி விட்டதாய்ச் சொல்ல, அதையே எடுத்துவந்து என்னைக் கிழிக்கும்படி கேட்டார்கள். என்னை பலவிதமாய் பயமுறுத்தியும் நான் அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கவில்லை. கடைசியாக என்னை விட்டு விட்டார்கள்.

நாஷணல் பாங்கிக் கொலை கேசில் என்னை மகாஷைராட்டோவுக்கு சாக்ஷியாகப் போட்டார். நான் சாக்ஷி சொல்லப் போகுமுன்பு, சுக்க சிங் (Sukha Siugh) கோர்ட்டிற்கு வெளியில் பலர் பிரதிவாதிக்கு சாக்ஷி சொல்ல வேண்டும்" என்று போதிக்க, நான் என் மனசாக்ஷிக்கு விரோதமாய் நடக்க மாட்டேனென்றும் நான் பார்த்தபடி சொல்வேனென்று பதிலளித்தேன். அதற்கு சுக்கசிங் இக்காலத்தில் மனசாக்ஷி யென்பதே யில்லையென்றும் அப்படிச்

சொல்லிக் கொண்டிருப்பவர்கள் தான் கஷ்டப்படுகிறார்களென்றும் சொன்னார். கடைசியாக என் வக்கீல் சன்னதைப் பிடுங்க ஏற்பாடு செய்வதாயும் நான் பல கஷ்டங்களுக்காளாக வேண்டிவருமென்றும் சொல்லி முடித்தார்.



III

அமிர்த சரஸில் வக்கீல் மிஸ்டர் மகம்மது அமீன் (Mahammad Amin) B. A., L. L. B. கொடுத்த வாக்கு மூலம் :



1918ஸ் என்னுடைய மனைவியும் என் சகோதரரின் மனைவியும் வியாதியால் பீடிக்கப்பட்டபொழுது ஈஸ்டன் (Mrs. Easdon) வந்து சிகிச்சை செய்தாள். அது முதல் அவ்வம்மையை நான் நன்கறிவேன். எனது மகன் மகம்மது அக்ராம் அந்த அம்மையை தன் தாயாரைப்போலவே பாவித்தான்.

ஏப்ரல் மாதம் 10ந் தேதி வழக்கப்படி நான் ஜில்லா கோர்ட்டில் ஒரு கேஸ் நடத்திக்கொண்டிருந்தேன். வீட்டிற்குத் திரும்புகையில் டாக்டர் கிச்சுலு சத்யபாலை விடும்படி கேட்க ஜனங்கள் டிபுடி கமிஷனரைப் பார்க்கப் போகையில் வழியில் சிப்பாய்கள் தடுத்து விட்டதாக அறிந்தேன். நான் ரெயில் பாலத்திற்குச் சமீபமாய் போகும்பொழுது சுடும் சத்தங்கேட்டு வேறொருவழியாய் வீட்டிற்குச் சென்றேன். என் வீட்டிற்குச் சமீபத்தில் டாக்டர் கிதர் நாத் வீட்டிற்கு நேரில் சில காயம்பட்ட மனிதர்களைக் கண்டேன். அதில் ஒருவன் 11 வயதுள்ள சிறுவன் அவனை கேட்டதில், அவன் பட்டாலா என்ற ஊரிலிருந்து அமிர்த சரஸிற்கு ஸ்ரீராம நவமி உத்சவத்திற்காக வந்திருப்பதாயும், ரெயில் பாலத்திற்குச் சமீபமாய் வரும்

பொழுது குண்டடி பட்டதாகவும் சொன்னான். அச் சிறு வனுக்கு குடிக்க கொஞ்சம் ஜலம் கொண்டு வந்து கொடுக் கும்படி என் மகனிடம் சொல்லி வீட்டிற்குள் என்னைக் காண வந்த சில நண்பர்களுடன் சென்றேன். அப்பொழுது என் மகன் அக்ராம் ஓடி வந்து ஈஸ்டன் அம்மை ஜனங்களை நிந்தித்ததால் அவளை வெளியிலிழுத்து சதுர் செய்யும்படி பலாத்கரிக்கப்போவதாகப் பேசிக்கொண் டிருக்கிறார்கள் என்று சொல்ல, நான் உடனே அவனை அவ் வம்மையிடம் சென்று பெஞ்சமின் (Benjamin) துரை மனைவியிருக்கு மறைக்குப் போகும்படி சொல்லச் சொன்னேன். இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு என் மகன் திரும்பிவந்து ஈஸ்டன் அம்மை ஆஸ்பத்திரியிலில்லை யென்று சொன்னான். அதற் குப் பிறகு அவன் ஆஸ்பத்திரிக்குச் செல்லவே யில்லை. என் மகன் $12\frac{3}{4}$ மணிக்கு பள்ளிக்கூடத்தி லிருந்ததற்கு பள்ளிக்கூட ரிஜிஸ்தரே அத்தாக்ஷி. நான் வீட்டிலிருந்த பொழுதுதான் அவன் திரும்பி வந்தான் ஆகையால் அவன் ஆஸ்பத்திரிக்கு ஜனக் கூட்டத்துடன் $2\frac{1}{2}$மணிக்கு போகவில்லை யென்பது நிச்சயம்.

ஏப்பிரல் மாதம் 13ந் தேதி ராம் பாக் (Ram Bagh) என்றவிடஞ் சென்று டிபுடி கமிஷனர் எழுதிய ரிபோர் ட்டை மொழிபெயர்த்துக் கொடுத்தேன். பிறகு அவ ரிடம் ஒரு பாஸ் (Pass) பெற்று வீட்டிற்குத் திரும்பி னேன். அன்று முதல் 20ந் தேதி வரையில் வெளியிற் செல்லவில்லை. 20ந் தேதி யன்று நான்கு போலீஸ் சேவ கர்கள் வந்து என்னையும் என் மகன் மகம்மது அக்ராம், என் சகோதரர் மகம்மது ஜமில், டாக்டர் காடநாத காமா முதலியவர்களையும் கொத்தவாலிக்கு (Police Station) அழைத்தேகினர். அங்கே டிபுடி சூபரின்டெண் டெண்டு சுகசிங் என்பவரைக் கண்டேன். காரணம்

சொல்லாமலே எங்களனைவரையும் ஜெயிலிலடைத்தனர். என் மகன் சுகசிங்கிடம், தான் ஈஸ்டன் அம்மைக்குதவி புரிய அனுப்பப்பட்டதாக ஒப்புக்கொண்டதே அவனுக்கு ஆபத்தை விளைவித்தது.

என்னை 30 பேர்களடங்கிய ஒருசிறு அறைக்கு அழைத்துச் செல்ல, அங்கு ஒவ்வொருவரும் தாகத்தால் தவித்துக்கொண்டு தங்கள் கைகளை வெளியில் நீட்டிக்கொண்டபடி நின்ற நிலைமையை பார்க்கச் சகிக்கவில்லை. நான் என் வேண்டுகோளின்படி வேறொரு அறையி லடைக்கப்பட்டேன். அதைவிடக் கேவலமான விடத்தை நான் முன் கண்டதேயில்லை. வீட்டிலிருந்து அன்று மாத்திரம் சாப்பாடு தருவித்துக் கொள்ள உத்திரவு கேட்க அதிகாரிகள் மறுத்துவிட்டனர். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவர் காமா (Gama) இருக்குமிடம் வந்து அவரை நோக்கி "நீர் ஏன் இந்த ஆபத்திற்காளாகுகிறீர்? உமக்கு விரோதமாயுள்ள நாலைந்து பேர்களைக் குறிப்பிடும் உம்மை சாக்ஷியாகப் போடுவோம்" என்று கேட்க அவர் தனக்கு ஒரு சத்துருவுமில்லையென்று சொல்லிவிட்டார். அவர் வெளியிற் சென்று திரும்பவும் காமாவிடம் வந்து "நான் சொல்வதைக் கேள்! காயம் (Qayam) என்றவரைக் குறிப்பிட்டுச் சொன்னால்போதும். மற்றவர்களைப்பற்றி உமக்கிஷ்டப்படி சொல்லும்." என்றார். இப்படிப் போய்ச் சாக்ஷி தயாரிப்பதைப் பார்த்து நடுங்கினோம்.

அன்றிரவை எப்படியோ கழித்தோம். மறுநாள் காலையில் கைவிலங்குடன் வெளியில் விடப்பட்டோம். மறுபடியும் அடையபட்டோம். கொஞ்ச நேரம் சென்றதும் எங்களை விலங்குடன் வண்டியிலேற்றி கோட்டைக்குக் கொண்டு போனார்கள். அங்கே நடுப்பகலில் சுற்றி சுற்றி

நடந்து வரும்படி உத்திரவேற்பட்டது. இக்காக்ஷியை ஐரோப்பியர்கள் கண்டு களித்தனர். பிறகு கோட்டையி லேயே அறைகளில் அடைக்கப்பட்டோம்.

36 மணி நேரமாக உணவு கிடையாது. படுப்பதற்கு படுக்கையொன்றும் கிடையாது. அந்த கோட்டை காப் டென் (Captain) எங்களைப் பார்க்க வந்தபொழுது கை விலங்குகளை எடுத்து விடும்படி உத்தரவளித்தார். மறு நாள் எங்களுக்கு வீட்டிலிருந்து சாப்பாடு உடை முதலி யன வரலாமென்று உத்திரவு பிறந்தது. அது வரையில் பாரிஸ்டர் பத்ருல் இஸ்லாம் ஆலிக்கான் (Badr-ul-Islam Alikhan) மிகவும் துன்பப் பட்டுக்கொண்டிருந்ததைக் கண்டு காரணம் வினவ, அவர் தான் கொஞ்சங்கூட பண மில்லாமல் தன் மனைவி மக்களை விட்டு வந்ததால் அவர்கள் கதியை நினைத்து வியாகூலத்தை யடைவதாய்ச் சொன் ஞர். ஆலிக்கானுடைய மனைவிக்கு ரூ 800 கொடுக்கும்படி நான் உடனே என் சகோதரிக்கு, ஒரு லிகிதம் எழுத அவரும் தன் மனைவிக்கொன்றெழுதி இரண்டையும் அனுப்பினோம். பணம் கொடுக்கப்பட்டதாக எனக்கு வந்த பதிலை அதிகாரிகள் எடுத்துக்கொண்டனர். ஆலிக்கா னுடைய மனைவி ஒரு ஐரோப்பிய ஸ்திரீ ஈஸ்டன் என்ற அம்மையைக் கொண்டே நான் குற்றவாளியல்லவென்று சொல்லும்படி என் நண்பர்கள் ஏற்பாடு செய்வதாகவும் அந்த லெட்டரில் எழுதப்பட்டிருந்தது. இதைக்கொண்டு நான் ஈஸ்டன் என்ற அம்மைக்கு லஞ்சம் கொடுக்க எத் தனித்ததாக கேசு கொண்டுவர போலீசார் முயன்றனர்.

மே மாதம் 12-ந் தேதியன்று எங்களை லாகூருக்கு அழைத்துச் சென்றனர். 52 மனிதர்களையும் கைவிலங் கிட்டு ஒரே வரிசையாகச் சங்கலியால் கட்டி சப் இன்ஸ் பெக்டர் குதிரை மீதேறி வாய்க்கு வந்தபடி யெல்லாம்

எங்களை நிந்தித்துக்கொண்டு முன்னால் போக நாங்கள் பின்னால் நடந்து சென்றோம். லாகூரில் கேசு விசாரணையாகும் வரையில் சென்டரல் ஜெயிலிலடைக்கப்பட்டோம். ராணுவச் சட்ட கோர்ட்டில் 26, 27-ந்தேதி இந்த இரண்டு நாளும் விசாரணை நடந்து முடிவில் என்னையும் என் சகோதரராகிய ஜமீலையும் விடுவித்தார்கள். என் மகன் மரண தண்டனை விதிக்கப்பட்டான். நான் வீட்டிற்கு வந்ததும் விசாரித்ததில் இவையனைத்தும் ஒரு சப்ரஸியும் (Chaprasi) ஒரு தலைமை போலீஸ் சேவகனான மகம்மது ஷெரிப்பும் தயார் செய்த அபாண்டமான பொய்சாக்ஷிகளினாலென்றுணர்ந்தேன். மகம்மது ஷெரிப்பு எனக்கும் ஈஸ்டன் அம்மைக்கும் வெகுநாளைப் பகையென்றும் தான் அவ்வம்மையைக் காப்பாற்றியதாகவும் சொன்னான். சாக்ஷிகளாகப் பேசியவரனைவரும் முதலில் கைது செய்யப்பட்டு பின்பு பொய் சாக்ஷி சொல்வதாக ஒப்புக்கொண்டபின் விடப்பட்டவர்கள். என் மகனுக்கு விதிக்கப்பட்ட மரணதண்டனை கடைசியாக 5 வருஷம் கடுங்காவலென்று மாற்றப்பட்டது.

நான் விடுவிக்கப்பட்டேனாயினும் இப்பொழுது முற்றிலும் அழிந்துவிட்டேன். ரூ 5000த்திற்கு மேல் கடன் ஏற்பட்டிருக்கிறது அதைவிட இராப்பகலாய் என்னுடைய அருமையான ஒரே புதல்வனைக் குறித்து வியாகூலப்படுகிறேன்.



## IV

அமிர்தசரஸ் முனிசிபல் பெண்ணாஸ்பத்திரியில், சப் அஸிஸ்டெண்டு ஸர்ஜன் (Sub Assisstant Surgeon) நெல்லி பெஞ்சமின் (Mrs. Nelly Benjamin) என்ற அம்மை கொடுத்த வாக்குமூலம் :

கடந்த ஏப்பிரல் மாதம் நான் ஆஸ்பத்திரிக்குப் பக்கத்தில் குடியிருந்தேன். 10ந் தேதி சுமார் 12 மணிக்கு ஆஸ்பத்திரியின் மேலேயிருந்து ஹால்கேட்டை நோக்கி ஒரு பெருங்கூட்டம் வந்ததைக் கண்டேன். ஒருவர் கையிலும் கம்புகள் காணப்படவில்லை. கொஞ்ச நேரத்திற்கெல்லாம் சில காயம்பட்ட மனிதர்களை தெருவழியாகக் கொண்டுவந்து டாக்டர் காதர் நாத் வீட்டிற்கெதிரில் கடத்தினர். டாக்டர் காதர் நாத் அவர்களுக்குச் சிகிச்சை செய்துகொண்டிருக்கையில் நானும் ஈஸ்டனும் மேலிருந்து கவனித்துக்கொண்டிருந்தோம். ஈஸ்டன் அம்மை என்ன நடந்ததென்று விசாரிக்க இங்கிலீஷ்காரர் இவர்களை சுட்டுவிட்டார்கள் என்றொருவர் பதிலளித்தார். அதற்கு அவள் இவர்களுக்கு நன்றாய் வேண்டியதுதான் என்று சொல்லி என்னை நோக்கி "அதோபார் அந்த முட்டாளை! அந்த மனிதன் காலை வெட்டவல்ல வேண்டும். அவன் தன்னுயுள் முழுவதும் முடவனாகவே யிருக்கவேண்டும்" என்று சொன்னாள். "முட்டாள்" என்று சொன்னது காதர் நாத்தைக் குறித்துதான். உடனே லூயி (Lewis) என்பவர், ஜனங்கள் கோபங் கொண்டிருப்பதால் எங்களை உள்ளே செல்லும்படி சொல்ல, அப்படியே சென்றுவிட்டோம். அச்சமயமம் ஒருவரும் கழிகம்புகள் வைத்துக் கொண்டிருக்கவில்லை.

அரைமணிநேரம் கழித்து நான் கம்பவுண்டர் அறையிலிருக்கையில் சிலர் கம்பவுண்டரை நிந்தித்து ஈஸ்டனிருக்குமிட மெதுவென்று வினவினார்கள். நான் ஈஸ்டனை என்வீட்டிற்கு மறுபக்கத்தில் ஒரு அறையில் ஒளிந்து கொள்ளும்படி சொல்ல அவளும் அப்படியே செய்தாள். சிலர் கதவை யுடைக்க முயன்றனர். ஒருவன் ஏறிக்குதித்து கதவைத்திறக்கவும் அனைவரும் ஓடி

வந்து ஈஸ்டனிருக்குமிடம் சொல்லாவிட்டால் என்னைக் கொன்று விடுவதாய்ச் சொன்னார்கள். நான் அவள் வெளியே போய்விட்டதாகச் சொன்னதை நம்பாமல் எங்கும் தேடினார்கள். ஆனால் அவள் அகப்படவில்லை. உள்ளே வந்த மனிதர்கள் கழிகள் வைத்திருந்தனர்.

வினா—ஜனங்கள் காயம்பட்டோரை தூக்கிக்கொண்டு டாக்டர் காதர்நாத் வீட்டிற் கெதிரில் வந்தபொழுது ஈஸ்டன் அவர்களைப்பார்த்து நகைத்ததுண்டா?

விடை—நான் அதைப்பார்க்கவில்லை. ஆனால் எங்களுடன் கூட மேலேயிருந்த தாதிகளிற் (Nurses) சிலர் அவள் நகைத்ததாகச் சொன்னார்கள். ஒரு சமயம் நான் என் குழந்தைகளைப் பார்ப்பதற்காக என் அறைக்குச் சென்றபொழுது அவள் நகைத்திருக்கலாம்.

நான் அனைவரும் சென்றபின் இந்தியஸ்த்ரீயுடுக்கும் ஆடைகளைத்தருவித்து ஈஸ்டனை உடுக்கும்படிசெய்து சமீபத்திலிருந்த மகம்மது ஷெரிப்பு வீட்டிற்கனுப்பினேன்.

சிலநாட்கள் சென்றதும், என்னை சொத்தவாலிக்கு இரண்டுதடவை தருவித்தனர். கூட்டத்தில் மகம்மது அமீனைக் கண்டதாகச் சொல்லும்படி ப்ளோமர் சொல்ல நான் மறுத்துவிட்டேன். என்னை ஜெயிலுக் கனுப்புவதாக பயங்காட்டினர். நான் பொய்சாக்ஷிசொல்ல இணங்காமலிருக்க அவர் ஈஸ்டன் சொன்ன கதையை ஆமோதித்து சாக்ஷி சொன்னால் சர்க்காரிடமிருந்து எனக்குத் தகுந்த வெகுமான மளிப்பதாய் ஆசைவார்த்தைகள் கூறினார். நான் மறுபடியும் மறுத்துவிட்டேன்.



## V

அமிர்தசரஸில் பாரிஸ்டர் மகம்மது சாடிக் (Mohammad Sadiq) கொடுத்த வாக்குமூலம்:

என்னை எப்ரல் மாதம் 11-ந் தேதி நிகழ்ந்த சமாசாரங்களைப்பற்றிக் கேட்டமையால் அதைப்பற்றி யான் சொல்லுகிறேன்.

அன்றையதினம் என் சகோதரர் பாரிஸ்டர் ஸடிக் ஹாசன் என்பவர் ஹால் கேட்டிற்குள் ஒரு பெரிய கூட்டத்திற்கு டிபுடி கமிஷணரின் உத்திரவைப் படித்தார். அவ்வுத்திரவு என்னவெனில், ஒவ்வொரு பிணத்துடன் மயானத்திற்கு 8-பேர்கள்தான் போகலாமென்பதுதான். இது ஜனங்களுக்கு திருப்தியைக் கொடுக்கவில்லை. அவர்கள் ஊர்கோலத்துடன் கூட்டமாகச் செல்லவேண்டுமென்று அபிப்பிராயப்பட்டனர். நானும் இன்னும் நால்வரும் ரெயில்வேஸ்டேஷனுக்குச் சென்றோம். அங்கே அதிகாரிகள் பலரிருந்தார்கள். யாஸீன், மாக்பூல் என்பவர்கள் முன்னதாகவே அங்குசென்றிருந்தனர். நான் அவர்களைக் கண்டு பேசியதில் அதிகாரிகள் போட்ட உத்திரவை மாற்றுவதில்லையென்று பிடிவாதமா யிருப்பதா யறிந்தேன். நாங்கள் ஐரோப்பியர்களையணுகி பட்டணத்தில் அப்பொழுதிருந்த நிலைமையைப்பற்றிச் சொன்னோம். அப்படிப் பேசியதில், சில ஐரோப்பியர்கள் கொலைசெய்யப்பட்டதால் அப்பழிக்கு பழிவாங்கவேண்டுமென்றும் ஜனங்கள் உத்திரவைமீறி நடப்பதா யிருந்தால் பட்டணத்தை பீரங்கியால் சுடவேண்டுமென்றும் அபிப்பிராயப்படுவதாயு மறிந்தேன். பட்டணத்தில் குற்றமற்ற பெண் பிள்ளைகள் பலரிருப்பதால் அம்மாதிரி செய்தல் கொடியதென்று நான் அவர்களுக்கு எடுத்துக் காட்டினேன். கர்னல் ஸ்மித்தும் ரெவரண்டு மெக்கன்ஸியும் கடுமையான செயல்களை யனுஷ்டிப்பதில் ஒரே பிடிவாதமாயிருந்தனர். ஆனால் வாத்தன் (Wathan) என்பவர் என்னுடன் ஒப்புக் கொண்டார். நான் டிபுடி கமிஷணரிடம் "ஜனங்கள் ஒரு

வித கெட்ட எண்ணத்துடனுமில்லை. இறந்துபோனவர்களை மயானத்திற்குக் கொண்டுபோய் கிரியைகளை கிரமப் படி முடித்து தகனம் செய்து திரும்பவேண்டு மென்றதைத் தவிர்த்து வேறில்லை. இப்படிச் செய்வதில் அனைவரும் தங்களுயிரிழக்கவேண்டி நேரிடினும் சித்தமா யிருக்கிறார்கள்" என்று சொன்னேன். வெகுநேரம் வாக்குவாதம் நடந்தபின் மேஜர் மாக்டொனல்ட் (Major Mc Donald) என்னுடனும் டிபுடி கமிஷனருடனும் ஒப்புக்கொண்டு அனுமதி கொடுத்தார். முதலில் உத்திரவில் 2000-ஜனங்களுக்குமேல் போகக்கூடாதென்று எழுதியிருந்தாலும், நேரில் எவ்வளவுபேர்கள் வேண்டுமானாலும் போகலாமென்றும், ஆனால் 2-மணிக்குள் திரும்பிவர வேண்டுமென்றும் டிபுடி கமிஷனர் அனுமதியளித்தார். மைல்ஸ் இர்விங் என்பவர் கொடுத்த உத்திரவுகள் கீழே வரையப்பட்டிருக்கின்றன.

(A)

துருப்புகள் அமிர்தசரஸில் அமைதி யேற்படுத்த எல்லாவிதமான மார்க்கங்களையு மனுஷ்டிக்கலாம். ஜனங்கள் கூட்டங்கூடவும் ஊர்கோலமாய்ச் செல்லவும் அனுமதி கொடுக்க முடியாது. அப்படி கூடுபவர்கள் சுடப்படுவார்கள். ஊரைவிட்டு நான்குபேர்களுக்குமேல் போகக்கண்டால் சுடப்படும். இறந்துபோனவர்களைத் தகனம் செய்யவோ அல்லது புதைக்கவோ ஒவ்வொன்றுடனும் 8-பேர்களுக்குமேல் போகக்கூடாது. ஒவ்வொன்றிற்கும் இடையில் 15-நிமிஷங்களாகவேண்டும்.

(கையொப்பம்) மைல்ஸ் இர்விங்

டி. ஸி. (D. C.)

11. 4. 19.

(B)

ஜனங்கள் பிணங்களைப் புதைப்பதற்கு 2000-பேர்கள் வரையில் கூடிப்போகலாம். ஆனால் பின்சொல்லும் விஷயங்களுக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டும்.

(1) சுல்தான்விண்ட் (Sultan wind) சட்டிவிண்ட் (Chati wind) இந்த இரு கேட்டுகள் வழியாகத்தான் செல்லவேண்டும்.
(2) எல்லாம் 2-மணியோடு முடிவடையவேண்டும்.
(3) 2-மணிக்கு கொம்பு (Bugle) கொண்டு எச்சரிக்கை கொடுக்கப்படும்.
(4) 15-நிமிஷங்கள் சென்றதும் சுடப்படும்.
(5) தடிகள் கொண்டுபோகக் கூடாது.

(கையொப்பம்) மைல்ஸ் இர்விங்
11. 4. 19.



VI

அமிர்த சரஸில் வியாபாரி சேத்குல் மகமத் (Sethgul Mahammad) என்பவர் கொடுத்த வாக்குமூலம்.



வினு—உமக்கு ஹான்ஸ் ராஜ் என்பவரைத் தெரியுமா ?

விடை—தெரியும்.

வினு—எவ்வளவு நாளாகத் தெரியும் ?

விடை—சென்ற நாலைந்து வருஷங்களாகத் தெரியும். ஆனால் ஜலியன்வாலாவில் ஜனங்களைச் சுட்டதன் பிறகு நான் அவரைக் காணவில்லை.

வினு—சென்ற நாலைந்து வருஷங்களாக அவர் எங்காவது வேலையிலிருந்தாரென்று உம்மால் சொல்லக்கூடுமா ?

விடை—சொல்லக்கூடும். அவர் கொஞ்சகாலம் யூனியன் ஆபீஸில் குமஸ்தாவாக விருந்தார். அவர் ரெயில்வே யில் டிக்கட்டு பரிக்ஷகராகவு மிருந்தார். இந்த விரண்டு வேலைகளினின்றும் மோசடிக்காக நீக்கப் பட்டார். அதன் பிறகு அவர் வெகு காலம் வேலை யில்லாமலே யிருந்தார்.

விஞ—அப்படி வேலையில்லாமலிருந்த காலத்தில் எப்படி அவர் ஜீவனம் செய்தாரென்று உமக்குத் தெரியுமா?

விடை—அதைப்பற்றி என்னால் நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ஆயினும் என் அபிப்பிராயத்தைக் கேட் டால் சொல்லுகிறேன்.

விஞ—உமது அபிப்பிராய மென்ன?

விடை—ஹான்ஸ் ராஜின் தாயாரும் மனைவியும் கெட்ட நடத்தையுள்ளவர்கள். அவர்களைக் கொண்டுதான் ஜீவனம் நடப்பதாய் நான் நினைக்கிறேன். அவர் போலீசாரிடமிருந்தும் பணம் பெறுவதாக எனக் குச் சந்தேகமுண்டு. ஜலியன் வாலாவில் நடந்த விஷயத்தால் எனக்கு அது நன்ருகப்பட்டது.

விஞ—எப்பிரல் 6–ந் தேதி நடந்த ஹார்தால் ஜனங் களால் சுயமாய் அனுஷ்டிக்கப்பட்டதா அல்லது யாருடைய தூண்டுகோளால் ஏற்பட்டதோ?

விடை—ஜனங்கள் தாமாகவே செய்த விஷயந்தான். ஹான்ஸ் ராஜி அவர்களை வேலை நிறுத்தம் செய்ய வேண்டுமென்று கேட்டாராயினும் அம்மாதிரி வேண்டுகோளுக்கு அவசியமேற்படவேயில்லை யென் பது என் அபிப்பிராயம்.

விஞ—எப்பிரல் மீ 9-ந் தேதி நடந்த ஸ்ரீராம நவமி ஊர் கோலத்துடன் நீர் சென்றீரா?

விடை—ஆம். நான் குலாம் ஜிலானி என்பவருடனிருந்தேன்.

விஞ—ஹான்ஸ் ராஜ் அதிலிருந்தாரா ?

விடை—இருந்தார்.

விஞ—டாக்டர் சிச்சுலு சத்தியபால் இவர்களுடைய தேசப்பிரஷ்டத்தைப்பற்றி எப்பொழுது கேழ்வியுற்றீர் ?

விடை—ஏப்ரல் மீ 10-ந் தேதி சுமார் 12 மணிக்கு ஒரு பெரிய கூட்டம் ஹால்கேட்டை நோக்கிச் சென்றபொழுது.

விஞ—நீர் அந்தக் கூட்டத்தில் சேர்ந்து கொண்டீரா ?

விடை—ஆம். நானும் கூடச்சென்றேன்.

விஞ—நீர் அக் கூட்டத்தை முதலில் பார்த்தபொழுது அதன் நிலைமையெப்படி யிருந்தது ?

விடை—மிகவும் அமைதியாகவே யிருந்தது. ஜனங்கள் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டவர்களை விடும்படி டிபுடி கமிஷணரைப் பிரார்த்திப்பதற்காகப் போவதாகச் சொன்னார்கள். ஆதலால் நானும் சென்றேன்.

விஞ—சரி, அப்பொழுது நடந்த சங்கதிகளைச் சுருக்கமாகச்சொல்லும்.

விடை—நான் கூட்டத்துடன் ரெயில்வே பாலம் வரையில் சென்றேன். நான் கூட்டத்தில் கடைசியாகத்தான் சென்றேன். ஆதலால் அங்கு நடந்தனவற்றை நன்றாய் பார்க்கவாவது அல்லது ஜனங்களுக்கும் அதிகாரிகளுக்கும் நடந்ததைக் கேழ்க்கவாவது கூடவில்லை. சுட்டது நன்றாய்க் கேட்டது. உடனே நானும் இன்னும் சிலரும் உருல் பெஜாரை நோக்கி போடினோம். நான் பின்பு என்னுடைய பைதாக்கில் போய்த்தங்கினேன். அங்கிருந்து நான்கு காயம்

பட்ட மனிதர்களைத் தூக்கிக்கொண்டு டாக்டர் காதர் நாத் வீட்டிற்குப்போனதைக் கண்டேன்.

வினா—உம்முடைய பைதாக்கிலிருந்து டாக்டர் காதர் நாத் வீடு நன்றாய்ப்பார்க்கக் கூடுமா?

விடை—பார்க்கமுடியாது. ஆயினும் ஜனங்கள் காதர் நாத் வீட்டிற்குக் கொண்டுபோர்வதாகச் சொல்லக்கேட்டேன்.

வினா—நீர் அந்தக் காலங்களில் மீட்டிங்குகளுக்குப் போவதுண்டா?

விடை—உண்டு. அனேக மீட்டிங்குகளுக்குப் போயிருக்கிறேன்.

வினா—அந்த மீட்டிங்குகளில் ஹான்ஸ் ராஜ் என்பவரைப் பார்த்திருக்கிறீரா?

விடை—ஆம். அவர் அநேக மீட்டிங்குகளிற் பிரசங்கம் செய்திருக்கிறார்.

வினா—நீர் ஏப்பிரல் மாதம 12ந் தேதி மாலையில் நடந்த மீட்டிங்கிற்கு போனீரா?

விடை—ஆம். போனேன்.

வினா—அதில் யார் பேசினார்?

விடை—ஹான்ஸ் ராஜும் இன்னும் மற்றவர்களும்.

வினா—13ந் தேதி ஜலியன் வாலாவில் நடந்த மீட்டிங்கிற்குச் சென்றீரா?

விடை—ஆம் சென்றேன்.

வினா—ஜலியன்வாலா பாக்கில் மீட்டங் நடைபெறுவதைப் பற்றி உமக்கு முதலில் எப்பொழுது தெரியும்.

விடை—12ந் தேதி நடந்த மீட்டிங்கில் 13ந் தேதி ஜலியன் வாலா பாக்கில் லாலா கன்னியாலாவின் அக்கிராசனாதிபதியின்கீழ் ஒரு மீட்டிங் நடைபெறுமென்று ஹான்ஸ் ராஜ் சொன்னார். ஜனங்களுக்கு மீட்டிங்

கைப் பற்றி பறையடித்துச் சொல்லப்படுமென்றும், அங்கு வந்தவரனைவரும் தங்கள் சிநேகிதர்களுக்குச் சொல்ல வேண்டுமென்றும் சொன்னார்.

வினு—13-ம் தேதி நடந்த மீட்டிங்கிற்கு முன் நீர் எப்பொழுதாவது ஹான்ஸ் ராஜ் போலீசாருடன் சேர்ந்திருந்ததைப் பார்த்திருக்கிறீரா?

விடை—ஆம். ஒரு சீக் ஜாதி சப் இன்ஸ்பெக்டருடன் அனேக தடவைகளிற் பார்த்திருக்கிறேன். அவர் பெயர் எனக்குத் தெரியவில்லை. ஹான்ஸ் ராஜ் அவருடன் ரொம்ப சிநேகமாய்த் தானிருந்தார். அடிக்கடி அவர்களிருவரையும் கடைத்தெருவில் பார்த்திருக்கிறேன்.

வினு—அந்த சப் இன்ஸ்பெக்டர் ஹான்ஸ் ராஜ் வீட்டிற்கு வருவதைப் பார்த்திருக்கிறீரா?

விடை—நான் பார்க்கவில்லை. ஆனால் ஹான்ஸ் ராஜினுடைய மற்ற நண்பர்களிடமிருந்து இந்த சீக்கர் ஹான்ஸ் ராஜின் சிநேகிதரென்று தெரிந்து கொண்டேன்.

வினு—13-ந் தேதிக்குப் பின்பு எவ்வளவு நாட்கள் நீர் ஹான்ஸ் ராஜை இந்த சிக்கருடன் பார்த்தீர்?

விடை—சுமார் இரண்டுமாத காலமிருக்கும்.

வினு—ஹான்ஸ் ராஜினுடைய நண்பர்களை இந்த சிக்கரைபபற்றி நீர் விசாரிக்கவேண்டிய காரணமென்ன?

விடை—ஹான்ஸ் ராஜ் தன் சிநேகிதர்களுடன் என்னுடைய கடைக்கு வருவதுண்டு. பிறகு இந்த சிக்கரும் ஹான்ஸ் ராஜுடன் என் கடைக்கு வரவே நான் அவரைப்பற்றி விசாரித்தேன்.

வினு—அவரைப்பற்றி என்ன சொன்னார்கள்?

விடை—அவர்கள் நான் கேட்டவுடன் புன்னகைகொண்டு

பின்பு அவர்களிருவரும் மிகவும் சிநேகிதர்கள் என் றுரைத்தனர்.

வினா—13-ந் தேதி ஜலியன் வாலா பாக்கிற்கு எத்தனை மணிக்குச் சென்றீர் ?

விடை—சுமார் 2 மணிக்கு ஹான்ஸ் ராஜுடனும் இன் னும் சில சிநேகிதர்களுடனும் சென்றேன். மீட்டிங் கிற்கு ஏற்பாடு செய்வதற்காக முன்னதாகவே எங் களை யழைத்துச் சென்றார்.

வினா—நீங்கள் அங்கே சென்றதும் பிளாட்பாரம் (மேடை) முதலியன ஏற்பாடு செய்தது யார் ?

விடை—ஹான்ஸ் ராஜ். நாங்கள் அவருக்குகூட உதவி செய்தோம்.

வினா—நீங்கள் ஏற்பாடு செய்துகொண்டிருக்கையில் அங்கே போலீசார் யாரையாவது பார்த்தீர்களா ?

விடை—பார்த்தோம். இரண்டு C. I. D. ஆபீசர் (இரக சியப் போலீஸ்)களைப் பார்த்தோம். அவர்கள் பெயர் தெரியாது; ஒருவர் மகம்மதியர்; இன்னொரு வர் சிக்கரல்ல, வேறொருவர்.

வினா—உமக்கு இது எப்படி ஞாபகமிருக்கிறது. மறக்காம லிருக்கும்படியான விஷயம் ஏதாவது நடந்ததா ?

விடை—நடந்தது. அந்த போலீசார்கள் ஹான்ஸ் ராஜைத் தனியாக அழைத்துச் சென்று ஏதோ பேசிக்கொண்டிருந்தனர்.

வினா—அவர்கள் என்ன சொன்னார்களென்று உமக்கு காது கேட்டதா ?

விடை—கேட்கவில்லை.

வினா—சிப்பாய்கள் வருவதற்கு முன் நீங்களனைவரும் அங்கேயே யிருந்தீர்களா ?

விடை—இல்லை. கொஞ்ச நேரங்கழித்து நான் நமாஸ் (Prayer) பழகுவதற்காக மசூதிக்குச் சென்றேன்.

வி—மறுபடியும் தோட்டத்திற்கு வந்தீரா ?

விடை—சுமார் 5 மணிக்குத் திரும்பி வந்தேன்.

வி—நீர்வந்தபிறகு எப்பொழுது சிப்பாய்கள் வரக்கண்டீர் ?

விடை—நான் பிளாட்பாரத்தினருகில் வந்தவுடன் அவர்கள் பெரிய கேட்டின் வழியாக வருவதைக் கண்டேன்.

வி—பிறகு என்ன நடந்தது ?

விடை—கீழே உட்கார்ந்திருந்த ஜனங்கள் உடனே எழுந்தோடத்துவக்கினர். ஹான்ஸ் ராஜ் "ஓட வேண்டாம். பயப்படாமல் உட்காருங்கள். கவர்ன்மெண்டார் ஒருக்காலும் சுடமாட்டார்கள்" என்று கத்தினார். சிலர் ஓடிவிட்டனர். ஆனால் பெரும்பான்மையோர் மறுபடியும் உட்கார்ந்து கொண்டனர். நான் ஒரு நிமிஷம் யோசனை பண்ணினேன். பின்பு ஓடும்பொழுதே சுடுவதைக் கேட்டேன். அடிபட்டுக் கீழே விழுவதையும் பார்த்தேன். ஏதோ தெய்வாதீனமாய் நான் தப்பினேன்.

வி—தோட்டத்திலிருந்து எந்த வழியாய் நீர் ஓடிப்போனீர்.

விடை—கிணற்றிற்குச் சமீபத்திலிருந்த சுவர் ஏறிக் குதித்தோடினேன். நேரில் வீட்டிற்குச் சென்றேன்.

வி—மறுபடியும் ஹான்ஸ் ராஜைப் பார்த்தீரா ?

விடை—மறுநாள் காலை 8 மணிக்கு என் கடைக்கு வந்தார்.

வி—அவர் உம்மிடம் ஏதாவது சொன்னாரா ?

விடை—போலீசார் தன்னைப் பின்பற்றி வருவதாயும் தன்னைக் கைது செய்யப்போவதாயும் சொன்னார். என்னையும் பிடிக்கப் போவதாகவும் நான் ஜாக்கிரதையா யிருக்க வேண்டுமென்றும் சொன்னார்.

வினா—அதற்கு நீர் என்ன பதில் சொன்னீர்.

விடை—நான் ஒரு குற்றமும் செய்யவில்லை யாதலால் எனக்குப் போலீசாரிடம் பயங்கிடையாதென்று சொன்னேன்.

வினா—ஹான்ஸ் ராஜைப் போலீசார் பிடித்தார்களா? உமக்குத் தெரியுமா ?

விடை—ஆம். அவரைக் கைது செய்து விட்டார்கள். என்றைக்கென்று சொல்ல முடியாது. அவரைக் கொத்தவாலியில் நான் கண்டேன்.

வினா—உம்மையும் கைது செய்தாரா ?

விடை—ஆம். ஏப்ரல் மீ 20-ந் தேதி நான் ஹால் பெஜாரில் நமாஸ் பழகிக்கொண்டிருக்கும் பொழுது என்னைப் பிடித்துக்கொண்டார்கள். கொத்த வாலியில் என்னைப் பத்து நாட்கள் அடைதது வைத்திருந்தார்கள்.

வினா—அந்த பத்து நாட்களில் நடந்தனவைகளை சுருக்கமாய்ச் சொல்லும்.

விடை—என்னை பொய் சாக்ஷி சொல்லுமபடி மிகவும் கொடுமையாய் நடத்தினார்கள்.

வினா—நடந்தபடி சொல்லும்.

விடை—கொத்தவாலிக்குப் போய்ச்சேர்ந்ததும், C. I. D. ஆபீஸர் ஜோவஹர்லால் என்பவர் என் தாடியைப் பிடித்துக்கொண்டு தவடையில் கொடுத்த அடிகளால் நான் மயங்கி விழுந்தேன்.

வினா—திடீரென்று உம்மை தவடையிலடிப்பானேன் ?

விடை—எல்லாவற்றையும் சொல்லுகிறேன். கேளுங்கள். முதன் முதல் என்னை அடித்தனர். பிறகு டாக்டர் கிச்சுலுவும் சத்தியபாலும் என்னை ஏப்பிரல் மாதம் 1-ந் தேதி ஹர்த்தாலுக்கு ஏற்பாடு செய்யும்படி தூண்டினதாகவும், இங்கிலீஷ்காரர்களை குண்டாலடித்துத் துரத்திவிடுவதாக என்னிடம் சொன்னதாகவும் சொல்லும்படி கேட்க, நான் மறுத்துவிட்டேன். உடனே ஜோவஹரிலால் என்னைச் சரிப்படுத்தும்படி தன் பரிவாரங்களுக்குச் சொல்ல, என்னை வேறிடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். போலீஸ் சேவகர்கள் ஜோவஹரிலால் சொன்னபடி கேட்கும்படி புத்திசொன்னார்கள். நான் மறுகளித்தேன். உடனே என்னைப்பிடித்து என்கையை கட்டில் காலின்கீழ்வைத்து கட்டில்மேலே பலர் உட்கார்ந்துகொண்டார். வலிதாங்காமல் சொன்னபடி கேட்பதாகச் சொன்னேன். என்னை ஜோவஹரிலாவிடம் அழைத்துச் சென்றனர். அவர் என்னைக் கேட்டதும் நான் கிச்சுலு சத்தியபால் இவர்களை பொய் சாக்ஷி சொல்லி மாட்டி வைக்கமாட்டேன் என்று சொன்னேன்.

வினா—பிறகு என்ன நடந்தது ?

விடை—என்னை ஒரு அறையில் பூட்டிவைத்தார்கள். இரண்டு மூன்று நாளைக்கு பிரம்புகொண்டும் கையாலும் அடித்தார்கள். நான் பொய் சாக்ஷி சொல்லமாட்டேனென்றேன். என்னைக் குற்றவாளியாய்ச் சேர்த்து தூக்கில் மாட்டும்படி செய்வதாய் பயங்காட்டினர். 6-வது தினமும் பச்சாத்தாபமின்றி என்னை அடித்தார்கள். காலைமுதல் மாலைவரையில் விடாதடித்தனர். முடிவில் மறுபடிடிம் கட்டில் காலின்

கீழ் என் கையைவைத்து ஹிம்சிக்கவும் நான் சொன்ன படி கேட்பதாக ஒப்புக்கொண்டேன்.

வினு—பிறகு நடந்ததென்ன ?

விடை—ஜோவஹரிலாவின் அறைக்குக் கொண்டு போகவும் நான் அவரை என்ன சொல்லவேண்டுமோ அதை எழுதச் சொன்னேன். அவர் எழுதினுர். அதன்படி சொல்வதாக ஒப்புக்கொண்டேன். இரண்டு மூன்று நாட்கள் கழித்து என்னை அக இப்பிராஹிம் என்ற மாஜிஸ்ட்ரேட்டிடம் அழைத்துச்செல்ல, அவர் முன்னிலையிலும் அதையே சொன்னேன்.

வினு—கொத்தவாலியில் நீர் ஹான்ஸ் ராஜைக் கண்டீரா ?

விடை—கண்டேன். ஜோவஹரிலாவிடத்தில் பொய்சாக்ஷி சொல்வதாக ஒப்புக்கொள்வதற்கு முந்தி கண்டேன்.

வினு—அவர் உம்மிடத்தில் ஏதாவது சொன்னுரா ?

விடை—போலீசார் சொற்படி கேட்டு நடந்துகொள்ளும் படி புத்தி புகட்டினுர். பலவிதமாக என்னை தூண்டிப்பார்த்தார். நான் அவரிடத்தில் இறந்துபோக வேண்டி வந்தாலும் பொய்சொல்ல முடியாதென்றேன்.

வினு—நீர் ஹான்ஸ்ராஜை எந்த நிலைமையில் பார்த்தீர் ?

விடை—மிகவும் சந்தோஷமாகவும் சௌக்கிய மாகவுமிருந்தார். என்னைப் போலீசார் பல விதமாய் வதைத்த பொழுது நகைத்தார்.

வினு—மாஜிஸ்ட்ரேட்டிடம் நீர் வாக்குமூலங் கொடுத்த பின் உம்மை விட்டுவிட்டார்களா ?

விடை—ஒவ்வொருநாளும் யான் கொத்தவாலியில் வந்து ஆஜராகவேண்டுமென்ற கட்டளையுடன் விட்டார்கள். அதன்படி யான் தினம் சென்று வந்தேன். சில நாட்களில் மணிக்கணக்காய் காக்கும்படி நேர்ந்தது.

வினு—இப்படி எவ்வளவு நாட்கள் போனீர் ?

விடை—ஜூன் மீ 9-தேதி வரையில். அன்று என்னை போலீஸ் பந்தோபஸ்துடன் லாகூருக் கழைத்துச் சென்றனர்.

வினு—லாகூரில் எங்கு தங்கினீர் ?

விடை—என்னை லாலா ஜேவா ஹரிலாவின் வீட்டிற் கழைத்துச் சென்றனர். அவர் என்னை தன்னிடத்திற் சொல்லியபடி சாக்ஷி சொல்ல வேண்டுமென் றுரைத்தார்.

வினு—நீர் என்ன பதிலளித்தீர் ?

விடை—நான் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் கோர்ட்டில் உண்மையையே சொல்வதாகத் தீர்மானித்தேன்.

வினு—அதன்பிறகு என்ன நடந்தது ?

விடை—ஜூன்மாதம் 16-ந் தேதி என்னை ஷெய்க் ரஹீம் பக்கிஷ் (Sheikh Rahim Bakhsh) இன்னும் இரண்டு ஆங்கில நியாயாதிபதிகளுக்குமுன் கொண்டுபோனார்கள். அவர்கள் முன்பாக நான் உண்மையைச் சொன்னதோடு போலீசார்கள் என்னை மிகவும் வதைத்ததாகவும் சொன்னேன். கோர்ட்டைவிட்டு வந்ததும் ஜோவஹரிலால் என்னை அடித்தார். கடைசியாக என்னை விடவே நான் அமிர்தசரஸை யடைந்தேன்.



VII

ஜியான் சண்டினுடைய பிள்ளையாகிய 13-வயதுள்ள பிரிஜ்லால் (Brij Lal) கொடுத்த வாக்குமூலம்.



வினு—போலீசார்முன்பு நீர் வாக்குமூலம் கொடுத்தீரா ?

விடை—ஆம். இன்ஸ்பெக்டர் ஜோவஹறிலாவிடம் கொடுத்தேன்.

வினா—நீர் எப்படி வாக்குமூலம் கொடுக்கும்படி நேரிட்டதென்று சொல்லும்.

விடை—ஜலியன் வாலாவில் சுட்டபின்பு சுமார் 20-நாட்கள் சென்றதும், என்னை ஒரு சப் இன்ஸ்பெக்டரும் இரண்டு சேவகர்களும்வந்து கொத்தவாலிக் கழைத்துச் சென்றனர்.

வினா—நீர் கொத்தவாலியில் எவ்வளவுகால மிருந்தீர் ?

விடை—என்னை 9-நாட்கள் வெளியில் விடாமல் பந்தோபஸ்த்தில் வைத்திருந்தார்கள்.

வினா—கொத்தவாலிக்குச் சென்ற எவ்வளவு நாட்களுக்குப் பின்னர் உம்மிடத்திலிருந்து வாக்குமூலம் வாங்கப்பட்டது?

விடை—ஐந்தாறு நாட்களுக்குப் பிறகு.

வினா—ஐந்தாறு நாட்களில் நடந்த விஷயங்களை சொல்லும்.

விடை—என்னை கொத்தவாலிக்கடுத்த தாழ்வாரத்தில் பந்தோபஸ்துடன் வைத்தார்கள். வெளியில் போவதாகினும் ஒரு போலீஸ் சேவகன் பின்பற்றாது செல்ல முடியாது. தரையிலேயே படுக்கும்படி நேர்ந்தது. சில சமயங்களில் என்னை அடித்தார்கள். இரண்டு நாட்களுக்குப் பிறகு என்னை கொத்தவாலியிலிருந்த ஹான்ஸ் ராஜ் வசம் ஒப்புவித்தார்கள். ஹான்ஸ் ராஜ் என்னை பொய் சாக்ஷி சொல்லும்படி கேட்டார். பிறகு என்னால் சகிக்க முடியாதபொழுது ஹான்ஸ் ராஜ் சொல்லிக்கொடுத்தபடி இன்ஸ்பெக்டர் ஜோவஹறிலாவிடம் வாக்குமூலங் கொடுத்தேன்.

வினா—அமிர்தசாஸ் கலகக்கேசில் ராணுவச்சட்ட கோர்ட்

டின்முன் நீர் கொடுத்த வாக்குமூலமும் இன்ஸ்பெக்டர் ஜோவஹரிலாலிடத்தில் கொடுத்த வாக்கு மூலமும் ஒன்றுதானே ?

விடை—ஆம்.

வினு—அமிர்தசரஸ் கலகக் கேசில் லாகூரில் நடந்த ராணுவச்சட்ட கோர்ட்டாரால் எடுத்தெழுதப்பட்டுள்ள ஒரு ஸ்டேட்மெண்டை வாசிக்கிறேன். 'அதாவது கால்யா (Kalya) என்பவன் ஒரு தகரத்தைத் தட்டிக்கொண்டு, "இந்துக்களும் மகம்மதியர்களும் ஒன்று சேர்ந்தால் கவர்ன்மெண்டாரால் ஒன்றும் செய்யமுடியாது" என்பதுதான்.' ஹான்ஸ் ராஜ் உமக்கிதை கற்பித்துக் கொடுத்தாரா ?

விடை—மேலே சொன்ன ஸ்டேட்மெண்டு உண்மைதான். நானுகவே அதைச் சொன்னேன். ஒருவரும் சொல்லிக் கொடுக்கவில்லை.

வினு—ஜலியன்வாலா பாக்கில் ஏப்பிரல் மாதம் 13ந் தேதி மாலையில் நிகழ்ந்தனவற்றைப் பற்றி நீர் சொன்னது வேறு யாராகிலும் சொல்லிக்கொடுத்தபடித்தானே?

விடை—ஹான்ஸ் ராஜ் சொல்லிக்கொடுத்தார். ஜலியன் வாலாவிற்குச் சென்றிருந்தாலுங்கூட எனக்கு அன்று பேசியவர்களையும் தெரியாது, அவர்கள் பேசியதும் காதிற்படவில்லை.

வினு—நீர் சுட்டதைக் கண்ணுற்றீரா ?

விடை—ஆம், கண்டேன்.

வினு—சுட்டபொழுது நீர் பார்த்ததென்ன ?

விடை—சுடப்படவும் எல்லா ஜனங்களும் எழுந்தோடினார்கள்.

வினு—நீர் லாகூரில் உக்கம் சண்ட் (Hukam Chand) என்பவர் உம்மை அன்று மாலையில் ஜலியன்வாலா

வில் ஒரு மீட்டிங்கு நடக்குமென்று சகலருக்கும் தெரிவிக்கும்படி சொன்னதாகச் சொன்னீர், அது உண்மைதானா?

விடை—உண்மைதான். ஆனால் ஹான்ஸ் ராஜின் உத்திரவின்பேரில் அவர் அம்மாதிரி சொல்லச் சொன்னதாக நானறிந்தேன்.

வினா—நீர் அப்படிச் சொல்வதற்கு என்ன காரணம்?

விடை—அவர்களிருவரும் ஒரேயிடத்தில் வசிக்கிறார்கள். அவர்களிருவரும் அடிக்கடி சேர்ந்துபோவதைப் பார்த்திருக்கிறேன். ஹான்ஸ் ராஜை நாங்கள் ஒரு தலைவரெனவே கருதினோம்.

வினா—இந்த உக்கம் சண்ட் என்பவர் யார்?

விடை—நாங்களிருவரும் காபுர்கள் (Kapurs). அவர் என் வீட்டிற்குச் சமீபத்தில் வசித்து வந்தார்.

வினா—அப்படியானால், நீர் உக்கம் சண்ட் ஹான்ஸ் ராஜ் இம்மூவரும் அச்சமயம் அண்டை வீட்டுக்காரர்கள்தானே?

விடை—ஆமாம்.

வினா—நீர் ஏன் ஜலியன்வாலாவிற்குச் சென்றீர்.

விடை—அந்த மீட்டிங்கில் லாலா கன்னியாலால் பேசுவதாய்ச் சொன்னமையால் அவர் பிரசங்கத்தை கேட்கச் சென்றேன்.

வினா—அவர் பேசப்போவதாக உமக்குச் சொன்னது யார்?

விடை—உக்கம் சண்ட் என்பவர்.

வினா—லாகூருக்குச் சாக்ஷி சொல்லச் சென்றபொழுது நீர் சுயற்சியாயிருந்தீரா, அல்லது போலீஸ் பந்தோபஸ்திலிருந்தீரா?

விடை—கச்சேரியில் 10 மணி முதல் மாலை 5 மணி வரை

யில் போலீசாரின் பார்வையிலிருந்தேன். ஆனால் நான் என் அத்தை வீட்டிலிருந்தேன்.

விஞ—நீர் இன்ஸ்பெக்டர் ஜோவஹரிலாலிடத்தில் கொடுத்த வாக்குமூலத்தை உமக்கு மறுபடி வாசித்துக் காண்பிக்கப்பட்டதா?

விடை—அமிர்தசரஸில் எனக்கு வாசித்துக் காண்பிக்கவில்லை. லாகூரில் படித்துக் காண்பித்தனர். நான் கச்சேரிக்கு 7 அல்லது 8 நாட்கள் போகவேண்டியிருந்தது. ஒவ்வொரு நாளும் என்னை வாசித்துப் பார்த்து ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்படி சொன்னார்கள்.

விஞ—அது எந்த பாஷையில் எழுதப்பட்டிருந்தது.

விடை—உருது பாஷை.

விஞ—உமக்கு உருது வாசிக்கத் தெரியுமா?

விடை — தெரியும். கொஞ்சம் ஆங்கில பாஷையும் தெரியும்.



## VIII

ஐக்கோர்ட்டு வக்கீல் லாலா கன்னியாலால் பாட்டியா (Lala Kanhyalal Bhatia) என்பவர் கொடுத்த வாக்கு மூலம். வயது 75.



ஏப்பிரல் மாதம் 13-ந்தேதி இரவு 8 மணிக்கு, சுமார் 500 பேர்களை சிப்பாய்கள் ஜலியன் வாலா தோட்டத்தில் சுட்டுக் கொன்றதாகக் கேள்விப்பட்டேன். நான் என் வீட்டிலிருந்தேன். சில நாட்கள் சென்று நான் பட்டணத்திற்குச் சென்றபொழுது, ஜலியன் வாலா பாக்கில் 13-ந்தேதி நான் பிரசங்கம் செய்யப் போவதாக விளம்

பாம் செய்யப்பட்டதா யுணர்ந்தேன். அப்படிச் சொன்னது ஜனங்கள் மீட்டிங்கிற்குப் போகும்படி தூண்டிற்று. ஏனெனில் நான் ஏதாவது நல்ல புத்திமதி யளிப்பே னென்று நினைத்திருக்கலாம். மீட்டிங்கிற்குச் சென்றதும் சுடப்பட்டார்கள். நான் பிரசங்கம் செய்யப் போவதாகச் செய்த விளம்பரம் முற்றிலும் பொய். என்னை ஒருவரும் வந்து கலக்கவேயில்லை. நான் அன்று அந்த இடத்திலாவது வேறெங்காவது பிரசங்கம் செய்வதாக உத்தேசிக்கவுமில்லை, ஒருவருடன் சொல்லவுமில்லை. அமிர்தசாஸிலுள்ள ஜனங்களுக்கு என்னிடத்தில் தகுந்த மரியாதை யுண்டென்பதை யுணர்ந்து என் பெயரைச் சொல்லி துர்வழியில் நடத்தினர். 'பொது ஜனங்களுக்கு விரோதமாயிருக்கும் சிலர் என் பெயரை பகிரங்கப்படுத்தினர். அப்படிச் செய்ததின் கருத்து நான் சொல்லாமலே நன்கு விளங்கும்.

மற்ற உள்ளூர் வக்கீல்களுடன் என்னையும் ஸ்பெஷல் போலீஸ் கான்ஸ்டேபிளாக நியமித்தனர். ஒரு விதமான முகாந்தரமுமில்லாமலே ஏப்ரல் மாதம் 22-ந்தேதி இந்த உத்தியோகம் செய்யப்பட்டது. போலீஸ் படைகளே போதும். ஊரெங்கும் அமைதியே குடிகொண்டிருந்தது. இந்த முதிர்ந்த வயதில் என்னை ஒரு கூலியைப்போல் நடத்தி ஓரிடத்திலிருந்து மற்றொன்றிற்கு நாற்காலி மேஜை முதலான சாமான்களை எடுத்துச் செல்லும்படி நேர்ந்தது. எங்களைப் பலவிதமாக துன்புறுத்தியதும் நிந்தித்ததும் வெந்த புண்ணில் வேலுருவியதைப் போலிருந்தது. தேசத்தில் அமைதியை யுண்டு பண்ணுவதற்கென்று எங்களை நியமித்ததாக என்றால் நம்பவே முடியாது. அந்த உத்திரவு எங்களை சிக்ஷை செய்வதற்கே ஏற்பட்டதாகும். உள்ளூர் வக்கீல்களனைவரும் பொது நன்மைக்காகப் பாடு படுபவர்கள். ரௌலட்டு மசோதாவை சட்டமாகா திருக்

கும்படி பார்டுபட்டோம். அக்காரணங் கொண்டே வக்கீல்களனைவரும் சிக்ஷிக்கப்பட்டனர்.



## IX

அமிர்தசரஸில் முனிஸிபல் கமிஷணராயும் வக்கீலாகவுமிருந்த லாலா குர்முக்ராயின் புத்திரராகிய ஹார் கோபால் கண்ணு B. A. வென்பவர் கொடுத்த வாக்குமூலம்.



ஏப்பிரல் மாதம் 18-ந் தேதி சுமார் 4-அல்லது 5-மணிக்கு நான் கார்மன் தியோரியென்ற தெருவின் வழியாக இன்னும் மூவருடன் போய்க்கொண்டிருந்தபொழுது குதிரைகளின்மீது சில போலீஸ்காரர்களும் அதன்பின் ஒரு மோட்டார் வண்டியும் போவதைக் கண்டேன். மோட்டார் வண்டியில் சில ராணுவ உத்தியோகஸ்தர்களிருக்கக் கண்டேன். அந்த வண்டி கொஞ்சதூரத்திற்கப்பால் நிற்கவும் என்னைக் கூப்பிட நான் சமீபத்தில் சென்றேன். வண்டியில் வலது பக்கத்திலமர்திருந்தவர் (அவர் ஜனரல் டயர் என்று பின்பு கேழ்விப்பட்டோம்) என்னை நோக்கி:

டயர்—நீர் சலாம் செய்வதற்கு மறந்துவிட்டீரா?

நான்—மறக்கவில்லை. நான் தங்களைப் பார்க்கவுமில்லை. தங்கள் உத்திரவும் தெரியாது.

டயர்—உமக்கு என்ன வேலை?

நான்—லாகூர் வடமேற்கு ரெயில்வே ஆடிடர் ஆபீஸில் ஒரு உத்தியோகஸ்தர்.

டயர்—நீர் நாளையதினம் 9 மணிக்கு ராம்பாக் தோட்டத்தில் ஆஜராகவேண்டும்.

அதற்குள் ஒரு இந்திய உத்தியோகஸ்தர், சுபேதார்

போலத் தோற்றியது, என் விலாசம் முதலியனவற்றை எழுதிக்கொண்டார். நான் ஜனரலுக்குச் சலாம் செய்து விட்டு சமீபத்தில் நின்றுகொண்டிருந்த ப்ளோமனை நோக்கி நாம் ராம்பாக் தோட்டத்தில் கிளப் ஹவுஸ் (Club House) என்றவிடத்திற்கு போகவேண்டுமா யென்று கேட்டேன். உடனே அவர் ஒரு சேவகனிடத்தில் என்னைக் கொத்தவாலிக்கழைத்துச் செல்லும்படி உத்திரவிட என்னை உடனே அழைத்துச் சென்றான். கொத்தவாலி யில் சில ஐரோப்பிய சிப்பாய்கள் காவலாயிருந்தனர். அங்கே என்னைப்போல இன்னும் இரண்டொருவர் உட் கார்ந்திருக்கக் கண்டேன். இரவு 7 மணிக்குள் என்னைச் சேர்த்து 8 மனிதர்களாயிற்று. பிரிஜ் லால் (Brij Lal) என்பவர் தன்னைத் தெருவில் நகர்ந்து செல்லும்படி செய்த தாகச் சொன்னார். அவர் வரும்பொழுது தன் ஆடை களிலிருந்த மண்ணைத் தட்டிக்கொண்டே வந்தார். அன் றிரவு நாங்கள் கொத்தவாலியிலேயே தரையில் படுத்துக் கொண்டு இரவைக் கழித்தோம். ஒரு கூர்க்க சிப்பாய் எங்களுக்கு காவலாயிருந்தார்.

மறுநாள் காலையில் 8-30 மணிக்கு போலீசார் சூழ்ந்து வர ராம்பாக் தோட்டத்திற்குச் சென்றோம். அங்கே எங்களை வெயிலில் நிற்கவைத்து ஒரு ஹவில்தார் எப்படி சலாம் செய்வதென்று கற்றுக்கொடுத்தார். பிறகு ஒவ் வொருவராக சலாம் செய்துகொண்டே சுற்றிச் சுற்றி வந் தோம். பிறகு ஒரு ராணுவ உத்தியோகஸ்தர் வந்து நாங் கள் சலாம் செய்வதில் தேர்ந்துவிட்டோமா வென்று வினவ, சுபேதார் 'ஆம்' என்றுத்தரமளிக்கவும் எங்களை விட்டுவிட்டனர்.

—oo:✻:oo—

X

அமிர்த சரஸில் குரு பெஜாரில் வசிக்கும் லாலா குஜர் மாலின் வாக்கு மூலம் :



ஏப்பிரல்மாதம் 17-ந் தேதி நான் என்னுடைய பட்டுத் துணிக்கடையில் உட்கார்ந்துகொண்டிருந்தபொழுது குதிரைகளின்மேற் சில மனிதர்களும் அவர்களுக்குப்பின் இரண்டு மோட்டார் வண்டிகளும் வரக்கண்டேன். சில இங்கிலீஷ்காரர்கள் அந்த மோட்டார் வண்டிகளிலமர்ந் திருந்தனர். பின்னால் வந்துகொண்டிருந்த சிப்பாய்கள் எங்களை எழுந்து சலாம் செய்யும்படி சொல்லவும் கடைக்காரர்களனைவரும் அப்படியே செய்தோம். என்கடைக்கு இரண்டொரு கடைக்களுக்கப்பால் மோட்டார்வண்டி நின்றது. என்னைக் கூப்பிட்டு ஏன் சலாம் செய்யவில்லையென்று வினவ, நான் சலாம் செய்தேனென்று விடையளித்தேன். என் பெயரைக் குறித்துக்கொண்டு என்னை மறுநாள் காலை 9-மணிக்கு ஆஜர்படுத்தவேண்டுமென்ற உத்திரவோடு போலீசார் வசம் ஒப்புவித்தனர். நான் காலிக்குறிச்சன் (Gali kurichhan) என்றவிடத்திற்குக் கொண்டுபோகப்பட்டேன். அங்கே அனேக ஐரோப்பிய சிப்பாய்களிருந்தனர். போலீசார் என்னைச் சிப்பாய்களிடம் ஒப்புவித்தார்கள். நான் அங்கே உட்கார்ந்திருக்கையில் பாபு ஹர் கோபால் B. A. என்பவரை அதே குற்றத்திற்காக அழைத்து வந்தனர். இப்படி 10-மனிதர்கள் வந்துசேர்ந்தார்கள். எங்கள் கைகளை ஒன்று சேர்த்துக் கட்டினார்கள். என்கையையும் லாலா ஹர் கோபாவின் கையையும் ஒன்றாய்க் கட்டினார்கள். எங்களை முன்னே சில போலீசாரும் பின்னே சிலரும் வர 6-மணிக்கு போலீஸ்டேஷனுக் கழைத்துச் சென்றனர். இரவு

முழுதும் போலீஸ்டேஷனில் கழித்தோம். மறுநாட்காலை யில் 8-30 மணிக்கு எங்களை ராம்பாக் என்ற விடத்திற் கழைத்துச் சென்றனர். எங்களை ஒரு வரிசையாக நிறுத்தி பிறகு கொஞ்சதூரத்திற் கப்பால்போய் நிற்கும்படி செய் தனர். மூன்று உத்தியோகஸ்தர்கள் சலாம் செய்யும்வழி கற்பித்தனர். இப்படி 45-நிமிஷங்கள் சலாம் செய்யும் வித்தை கற்றுக் கொடுத்தார்கள். பிறகு அநேக ஆங்கில ருக்குச் சலாம் செய்தோம். எங்கள் உபாத்தியாயரி லொருவர் எங்களுக்குச் சலாம் செய்யத் தெரிந்துவிட்ட தென்று சொல்லவும் நாங்கள் விடப்பட்டோம்.



## XI

55-வயதுள்ள காஹன் சண்ட் (கண்ணு) என்ற அம் பட்டன் கொடுத்த வாக்குமூலம் : அவன் குருடன்.



நான் இருபது வருஷகாலமாய் கண்களில்லாமலிருக் கிறேன். எப்போதாவது நான் கச்சா (Kucha) என்ற விடத்தில் சாப்பிடுவது வழக்கம். ஏப்ரல்மீ 18உ நான் தெருவழியே கோலால் தட்டித் தடவிக்கொண்டு செல்லுகையில் ஒரு போலீஸ் சேவகன் என்னை நிற்கும்படி சொன்னர். நான் இரண்டு நாட்களாக சாப்பாடில்லாது தவிப்பதாகச் சொல்லியும் கேட்கவில்லை. நான் வயிறுல் நகர்ந்து செல்லவேண்டிவந்தது. கொஞ்சதூரம் நகர்ந்து சென்றவுடன் ஒரு உதை கொடுக்கவும், கையில் வைத் திருந்த கோல் நழுவியது. பிறகு அங்குள்ளோரைப் பிச்சை கேட்டுக்கொண்டே மெள்ள மெள்ளச் சென் றேன். சகலரும் அச்சமயம் கஷ்டகாலத்திலிருந்ததால் என்னை அங்குவிட்டகலும்படி சொல்ல, நான் வெகு கஷ் டத்துடன் அச்சந்தைக்கடந்து சென்றேன்.

## XII

அமிர்த சரஸில் முனிசிபலாபீஸ் ஆக்டிராய் டிபார்டு மெண்டைச் சேர்ந்த பண்டிட் சாலிக் ராம் (Pandit Salig Ram) என்பவர் கொடுத்த வாக்குமூலம். அவர் வயது 48.



ஏப்பிரல் மாதக் கடைசியில் ஒருநாள் காலை 11–30 மணிக்கு கச்ச குறிச்சன் என்றவிடத்தில் ஆறு சிறு பையன்களை சவுக்கடி யடிக்கக்கண்டேன். சுந்தரசிங்கென் பவன் முதலில் ஒரு கம்பத்தில் கட்டப்பட்டு 30 அடி களைப் பெற்றான். நான்காவது அடி அடித்த பிறகு அவ னுக்கு மயக்கமுண்டாயிற்று. ஆனால் ஒரு சிப்பாய் கொஞ் சம் தண்ணீரை அவன் வாயில் ஊற்றவும், மயக்கந் தெளிய மறுபடியும் அடிக்கத் துவக்கினர். இரண்டாவது தடவை மயக்கமடைந்தான். எப்படியோ 30 அடிகள் ஆகும்வரையில் அவனை விடவில்லை. மேலா (Mela) என்ப வன் இரண்டாவது. அவனும் நாலைந்து அடிகள் படவும் மயக்கங் கொண்டான். கொஞ்சம் தண்ணீர் ஊற்றிப் பின்பு விடாதடித்தனர். மூன்றாவது பையனை யடிக்கும் பொழுது நான் மனம் சகியாது கத்தினேன். புத்தி சுவாதீன மில்லாதவனானேன். கொஞ்சநேரம் சென்று மயக்கம் தெளியவும், அடிபட்ட ஆறு பையன்களும் இரத் தம் கொட்ட நிற்கக்கண்டேன். அவர்கள் உடனே கை விலங்கிடப்பட்டனர். அவர்கள் நடக்கமுடியாமையாய் போலீசார் அவர்களைக் கட்டியிழுத்துக்கொண்டு கோட் டைக் கேகினார்கள்.



## XIII

அமிர்த சரஸில் துணி வியாபாரம் செய்யும் லா்லா கிஷோராம் என்பவர் கொடுத்த வாக்குமூலம். வயது 32.



ஏப்பிரல் மாதம் 18ந் தேதி வெள்ளிக் கிழமை மாலே யில் ஹாவெலி ஜமதார் என்ற விடத்திலிருந்து குச்சடுக் லன் என்ற விடம்வரையில் பிரிட்டிஷ் சிப்பாய்களை நிறுத்தி ஞர்கள். ஒரு கம்பம் நடுவில் நாட்டப்பட்டது. சுமார் 8-நாட்களுக்கு அவர்கள் அவ்விடத்திலேயே யிருந்தனர். அந்த வழியே போகும்படி நேர்ந்தவர்களை வயிருல் நகர்ந்து செல்லும்படி கட்டாயப்படுத்தினர். அப்படி நகர்ந்து செல்லும்பொழுது சற்று சிரமபரிகாரஞ் செய்து கொள்ள எழுந்தவர்களை சிப்பாய்கள் காலால் உதைத்த னர். பலர் இம்மாதிரி நகர்ந்து செல்லும்படி நேர்ந்ததைக் கண்ணுற்றேன்.

அந்த இடத்தில் ஒரு ஜெயினர் கோவிலும் ஒரு பட்சிகளுக்காக ஏற்பட்ட பின்ஜரப்போ (Pinjrapole) வு மிருந்தன. சில சிப்பாய்கள் புருக்களையும் இன்னும் சில பட்சிகளையும் கொன்றனர். சிப்பாய்கள் கிணறுகளைக் கக் கூசாக உபயோகப்படுத்திஞர்கள். பொதுவாய் அவர்கள் செய்த காரியங்கள் எங்களுக்கு அலுப்பையும் பயத்தை யுங் கொடுத்தன. அச்சமயம் கடைசியில் ஆறுபையன் களை கம்பத்தில் தனித்தனியேகட்டி 30-அடி அடித்தார் கள். சில அடிகள் அடித்ததும் பையன்கள் மயக்கங் கொண்டார்கள். மயக்கம் தெளியவும் மறுபடி அடிக்கத் துவக்கினர். சிப்பாய்கள் வருவதற்குச் சில தினங்களுக்கு முன் என் சம்சாரம் பிரசவித்தனள். ஒரு மருத்துவச்சி என் வீட்டிற்கு தினந்தோறும் வந்து போய்க்கொண் டிருந்தனள். இந்த 8 நாட்களும் அவள் வரவில்லை. அத ஞல் என் மனைவி பட்ட கஷ்டங்களைச் சொல்லி முடியாது.

## XIV

அமிர்த சரஸில், ராம்பாக் கேட்டில் வசிக்கும் சதுரங்கனுத் பேர்னி என்பவரின் மகள் பலோச்சன் கொடுத்த வாக்கு மூலம் :



ராணுவச் சட்டம் நிகழ்ந்த நாட்களில் என்னை இன்னும் பலருடன் கைது செய்து போலீஸ்டேஷனுக்கழைத்துச் சென்றனர். பாங்கியிலிருந்து கொள்ளை யடிக்கப்பட்ட சொத்துக்களைக் கொடுக்கும்படி எங்களைக் கேட்டார்கள். பண்ணு, ராக்கி, ராணி இம்மூவரும் அதே கேள்வி கேழ்க்கப்பட்டனர். எங்களை மரியாதையின்றி, நடத்தினார்கள். என்னை கால் நிஜாரைக் கயட்டும்படி கட்டாயப்படுத்த நான் அப்படியே செய்தேன். என் தங்கை இக்பாலனும் அம்மாதிரியே செய்யும்படி கட்டாயப்படுத்தப்பட்டாள். போலீசார்களனைவரும் நகைத்து ஆனந்தங் கொண்டனர். இரவு 10 மணிக்கு எங்களை வீட்டிற்குப்போக அனுமதியளித்தனர். ஆனால் மறுநாட் காலையில் 6 மணிக்குத் திரும்பி யழைத்தனர். இப்படி 5-நாட்கள் நடந்தன. சில சமயம் குச்சியால் ஆசனவாயில் குத்தினர். சில சமயம் அடித்தனர். ஒவ்வொருவரிடமிருந்தும் பின் சொல்லிய பணத்தைப் பெற்று கொண்ட பின் எங்களை விடுவித்தனா:—

பலோச்சன் ரூ 40, ராணி ரூ 20, ராக்கி ரூ 20, இக்பாலன், பண்ணு, பிரோசன் ரூ 40, மற்ற பெண்களும் வெவ்வேறு தொகை செலுத்தினர். இந்தத் தொகைகள் கான்ஸ்டேபிள் சுந்தர், ஹவில்தார் பாசல் (Fazal) இவர்களிடம் செலுத்தப்பட்டன.



குறிப்பு

இந்த வாக்கு மூலத்தை ராணி, பண்ணு, ராக்கி முதலியவர்களுக்குப் படித்துக் காண்பிக்கப்பட்டது. அவர்கள் இதை முற்றிலும் சரியென ஆமோதித்தனர். அதற்கத்தாக்ஷியாக அவர்கள் கைக் கட்டவிரல் சாயலை பதிவு செய்யப்பட்டது.



## XV

அமிர்த சாஸில் டாக்டர் கிச்லூ (Dr. Kitchlew) B. A. Ph. D. பாரிஸ்டர், கொடுத்த வாக்கு மூலம்.



நான் அலிகார் (Aligarh) காலேஜைச் சேர்ந்த பழய மாணுக்கன். கேம்பிரிட்ஜ் நகரில் பி. ஏ. (B. A.) பட்டமும் இங்கிலாந்திலிருந்த 5 வருஷங்களில் பாரிஸ்டர் பட்டமும் பெற்றேன். இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்கு 1912 ௵ திரும்பி வந்தேன். முதன் முதலில் ராவல் பூண்டியில் பாரிஸ்டராக இருந்தேன். 1915 ௵ என் சொந்த ஊராகிய அமிர்தசரஸிற்கு வந்தேன். 1916 ௵ முதற்கொண்டு காங்கிரஸ் மாஸ்லிம் லீக் சபைகளிற் சேர்ந்து ஊக்கத்துடன் உழைத்து வருகிறேன். 1915 வருஷ முதற்கொண்டே ஜனங்களுக்குப் புதிதான உணர்ச்சி யேற்படக் கண்டேன். ஆனல் அவர்களுக்கு தேச க்ஷேமத்திற்காக உழைப்பதில் வழி காட்டும் தலைவர் தேவையாயிருந்தது. பட்டணத்திலிருந்த டைடில்கள் பெற்ற சிலரும் அதிகார வர்க்கத்தினரும் ஜனங்களுக்கேற்பட்ட புதிய உணர்வை யொழிக்க முயன்றனர். முனிஸிபல் கமிடியில், ஹிந்துக்களும் மகம்மதியர்களும் அற்ப சங்கதிகளில் சண்டை யிடுவதும், அவைகள் பெரிய கேசுகளாக முடிவதும், சகஜமா

யிருந்தது. இம்மாதிரியான நடவடிக்கைகள் வெகுகாலம் பரவாதிருக்கும்படி நான் பிரசங்கங்கள் செய்து, வரி கொடுக்கும் குடித்தனக்காரர்களை நோக்கி மேற்கூறியபடி சச்சரவு செய்யாது உண்மையாய்த் தங்களுடைய பொது நன்மைக்காக உழைப்பவர்களையே முனிஸிபல் போர்ட்டிற்குத் தேர்ந்து எடுக்க வேண்டுமென்று சொன்னேன்.

அம்மாதிரியே சென்ற முனிஸிபல் எலக்‌ஷனில் ஜனங்களுடைய உண்மையான பிரதிநிதிகள் பலரைத் தேர்ந்தெடுத்தனர். நானும் ஒரு முனிஸிபல் கமிஷனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். முதல் முனிஸபல் போர்டு மீட்டிங்கிலேயே நான் ஒரு ஹிந்து கமிஷனரை சேர்மனாகப் பிரேரேபித்தேன். எப்பொழுதும் டிபுடி கமிஷனரையே சேர்மெனாய் வைத்துக்கொள்வது வழக்கம். ஆனால் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட கமிஷனரொருவர் டிபுடி கமிஷனரின் பெயரைச் சொல்லவும், அவரே தேர்ந்தெடுக்கப்பட்டார். அமிர்த சரஸின் சரிதையில் ஒரு ஹிந்துவின் பெயரை சேர்மென் ஸ்தானத்திற்குப் பிரேரேபணை செய்தது அதுதான் முதல் தடவை.

அமிர்த சரஸில் பட்டங்கள் பெற்றோர், பட்டங்களை யிச்சிப்போர், பெரிய உத்தியோகங்களுக்கு ஏற்பாடு செய்பவர், ஆகிய சிலரால் நடத்தப்பட்ட அஞ்சுமான் இஸ்லாமியா ஒன்றிருந்தது. தங்கள் சுய நலத்தை யுத்தேசித்து அஞ்சுமானைக் காரணமாய் வைத்துக்கொண்டனர். நான் ஒரு மெம்பராகச் சேர்ந்து கொண்டேன். என்னை மானேஜிங் (Managing) கமிட்டியில் எடுத்துக் கொள்ள இஷ்டப்படாவிடினும், நான் அதற்கு இஸ்லாமியா கலாசாலை பழைய மாணுக்கர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டேன். உடனே அவர்களை ஒரு வழிக்குக் கொண்டுவர முயன்றும் முடியாமையால், சுய நலங்கருதும் மெம்பர்களின் அக்கிர

மச் செயல்களைப்பற்றி பொது ஜனக் கூட்டங்களில் சொல்லத் தொடங்கினேன்.

என்னைக் கஷ்டங்களுக்குள்ளாக்க வெண்ணி சில மெம்பர்கள் துராலோசனை செய்தனர். அஞ்சுமானில் மெம்பராகிய ஒருவரையும் அவர் பையனையும் போலீஸ்டேஷனுக்கழைத்துச் சென்று, நான் ஆங்கிலேயரைத் துரத்துவதற்காகவேண்டி வெடி குண்டுகள் தயார் செய்யும் வழி அந்தப் பையனுக்குக் கற்பித்துக் கொடுத்ததாகச் சொல்லும்படி செய்தனர். தற்செயலாய் நான் போலீஸ் சூபரின் டெண்டெண்டைக்காணவும், அவர் நடந்த சங்கதியனைத்தையும் சொல்வதோடு தான் அக்கட்டுக்கதையை நம்பவில்லை யென்றும் எனக்கும் அந்த மெம்பருக்குமுள்ள விரோதம் தனக்குத் தெரியுமென்று முரைத்தார்.

பொது ஜனங்களின் அபிப்பிராயங்கள் அதிகாரிகளுக்குத் தெரியாமல், பட்டங்கள் பெற்றோரும் கோழ் சொல்லித்திரிபவர்களும் சொல்வதை அவர்கள் நம்பி வந்தனர். ஜனங்களுடைய விருப்பத்திற்கு எதிராகவே கவர்ன்மெண்டார் நடந்துகொண்டது மல்லாமல் அச்சுச் சட்டம், தேசப்பாதுகாப்புச் சட்டம், இவைகளையும் அமுலுக்குக் கொண்டுவந்தார்கள். சண்டை துவக்கவும், சர் மைக்கேல் ஓட்வியரும் அவர் கவர்ன்மெண்டும் கடன் வாங்குவதிலும் சண்டைக்காள் பிடிப்பதிலும் ஜனங்களைப் பலவிதமாய் ஹிம்சித்தனர். 1918ஹூ ஆகஸ்டுமீ அமிர்தசரஸில் பஞ்சாப் மகா நாடு கூடிற்று. அதில் அக்கிராசனம் வகித்த பாரிஸ்டர் டனிசண்டு (Dunichund) சர் மைக்கேல் ஓட்வியரின் கொடுமையான ஆளுகையைப் பற்றிப்பேசி அவரை அந்த இராஜதானிக்குத் தலைவராகப் பெற்றதின் கோரத்தை எடுத்துச் சொன்னார். ஜனங்கள் அதன் பின்பு அதிகார வர்க்கத்தினருக்கு பயப்படுவதை

யொழித்தனர். தேச சேவையில் பாடுபடுவதில் அதி யுற்சாகத்தை யடைந்தனர். 1919 வருஷத்திய காங்கிரஸ் மகா சபை அமிர்த சரஸில் கூடுவதற்கு ஏற்பாடு செய்தோம். அச்சமயம் ரௌலட் மசோதா சட்டமாகி விட்டது. சத்தியாக்கிருக விருதமும் அனுஷ்டிக்கப்பட்டது. நானும் டாக்டர் சத்தியபாலும் அதிற் சேர்ந்துகொண்டோம். நான் லாகூர், மூல்டான், ஜலந்தர், முதலிய விடங்களிற்போய் பிரசங்கஞ் செய்தேன். மார்ச்சு மாதம் 30-ந் தேதி ஹார்தாலும் விருதமும் அனுஷ்டிக்கப்பட்டன. அன்று மாலை ஜலியன் வாலா தோட்டத்தில் 30,000 ஜனங்களுடன் ஒரு மீட்டிங்கும் நடைபெற்றது. ஸ்திரீகளும் விருதத்தை யனுஷ்டித்தனர். அன்று மீட்டிங்கில் டாக்டர் சத்தியபால் பிரசங்கம் செய்யக் கூடாதென்று உத்திரவு பிறந்தது. நானும் இன்னும் மூவரும் பிரசங்கங்கள் செய்யக் கூடாதென்று கவர்ன்மெண்டார் உத்திர விட்டனர். இதற்கு முந்தியே நான் டிபுடி கமிஷணரைக் கண்டு பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுக்கு விரோதமாக பிரசங்கம் செய்யவில்லையென்றும் என் விரோதிகள் அதிகாரிகளிடத்தில் பொய் சொல்லி அவர்கள் மனதைக் கெடுப்பதாகவும் சொன்னேன். அவர் அதற்குப் இரகசியப் போலீசாரோ அல்லது ராஜ பக்தர்களென்று சொல்லுகிறவர்களோ என்னைப்பற்றி விரோதமாகச் சொன்னால் என்னை யழைத்து உண்மையை யறிந்து கொள்வதாகச் சொன்னார். காந்தியினுடைய அபிப்பிராயத்திற்கிணங்க ஏப்பிரல் மாதம் 6-ந் தேதி ஹார்தால் அனுஷ்டிக்கப்பட்டது. ஒருவருடைய தூண்டு கோலன்றியே நடந்தது. போலீசாரால் ஒருவித இடைஞ்சலுமில்லை. ஏப்பிரல் மாதம் 9-ந் தேதி ஸ்ரீராம நவமிதினம் கொண்டாடப்பட்டது. மகமதியர்கள் அதில் சேர்ந்து கொண்டனர். நான்

என் வீட்டு மாடியிலிருந்து ஊர்கோலம் செல்வதைப் பார்த்தேன். அன்றையதினமும் போலீசார் தலையிடா திருக்க எல்லாம் அமைதியாகவே நடந்தது. நான் பல மகம்மதிய மீட்டிங்குகளில் கொடுத்த பிரசங்கங்களின் காரணமாக ஹிந்து மகமதியர்களுக்குள் நட்பு அதி கரித்தது.

ஏப்பிரல் மாதம் 10-ந்தேதி என்னை டிபுடி கமிஷணர் கூப்பிட்டு பஞ்சாப் கவர்ன்மெண்டாரின் உத்திரவைக் காண்பித்தார். உடனே என்னையும் டாக்டர் சத்தியபாலை யும் தேசப் பிரஷ்டம் செய்து தாம்சாலைக் கனுப்பினர். அன்று மாலையிலேயே தாம்சாலையை யடைந்தோம். அங்கே எங்களுடைய படுக்கை முதலானவைகளுக்கொரு வித ஏற்பாடும் செய்யவில்லை. ஒரு நண்பரிடமிருந்து அவைகளைப் பெற்றுக்கொண்டோம். அங்கே டாக் பங்களாவில் மூன்று தினங்களிருந்தோம். பிறகு டாக்டர் சத்தியபாலை ஓரிடத்திலும் என்னை வேறிடத்திலும் வைத் தார்கள். தரம்சாலா டிபுடி கமிஷணர் கடனாக எனக்கு ரூ 100 கொடுத்தார். இரகசியப் போலீசார் என்னைப் போகுமிடமெல்லாம் பின்பற்றி பலவிதமான தொந்திரவு களுக்குள்ளாக்கினர்கள். பஞ்சாப் கவர்ன்மெண்டாரின் உத்திரவின்படி எனக்கு வரும் கடிதங்கள் பரிசோதிக்கப் பட்டன. மே மாதம் 6-ந் தேதி என்னையும் சத்தியபாலை யும் செஷ்ஷன்ஸ் கோர்ட்டிற்கழைத்துச் சென்று, இந்தி யன் பீனல் கோடு 124 A பிரிவின் கீழ் கைது செய்து போலீசார் வசம் ஒப்புவித்தனர். பிறகு லாகூருக்கு அழைத்துச் சென்று சென்டிரல் ஜெயிலில் தனியறையில் என்னை அடைத்தனர். அது மிகவும் ஆபாசமான அறை. அதி உஷ்ணமா யிருந்தது. ஒரு கந்தைப்பாயும் சில பழம் போர்வைகளுமளித்தனர். பஞ்சாப் கவர்ன்மெண்டாரின்

உத்திரவின் பேரில் என்னை மற்றவர்களுடன் சேராது தனிமையாய் அடைக்கப்பட்டதா யுணர்ந்தேன். இப்படி ஒரு மாதத்திற்குமேல் வைக்கப்பட்டேன். ஜெயிலதிகாரி ஒரு ஆங்கிலேயர். அவர் என்னுடைய வக்கீல் என்னிடம் கேசு விஷயமாய்க் கலக்க வேண்டி அனுமதி கேட்க, அதற்கு அந்த ஜெயிலதிகாரி தன் முன்னிலையில் தான் பேச வேண்டுமென்று சொல்லிவிட்டார். அதனால் நான் என் வக்கீலிடம் கேசு விஷயமாய் ஒன்றும் சொல்லக்கூட வில்லை.

கேசு நடந்தது. நியாயாதிபதி குற்றவாளிகளுக்கு விரோதமாகவே யிருந்தார். பிராசிகூஷன் தரப்பில் விசாரிக்கப்பட்ட சாக்ஷிகளில் எங்களுக்கனுகூலமாகப் பேசியவரைக் கோர்ட்டார் தொந்திரவு படுத்தினர். எங்களுடைய வக்கீல் மரியாதையின்றி நடத்தப்பட்ட னர். எதிரி விசாரணை செய்ய இடங் கொடுக்கவில்லை. பிராட்வே (Broadway) என்பவரின் நடத்தை குற்றம் சாட்டுபவர் போலத் தோற்றியதே யொழிய நியாயாதி பதியைப் போலில்லை. குற்றவாளியென்றேற்பட்டவுடன் என்னை சென்டிரல் ஜெயிலிலடைத்தனர். என்னை கம்பள நெசவு செய்யும் வேலைக்காரர்களை மேல்பார்வை பார்ப்பு தற்கு நியமித்தனர். ஜெயிலதிகாரி, ஐ. ஸி. லால் என்பவர் என்னிடத்தில் அனுதாபங் காட்டினர். அது கவர்ன் மெண்டாருக்கு அவ்வளவு திருப்தியைக் கொடுக்கவில்லை.

ஹண்டர் கமிடியார் சாக்ஷிகளை விசாரிப்பதாக ஏற் பட்டவுடன், டனிச்சண்ட், டாக்டர் பாஷிர் முதலியவர் களையும் என்னையும் மாண்ட்காமரி ஜெயிலுக்கழைத்துச் சென்றனர். எங்களை ஒரு கட்டிடத்திலடைத்துக் கத வைப்பூட்டி போலீஸ் பந்தோபஸ்தில் வைத்தனர். நாங்கள் ஜெயிலதிகாரியிடத்தில் ஹண்டர் கமிடியின் முன்பு சாக்ஷி

சொல்வதற்கும் எங்களுடைய கேசை கவனிப்பதற்கும் அனுமதியளிக்கும்படி வேண்டினேம். ஹண்டர் கமிடி லாகூரில் கூடியபொழுது ஜெயிலதிகாரி, லார்டு ஹண்டர் சாக்ஷி சொல்வதற்கு என்னையழைப்பதாகச் சொன்னர். நான் கவர்ன்மெண்டாரால் விடப்படும் சாக்ஷிகளை குறுக்கு விசாரணை செய்யவும் எதிர் வாதமாடவும் அனுமதி கொடுத்தால் ஆஜராவதாக ஒப்புக்கொண்டேன். அதற்கு அவர் அது விஷயம் ஹண்டர் கமிடியாருடன் நேரில் ஏற்பாடு செய்துகொள்ள வேண்டுமென்றும் தனக்கொன்றும் தெரியாதென்றும் சொல்லி விட்டார். நான் லாகூருக்கு அனுப்பப்பட்டேன். ஆனல் ஹண்டர் கமிடியார் பஞ்சாப் கவர்ன்மெண்டாரின் ஆக்ஷேபணையின்பேரில் என் விருப்பத்திற்குச் சம்மதிக்காமையால் நான் சாக்ஷி சொல்லவில்லை. ஸ்ரீ முகத்திற்குப் பின்பு டிசம்பர் மாதம் 26-ந் தேதி என்னை விடுவித்தனர்.

என்பேரில் கலகக் குற்றமேற்படுத்தியது முற்றிலும் அபாண்டம். அமிர்த சாஸில் அல்லது பஞ்சாப் மாகாணமெங்கும் கலகமே கிடையாது. ரௌலட் மசோதாவை நாங்கள் ராஜ வரம்புக்குட்பட்டே எதிர்த்தோம். கவர்ன்மெண்டாராலேயே ஜனங்களுக்குக் கோப மூட்டப்பட்டது.



வாக்கு மூலங்கள்—லாகூர்.

I

லாகூர் பாரிஸ்டர் டாக்டர் கோகல் சண்ட் நராங் (Dr. Gokal Chand Narang) கொடுத்த வாக்கு மூலம்.



1919 ஞ பிப்ரவரி மாதம் 4-ந் தேதி ரௌலட் மசோதா சட்ட மாகா வண்ணம் எதிர்க்க முதல் முதலில்

மீட்டிங்கு கூட்டப்பட்டது. முன்னர் கல்கட்டா யுனிவர் சிட்டி ப்ரொபசராக விருந்த பாரிஸ்டர் மனோஹர்லால் அக்கிராசனம் வகித்தார். கூட்டம் அதிகமாகவுமில்லை. ஒருவிதமான தொந்திரவு மேற்படவில்லை.

மார்ச்சு மாதம் 9-ந் தேதி—மறுபடியும் அதே காரணத்திற்காக கனம் பாரிஸ்டர் பஸ்லி உசேயினுடைய (Fazl-i-Hasain) அக்கிராசனத்தின்கீழ் மார்ச்சு மாதம் 9-ந் தேதி ஒரு மீட்டிங் கூட்டப்பட்டது. முன் கூடியதை விட அதிக ஜனங்கள் கூடினார்கள். ஜனங்களுக்கு ஊக்க மதிகரித்தது. பிரசங்கங்கள் அமரிக்கையாகவே யிருந்தன. லாகூர் ஐகோர்ட்டு அட்வோகேட்டாகிய சாண்டேர்ஸ் (Saunders) என்ற ஆங்கிலேயரும் அன்று பேசினார்.

மார்ச்சுமாதம் 18-ந் தேதி — மார்ச்சுமாதம் 18-ந் தேதி ரௌலட் மசோதா சட்டமாகியது. சட்டமாவதற்கு முன்னமேயே காந்தி (Gandhi) ரௌலட் மசோதாவை இராஜப் பிரதிநிதி அங்கீகரித்த இரண்டாவது ஞாயிற்றுக் கிழமையை இழிவான நாளாக எண்ணும்படி சொன்னார். அது மார்ச்சு மாதம் 30-ந் தேதியாக நேர்ந்தது.

மார்ச்சு மாதம் 29-ந் தேதி—காந்தியின் விருப்பத்தின்படி 30-ந் தேதி மீட்டிங்கு நடத்துவதற்கு ஏற்பாடு செய்து பலருடைய கையொப்பங்களுடன் விளம்பரக் கடிதங்கள் அனுப்பப்பட்டன. 29-ந் தேதி டிபுடி கமிஷணர் பைசன் (Fyson) என்பவர் விளம்பரத்திற்குக் கையொப்பமிட்டவர்களை யழைத்து மீட்டிங்கைப்பற்றி விசாரிக்க, காந்தி ஏப்பிரல் மாதம் 5-ந் தேதியன்று மீட்டிங்கு நடக்க வேண்டுமென்று தெரிவித்து விட்டதாகவும் ஆதலால் மார்ச்சு மாதம் 30-ந் தேதி மீட்டிங் நடைபெறுதென்றும் அறிவிக்கப்பட்டார்.

ஏப்பிரல் மாதம் 2-ந் தேதி—ஏப்பிரல் மாதம் 2-ந்

தேதி முக்கிய போலீஸ் சூப்பிரன்டெண்டெண்டு பிராட்வே (Broadway) என்பவர், 1861 ஹு 5-ந்தாவது ஆக்டாகிய போலீஸ் ஆக்டினுடைய பிரிவின்படி லைசென்ஸு பெருது ஊர்கோலங்கள் நடக்கக் கூடாதென்று கட்டளை யிட்டனர். அன்றையதினமே 6-ந் தேதி செய்யவேண்டிய விஷயங்களைப் பற்றி யோசிக்க ஒரு மீட்டிங்கு கூட்டப்பட்டது. அபிப்பிராய பேதமேற்பட்டுக் கடைசியில் பெரும்பாலோர் அன்று ஒரு மீட்டிங் கூடுவதெனத் தீர்மானித்தனர். ஜனங்கள் அன்று விரதம் அனுஷ்டிப்பார்களென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனல் அப்படிச் செய்யவேண்டுமென்ற தீர்மானம் ஏற்படவில்லை. அன்று ஒரு ஊர்கோலம் விடுவதாகவும் எண்ணவில்லை.

ஏப்பிரல்மீ 4வ—டிபுடி கமிஷணர், எபபிரல்மீ 4வயன்று, 6வமீட்டிங்கிற்காக விளம்பரத்தில் கையொப்பமிட்டவர்களையும், சில பத்திராதிபர்களையும் அழைத்தனர். அங்கு வந்திருந்த பிராட்வே என்பவர் "ட்ரிபியூன்" பத்திரிகையில் ஜனங்களும் கவர்ன்மெண்டாரும் 6-ந்தேதி செய்யவேண்டிய கடைமைகளைப்பற்றி பிரசுரமாயிருந்த விஷயத்தை ஏற்றுக்கொண்டார்போல் படித்தார். டிபுடி கமிஷணர் பிறகு ஜனங்கள் கடைகளை மூடுவதில் ஒருவிதமான தொந்திரவு மிருக்கக்கூடாதென்றும், அப்படி மூடும்படி கேட்டுக்கொள்வதும் 6-ந் தேதி காலையோடு முடியவேண்டுமென்று சொன்னர். முனிஸிபல் கமிஷணர்களும் இன்னும் மற்ற அதிகாரிகளிற் சிலரும் கடைகளை மூடக்கூடாதென்று கண்டித்து வருவதாக எடுத்து சொல்லப்படவும் டிபுடி கமிஷணர் அப்படி நடந்ததாக ரூபிக்கும் பக்ஷத்தில் தகுந்தபடி சிக்ஷிப்பதாகச் சொன்னர். டிபுடி கமிஷணர் போலீஸ் சூப்பரின்டெண்டெண்டு இருவரும் பிராட்லாஹாலுக்குச் (Bradlaugh Hall) சில போலீஸ்

உத்தியோகஸ்தர்களைத் தவிர்த்து மற்றவர்களை அனுப்ப வில்லையென்று வாக்களித்தனர். டிபுடி கமிஷனர் ஏதோ மனக்கவலைக் கொண்டவரைப் போலக் காணப்படவும் கவர்ன்மெண்டார் இஷ்டப்படா விட்டால் மீட்டிங்கை நிறுத்திவிடலாம் என்று நாங்கள் எடுத்துச் சொல்லவும், அவர் கவர்ன்மெண்டாருக்கு அப்படிச் செய்ய வேண்டு மென்ற எண்ணமில்லை யென்று சொல்லிவிட்டார்.

ஏப்ரல்மாதம் 5-ந் தேதி—ஏப்ரல்மாதம் 5-ந்தேதி டிபுடி கமிஷனர் பின்வரும் உத்தரவை யனுப்பினார்.

"ஏப்ரல்மாதம் 6-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை எல்லா முனிஸிபல் கமிஷனர்களும் அவரவருடைய வார்டுகளில் வந்திருந்து எல்லாம் அமைதியாயிருக்கும்படி உதவிபுரிய வேண்டியது. கடைக்காரர்கள் கடைகளை மூடினாலும் திறந்துவைத்தாலும் அவர்கள் வழி போகக் கூடாது. யாராவது கட்டாயம் செய்வதைக் கண்டால் உடனே அவர் பெயரை சமீபத்திலுள்ள போலீஸ்டேஷனில் பதிவு செய்வதோடு தங்களால் கூடியவரையில் தடுக்க முயல வேண்டும். முன்பே திறந்துவைக்கப்பட்ட கடைகளை மூடக்கூடாது. மூடியிருக்கும் கடைகள் அப்படியே யிருக் கலாம்."

ஏப்ரல்மீ 6வ—எனக்குத் தெரிந்தவரையில் கமிஷனருக்கும் ஜனத்தலைவர்களுக்கும் ஒத்துக்கொண்ட ஒப்பந்தத்திற்கு விரோதமாக ஒன்றும் நிகழவில்லை. எப் படியோ கடைகளனைத்தும் மூடப்பட்டன. வண்டிகள் போக்குவரவு கிடையாது. ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து இந்தியர்களும் ஐரோப்பியர்களும் தங்கள் சாமான்க ளுடன் நடந்தே செல்லவேண்டியதாயிற்று.

ஊர்கோலம்

லைசென்ஸு இல்லாது ஊர்கோலம் செல்லக்கூடா

தென்று உத்திரவு ஏற்பட்டிருந்தபோதிலும், ஒரு பெருங் கூட்டம்கூடி பட்டணத்தின் முக்கியமான தெருக்கள் வழியே சென்றது. எனக்கு அதுவிஷயம் பகல் 12-30 மணிக்குத் தெரிந்தது. நான் என் வீட்டிற்குப் போய்க் கொண்டிருக்கையில் ஒரு கூட்டம் அனர்க்களித் தெரு வைத்தாண்டி மாலை (Mall) நோக்கிச்சென்று அங்கே போலீசார்களையும் சிப்பாய்களையும் எதிர்க்கும்போலிருப் பதாயுணர்ந்து அந்தவிடத்திற்குச் சென்றேன். ஒருபோலீ ஸாரின் குதிரையைப்பெற்று அதன்மேலேறி அனேக இடங்களில் கூடின ஜனங்களை அமைதியாய்க் கலைந்து போகும்படி செய்தேன். பிறகு குதிரையைப் போலீசார் வசம் ஒப்புவிப்பதற்காக ஜில்லாக் கோர்ட்டிற்குச் சென் றேன். அங்கே டனிசண்டும் வந்து சேர்ந்தார். போலீஸ் சூபரின்டென்டெண்டு மறுபடியும் ஊர்கோலங்களிருக்கக் கூடாதென்றும், மீட்டிங்கு 6-மணிக்குள் முடிவடைய வேண்டுமென்றும் சொன்னார். நாங்கள் அப்படியே செய்வதாகச்சொல்லி மீட்டிங்கிற்குச் சென்றோம்.

### மீட்டிங்

அன்று ஏராளமான ஜனங்கள் கூடினர். ஹால் முழு தும் ஒரேகூட்டமா யிருந்ததோடுகூட ஆயிரக்கணக்கான ஜனங்கள் வெளியில் நின்றுகொண்டும் உட்கார்ந்து கொண்டுமிருந்தனர். பண்டிட் ராம்பாஜ் டட்டா என்பவர் அக்கிராசனம் வகித்தார். கனம் பஸ்லி உசேயினும் (Fazl-i-Husain) இன்னும் பலரும் பிரசங்கங்கள் செய்த னர்.

மீட்டிங்கு நடக்கும் பொழுது இரகசியப் போலீ சைச் சேர்ந்த பௌரிங் (Bowring) என்பவரும், இன்னும் சிலரும் வந்தார்கள். உடனே கூட்டத்தில் பலர் சப்தப் படுத்தி அதிருப்தியைக் காண்பித்தனர். அக்கிராசனுதி

பதியும் நானும் ஜனங்களைப் பேசாது அமைதியாயிருக்கும் படி கேட்டுக்கொண்டோம். பிறகு நடந்த $1\frac{1}{2}$ மணி நேரத்தில் போலீஸ் உத்தியோகஸ்தரிடத்தில் ஒருவரும் மரியாதையின்றி நடக்கவில்லை. மீட்டிங்கு, கலையவும் ஒரு விதமான கிளற்சியில்லாமல் அமெரிக்கையாகவே ஜனங்களிருந்து மெதுவாகக் கலந்து சென்றனர். போலீஸ் சூப்பரின்டெண்டெண்டின் மனம் போலவே எல்லாம் நடைபெற்றது. 7-ந் தேதியன்று எல்லாம் சரியான நிலைமைக்கு வந்தது. அன்றையதினமும் 8-ந் தேதியும் ஒரு விசேஷமும் நடக்கவில்லை.

9-ந் தேதி ஸ்ரீராமநவமி ஊர்கோலம்—9-ந் தேதி ஸ்ரீராமரின் பிறந்தநாளாகிய ஸ்ரீராமநவமிதினம் ஜனங்களால் வழக்கப்படி கொண்டாடப்பட்டது. போலீசாரிடம் லைசென்ஸு பெற்றுக்கொண்டு ஊர்கோலம் நடைபெற்றது. ஆனால் இவ்வருஷம் முனிஸிபல் கமிஷனர்களும் பட்டங்கள் பெற்றோரும் பட்டங்களடைய வேண்டி அவாவுடனிருப்பவரும் இந்த ஊர்கோலத்தில் சேர்ந்து கொள்ளவில்லை. ஜனங்கள் "காந்திக்கு ஜே!" "ராஜா ராமசந்தராக்கு ஜே!" என்றும் கத்திக்கொண்டே சென்றனர். போலீசார்கள் ஒருவரும் வரவில்லை. அந்த நகர இன்ஸ்பெக்டரும் இரண்டு மாஜிஸ்ட்ரேட்டுகளும் வந்திருக்க ஜனங்கள் அவர்களுக்கு மாலைகள் போட்டு மரியாதைகள் செய்தனர். எல்லாம் சந்துஷ்டியாகவும் சமாதானமாகவும் முடிந்தது.

ஏப்பிரல் மாதம் 10-ந் தேதி—ஏப்பிரல் மீ 10-ந் தேதி மாலையில் காந்தி கைது செய்யப்பட்டார் என்ற செய்தி லாகூரில் பரவியது. டாக்டர் கிச்சுலுவையும் சத்திய பாலையும் தேசப்பிரஷ்டம் செய்ததும் அதன் காரணமாக அமிர்தசாஸில் நடந்ததெத்வும் அப்பொழுது லாகூரில்

தெரியவில்லை. கொஞ்ச நேரத்திற்குள் கடைகளெல்லாம் மூடப்பட்டன. அன்று மாலையில் மாவிலாவது லோஹரி கேட்டிலாவது நடந்த விஷயங்கள் எனக்கு நேரில் தெரியாது. போலீசார் கூட்டத்தைச் சுட்டதாகவும் அநேக சிறு பையன்கள் மாண்டதாகவும் காயம்பட்டவர்களனைவரும் கைது செய்யப்பட்டதாகவும் அறிந்தேன்.

ஏப்ரல் மாதம் 11-ந் தேதி—ஏப்ரல் மாதம் 11-ந் தேதி ஒரு கடைகூட திறக்கப்படவில்லை. ஜனங்கள் மிகக் கோபத்துடனிருந்தனர். இதன் பிறகு கடைகள் திறக்கப்படுமென்று எதிர்பார்த்தும் பிரயோசனமில்லை.

மறுநாள் காலையில் டிபுடி கமிஷணர் 5-ந் தேதி விடுத்த நோட்டீஸில் கையொப்ப மிட்டவர்களை யழைத்ததின்பேரில் நாங்கள் சென்றோம்.

அவர் எங்களை நகரில் ஹார்தால் இல்லாது தடுக்கும்படி சொன்னார். நாங்கள் எங்களால் கூடியவரையில் முயல்வதாகவும் இறந்துபோனவர்களின் சரீரங்களைத் திரும்பிக் கொடுத்துவிட வேண்டுமென்றும் சொல்ல அவர் லெப்டிணண்டு கவர்னரைக் கேட்டு விடையளிப்பதாகச் சொன்னார். மறுபடியும் எங்களையழைத்து சரீரங்களைக் கொடுக்க முடியாதென்றும், பாதுஷாஹி மசூதியில் (Badshahi Mosque) பெரிய மீட்டிங்கு கூடியிருப்பதால் அதை உடனே போய்க் கலைக்க வேண்டுமென்றும் சொல்ல, பண்டிட் ராம்பாஜ்டட்டாவும் இன்னும் மூன்று மகமதியத் தலைவர்களும் மசூதிக்குச் சென்றார்கள். நான் அங்கே போகாததால் அங்கு நிகழ்ந்தனவைகளைப்பற்றி எனக்கு நேரில் ஒன்றும் தெரியாது. அன்று மாலையில் லாலா ஹர்கேசன்லால், டனிசண்ட் இன்னும் பலரும் கடைகளைத்திறக்கும்படி எழுதிக்கொண்டு வந்த விளம்பாத்தில் என்னைக் கையொப்பமிடும்படி கேட்க, நான்

கையெழுத்திட்டேன். உடனே அதை டனிசண்டு பிரின்டரிடம் கொடுத்தார். ஆனால் ஹார்தால் முடியாம லிருந்தாலும் இன்னும் பல காரணங்களாலும் சமயத்தில் அச்சடிக்க முடியவில்லை.

ஏப்பிரல் மாதம் 12-ந் தேதி—பாதுஷாகி மசூதியில் 12-ந் தேதி மறுபடியும் ஒரு கூட்டம் கூடிற்று. நான் அங்குச் செல்லாததால் எனக்கு நடந்ததொன்றும் நேரில் தெரியாது. ஜனங்கள் திரும்பிச் செல்லும்பொழுது சுடப்பட்டார்கள். பலர் காயம்பட்டனர். பலர் மாண்ட னர். நகரில் சிப்பாய்கள் வந்து சேர்ந்தனர். அவர்களு டைய வரவிற்கு யாதொரு காரணமுமில்லை. டிபுடி கமிஷணர் எங்களுக்களித்த வாக்கை மறந்து விட்டனரோ அல்லது அவர் சொற்படி மேலதிகாரிகள் கேட்க வில்லையோயென்று எனக்குத் தோன்றிற்று.

மிஸ்டர் ஷாபி (Shafi) வீட்டில் மீட்டிங்கு.

அன்று மாலையில் ஷாபியின் வீட்டில் ஒரு மீட்டிங்கு கூட்டப்பட்டது. அதில் பின்வருமாறு கவர்ன்மெண்டா ரைக் கேட்டுக்கொள்ள வேண்டுமெனத் தீர்மானிக்கப் பட்டது.

(1) நகரிலும் சர்குலர் ரோட்டிலுமுள்ள சிப்பாய் களைத்திருப்பிப் போகச் சொல்ல வேண்டும்.

(2) பிணங்களும் காயம்பட்டோர்களும் சொந்தக் காரர்களிடம் ஒப்புவிக்கப்பட வேண்டும்.

(3) கைது செய்யப்பட்டவர்களைத் தகுந்த ஜாமீனில் விட வேண்டும்.

(4) திரும்பவும் இவைகள் நிகரா வண்ணம், கவர்ன் மெண்டாருக் குதவிபுரிய ஒரு சிறு கமிட்டி யேற்பட வேண்டும்.

அனைவரும் இந்த நிபந்தனைகளுக்குடன்பட்டு, கவர்ன்மெண்டார் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் தங்களால் கூடியவரையில் ஜனங்களைச் சாந்தப்படுத்த முயல்வதாகச் சொன்னோம். அன்று மாலையில் டனிசண்டினுடைய வீட்டில் ஒரு மீட்டிங்கு கூடிற்று. அங்கே ஷாபி யென்பவர் வந்து மேற்கூறிய நிபந்தனைகளை கவர்ன்மெண்டார் ஒப்புக்கொள்வது அத்தியாவசியமென்று முக்கிய காரியதரிசி (Chief Secretary)யிடம் சொன்னதாகவும் அவர் அவர்களைக் கவனித்துக் கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதாகவும் சொன்னார். அதே மீட்டிங்கில்தான் ஹரிகேசன் லாலுக்கும் நவாப் பேட்டி ஆலிகானுக்கும் (Fateh Ali Khan) ரௌலட் மசோதாவையாமோதித்து பத்திரிகையில் நவாப் எழுதிய விஷயமாய் ஒரு சிநேகபாவத்தோடு கூடின வாக்குவாதம் நேர்ந்தது. இதைக் கவர்ன்மெண்டாருடன் சேர்ந்துழைப்பவர்களுக்கு ஒரு பெரிய இகழ்ச்சியாகப் பேசப்பட்டது.

ஏப்பிரல் மாதம் 13-ந் தேதி—ஷாபி யென்பவர் கவர்ன்மெண்டு முக்கிய காரியதரிசியினுடன் பேசி வந்ததின் பயன் ஒன்றுமேற்படவில்லை. ஹார்தாலும் முடியவில்லை.

மறுபடியும் 13உ ஒரு பொது ஜனக்கூட்டம் கூடப்பட்டது. சிப்பாய்களை நகரெங்கும் நிற்கவைத்தது ஜனங்களுக்கு வெறுப்பைக் கொடுத்தது. சிப்பாய்கள் நகரை விட்டகன்றாலொழிய ஹார்தால் முடிவடையாது போலத் தோற்றியது. டிபுடி கமிஷனர் அந்த மீட்டிங்கிற்கு வந்தார். அவரிடம் குறைகளைக் கூறவும் அவர் லெப்டினண்ட் கவர்னரிடம் சொல்வதாக வாக்களித்துச்சென்றார். அவர் இரண்டு மணி நேரஞ் சென்றவுடன் திரும்பிவந்து கடைகள் உடனே திறக்கப்படா விட்டால் நகர் ராணுவச் சட்டத்தின் கீழிருக்கும்படி நேரும் என்றுரைக்கவும்,

சாம்பாஜ் கடைகளைத் திறக்கவேண்டுமென்று எவ்வள வெடுத்துச் சொன்னாலும் பிரயோசனப்படவில்லை. மறு நாள் ஹரிகேசன்லால் என் வீட்டிற்கு வந்து முக்கியமான வியாபாரிகளில் 50 பேர்கள் கடைகளைத் திறக்கச் சம்ம தித்ததாகவும், அனைவரும்சென்று மற்றகடைகளையும் திறக் கும்படி ஜனங்களைக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்றும், பேசிக்கொண்டிருக்கையில் எங்கள் டிபுடி கமிஷணர் பார்க்க விரும்புவதாகக் கடிதம் வரவும் நாங்கள் சென் றோம். அங்கே ஹரிகேசன்லால், டனிசண்ட், சாம்பாஜ் டட்டா இம்மூவரையும் தேசப் பிரஷ்டஞ் செய்யும்படி வந்த கவர்ன்மெண்டாரின் உத்திரவு படிக்கப்பட்டது. அவர்களை யழைத்துச் சென்ற ஒரு மணி நேரங்கழித்து என்னை விடுவித்தனர். 15-ந் தேதி ஷாபி (Shafi) முதலானவர்கள் எவ்வளவோ பிரயாசப்பட்டும் கடைகள் திறக்கப்படவில்லை. ஹார்தால் முடியவில்லை. ராணுவச் சட்டமும் அமுலுக்கு வந்தது.

## ராணுவச் சட்டம்.

எனக்குத் தெரிந்தவரையில் லாகூரில் ராணுவச் சட்டம் ஏற்படுத்துவதற்கு ஒருவித காரணமுமில்லை. கவர்ன்மெண்டிற்கு விரோதமாக ஒருவிதமான கலகமு மேற்படவில்லை. ரௌலட் மசோதாவை எதிர்ப்பதற் காக வரம்பு கடந்து ஜனங்கள் நடந்து கொள்ளவுமில்லை. இப்படி ஏற்பட்ட கிளர்ச்சிக்கு இணங்கியே கவர்ன் மெண்டார் முதலாவது சட்டத்தில் சில பாகங்களை நீக்கி சட்டத்தையும் மூன்று வருஷம் வரையில் மாத்திரமிருக் கும்படிக்கும் தீர்மானித்தார்கள். இரகசியப் போலீஸ் இன்ஸ்பெக்டரொருவரை மசூதியில் தாக்கியதைத் தவிர்த்து வேறொன்றுமே நிகழவில்லை. 10-ந் தேதி

ஹார்தால் ஏற்பட்டதற்கும் அது வெகு நாள் நீடித்த தற்கும் காரணங்கள் பின் சொல்லப்படுவதேயாகும்.

(1) 10-ந் தேதியும் 12-ந் தேதியும் சிறுவர்களைச் சுட்டது.

(2) இறந்தவர்களின் சரீரங்களையும் காயம்பட்டவர்களையும் சொந்தக்காரர்களிடம் ஒப்புவிக்காமை.

(3) காயம்பட்டோரைச் சரிவர கவனிக்கவில்லையென்ற வதந்தி.

(4) ஜனங்களுக்கு வெறுப்பைக் கொடுக்கும்படி நகரில் சிப்பாய்களை வருத்தியது.

(5) அமிர்தசரஸில் ஜலியன்வாலாவில் நடந்த கொடூரச் செயல்கள் இராஜதானி யெங்கும் ஜனங்களுடைய கோபத்தை அதிகரித்தது.

(6) 14-ந் தேதி லாலா ஹரிகேசன்லால் முதலானவர்களைத் தேசப்பிரஷ்டம் செய்தது.

(7) முனிஸிபல் கமிஷணர்கள் தங்களுக்கிருந்த செல்வாக்கை யிழந்தது.

(8) டிபுடி கமிஷணர் தகுந்த சாமர்த்தியத்துடன் நடந்து கொள்ளாமை.

(9) லெப்டினெண்ட் கவர்னர் அனுதாபங் காட்டாமை.

(10) லெப்டினெண்டு கவர்னர் பின்வரும் காரணங்களால் ஊர்ப்பழியைப் பெற்றமை.

(a) பாங்கியின் கடுமையான நிலைமையில் கொஞ்சங்கூட அனுதாபங்காட்டவில்லை (b) டெல்லிக் கலகக் கேசில் ஜனங்களால் குற்றமற்றவனென்று நம்பப்பட்ட லாலா ஹான்ஸ் ராஜின் குமாரனைச் சம்பந்தப்படுத்தித் தீபாந்தர சிக்ஷை விதிக்கப்பட்டு, சீப் கோர்ட்டில் (Chief Court)

அப்பீல் செய்ய தண்டனை குறைக்கப்பட்டது. (c) தேசப் பாதுகாப்புச் சட்டத்தைக் கண்டபடிபிரயோகித்தனர் (d) சண்டைக்கு ஆள் சேர்ப்பதற்கும் யுத்த கடன் வாங்குவதிலும் அனுஷ்டித்த மார்க்கங்கள் ஜன விருப்பத்திற்கெதிராக விருந்தன. (e) காந்தி முதலான தலைவர்களைத் தேசத்துள் வரவிடாது தடுத்ததோடு அனேக பத்திரிகைகளையும் வரவிடவில்லை. (f) மீட்டிங்குகள் பலவற்றை நடக்கவிடாது சர் மைக்கேல் ஓட்வியர் தடுத்தனர். (g) தேச சீர்திருத்தஞ் செய்யும் விஷயங்களில் அவர் கொஞ்சங்கூட பிரியப்படவில்லையென்று ஜனங்களுக்கு அபிப்பிராயம் ஏற்பட்டது (h) சர் மைக்கேல் ஓட்வியர் கௌன்ஸிலில் 7-ந் தேதி ஜனத்தலைவர்களை நிந்தித்துக் கடுமையாகப் பேசிப் பயங்காட்டினர். (j) தேச நன்மைக்காகப் பாடுபடுவோரை ஏதோ காரணங்கொண்டு துன்பங்களுக்குள்ளாக்குவார் என்று ஜனங்கள் பயந்தார்கள்.

ராணுவச் சட்டம் அமுலுக்கு வரவும் அனேக தேசாபிமானிகள் கைது செய்யப்பட்டனர். சிலர் விசாரிக்கப்பட்டும் சிலர் விசாரிக்கப்படாமலும் வெகு நாட்கள் சிறையில் அடைக்கப்பட்டுப் பின்பு விடுவிக்கப்பட்டார்கள். ராணுவச் சட்டத்தில் முக்கியமாய்க் கவனிக்கக் கூடியவைகளாவன:

(1) இரவு குண்டு 8 மணிக்குப் போட்டவுடன் ஜனங்கள் அவரவர்கள் வீட்டிற்குட் செல்லவேண்டும். இந்த உத்திரவின்படி கீழ்படிந்து நடவாதோர் சவுக்காலடிக்கப்படுவார். (2) வண்டிகளையும் பைஸைகில்களையும் அதிகாரிகள் கைவசப்படுத்திக் கொண்டனர். (3) மின்சார விளக்குகளும் விசிறி (Punkah)களும் கைவசப்படுத்தப்பட்டன. (4) ரெயில்வேயில் பிரயாணஞ் செய்வதில் நிர்ப்பந்தங்கள் ஏற்பட்டன. (5) காலேஜ்களில் படிக்கும் மாணாக்கர்களின்

பெயர்கள் ஒரு நாளைக்கு நான்குதரம் கூப்பிடப்பட்டு அவர்கள் ஆஜராக வேண்டியிருந்தது—என் மகன் ஒரு நாளைக்கு நான்குதரம் பேர் கூப்பிடும் பொழுது 2½ மையிலுக்கப்பாலிருந்த பிராட்லா ஹாலில் ஆஜராக வேண்டியிருந்தது. (6) தேசாபிமானிகளின் வீடுகளில் நோட்டீஸ்கள் ஒட்டப்பட்டு அவைகளைப் பாதுகாக்கும் படிநேர்ந்தது. (7) கண்டபடி ஜனங்களைப் பிடித்துக் கைது செய்தனர் (8) விசாரணைகள் சுருக்கமாய் நடந்தன. கடுந் தண்டனை விதிக்கப்பட்டது. ராணுவச்சட்டம் அமுலில் இல்லாத விடங்களினின்றும் வக்கீல்கள் வரக்கூடாது என்று உத்திரவு செய்யப்பட்டது. (9) அகாரணமாக ராணுவச்சட்டம் வெகுநாட்கள் அமுலிலிருந்தது.

நானும் இச்சட்டத்தின்கீழ் பிடிக்கப்பட்டு இரண்டு மாதங்களுக்குப் பிறகு ஜெயிலிலிருந்து விடப்பட்டேன். என்னை மே மாதம் 5-ந் தேதி கைது செய்தார்கள். நான் ஐகோர்ட்டில் ஒரு கேசு நடத்திக்கொண்டிருந்தபொழுது C. I. D. ஆபீஸிலிருந்து ஒரு சீட்டுவந்தது. அதில் என்னை வரும்படி எழுதியிருந்தது. அன்று கேசு முடிந்ததும் அங்கே செல்ல, என்னைக் கைதுசெய்து செண்டரல் ஜெயிலில் அடைக்கப்பட்டேன். அந்த உத்திரவில் கர்னல் ஜான்ஸன் கையெழுத்திருந்தது. அவர் கையெழுத்துப் போட்டபின்பு என் பெயர் பதியப்பட்டிருந்தது. என்னை ஜெயிலில் தனிமையான அறைகளில் அடைத்தனர். அந்த அறைகளில் மாண தண்டனை விதிக்கப்பட்டவர்களை அடைக்கப்படுவது வழக்கம். அவைகளில் ஏற்கனவே இரண்டு பாரிஸ்டர்களும் ஹரிகேசன் லாலாவும் அடைபட்டிருந்தனர். நாங்கள் அவ்வறைகளில் 26 நாட்களிருந்தோம். பட்ட கஷ்டங்களோ சொல்ல முடியாது.

## விசாரணை.

என்பேரில் இந்தியன் பீனல்கோடு 120 B, 121, 121 A, 124 A பிரவுகளின்கீழ் குற்றஞ் சாட்டினர். பிப்ரவரி மாதம் 4-ந் தேதி, மார்ச்சு மாதம் 9-ந் தேதி 30-ந் தேதி எப்பிரல் மாதம் 6-ந் தேதிகளில் நடந்த மீட்டிங்குகளில் நான் ஜனங்களுக்கு அதிருப்தியும் கோபமுண்டாகும்படி பேசினதாகவும், எப்பிரல் மாதம் 6-ந் தேதி ஓரிடத்தில் கூட்டத்தைக் கலைப்பதுபோல் நடித்து வேறொரு இடத்தில் கூட்டிப் பேசியதாகவும், எப்பிரல் மாதம் 11-ந் தேதியும் 12-ந் தேதியும் பாதுஷாஹி மசூதியில் கலகக்காரர்களுடன் சேர்ந்து அவர்களுடைய பிரதிநிதியாகத் தோன்றி கவர்ன்மெண்டாருடன் உடன்படிக்கை பேசியதாகவும், எப்பிரல் மாதம் 13-ந் தேதி ஜனங்களைக் கோபமூட்டிக் கலகம் செய்யும்படி கூடின கூட்டத்தில் சம்பந்தப்பட்டதாகவும், பழி சாட்டப்பட்டு விசாரிக்கப்பட்டேன். நான் எப்பிரல் மாதம் 6-ந் தேதி நடுப்பகலில் கூட்டத்தைக் கலைத்து மறுபடி வேறோரிடத்தில் பிரசங்கம் செய்ததாகச் சொல்வது மிகவும் அநியாயம். நாம் அப்படிக் கூட்டத்தைக் கலைப்பதில் எனக்கே அபாயம் நேரிடவிருந்தது. நான் சமயத்தில் அவ்வாறு செய்யாதிருந்தால் ஜனங்கள் சுடப்பட்டிருப்பார்கள். அக்காரணம்பற்றியே என்னை 14-ந் தேதி தேசப்பிரஷ்டம் செய்யவில்லை. என்னைக் கைது செய்ய காலதாமதமானதற்குக் காரணமும் அதுவேயாகும். இது போலவே அபாண்டமாக ஒவ்வொரு குற்றமும் என்பேரில் சாட்டப்பட்டது. விசாரணைக் கோர்ட்டைப்பற்றி முக்கியமாய் சொல்லக்கூடிய விஷயங்கள் ஒன்றுமில்லை. கோர்ட்டில் வக்கீல்களுள்பட அனைவரும் ஒருவிதமான வெறுப்பு அதிகாரிகளிடத்தில் குடிகொண்டிருந்தது.

## II

லாகூர் டாக்டர் கோபிசண்ட் (Dr. Gopi Chand கொடுத்த வாக்கு மூலம்.



நான் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியில் சேர்ந்தவன். எப்பிரல் மாதம் 6-ந் தேதி கூடின மீட்டிங்கிற்குப் போயிருந்தேன். அன்றையதினம் கடைகள் மூடப் பட்டன. நான் மீட்டிங்கு கலைவதற்கு முன்னமேயே திரும்பி வந்து விட்டேன். 9-ந் தேதி ஸ்ரீராமநவமி ஊர் கோலம் வழக்கம்போல் கடைத் தெருவுகளின் வழியாகச் சென்றது. மகம்மதியர்களும் சேர்ந்து சகோதரத்தன் மையைக் காண்பித்தனர். 10-ந் தேதி மாலையில் மறுபடி கடைகளெல்லாம் மூடப்பட்டன. அன்றிரவு 8 அல்லது 9 மணி சுமாருக்கு ஒருவர் என் வைத்தியசாலைக்கு வந்து, தான் அன்று சுடப்பட்டுக் காயமடைந்ததாகச் சொன் ஞர். 11-ந் தேதி இரவில் மறுநாள் பாது ஸாஹி மசூதியில் ஒரு கூட்டம் கூடப்போவதாக விளம்பரம் செய்யப் பட்டது. 11-ந் தேதி 11-30 மணிக்கு 12 மனிதர்கள் காயம்பட்டு என் வீட்டுக்குக் கொண்டு வரப்பட்டனர். அவர்கள் 'ஹிராமண்டி' என்ற விடத்தில் சுடப்பட்டவர் கள். 13-ந் தேதி மூன்று பையன்களும் கொண்டு வரப் பட்டார்கள்.

15-ந் தேதி ராணுவச்சட்டம் அமுலுக்கு வந்தது. சில நாட்கள் சென்றதும் காயம்பட்டு என்னிடத்தில் சிகிச்சை செய்வதற்காக வந்தவர்களுடைய பேர்களை எழுதிக் கொடுக்கும்படி போலீசார் கேட்க நான் அதற் கிணங்கினேன். இப்படி பல தடவைகளில் கொடுத்தேன். ரூப்லால், என்ற ஒரு இரும்பு வியாபாரி வைத்தியத்திற்

காக ஒரு குழந்தையை அழைத்து வந்தார். 8 மணிக்குப் பிறகு இரவில் ஒருவரும் வெளியே செல்லக்கூடாதென்ற உத்தரவால் வைத்தியம் பார்க்கக் கூடாமல் தன்னுடைய மற்றொரு குழந்தை நோய் அதிகமாகி உயிரிழந்தது என்றுரைத்தார். லாகூரில் ராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டு வந்ததற்கு ஒருவித நியாயமுமில்லை. ஜனங்களுக்குப் பயங்காட்டவோ, தேசாபிமானக் கிளர்ச்சியை ஒழிக்கவோ, அல்லது வேறு காரணங்களைக்கொண்டு சிறையிடக் கூடாதவர்களைப் பிடித்தடைப்பதற்கோ இச் சட்டம் பிரயோகிக்கப்பட்டது. நான் காயம்பட்ட 17 பேர்களுக்கு வைத்தியம் செய்தேன். அவர்கள் தங்கள் தங்கள் நண்பர்களாலும் பந்துக்களாலும் கொண்டு வரப் பட்டவர்களே யன்றி போலீசாராலல்ல. நான் காயம் பட்டவர்களின் பெயர்களைப்போலீசாரிடத்தில் குறித்துக் கொடுக்கவும் அவர்கள் கைது செய்யப்பட்டனர். அவர்களில் ஒருவர் குண்டு காயத்தினால் இறந்தனர். குண்டுகள் பிரயோகப்படுத்தப்படவில்லை யென்று ருசுப்படுத்துவதற் காக இன்னொருவரைக் கைது செய்யாமல் விட்டனர். 10-ந் தேதி முதல் 17-ந் தேதி வரையில் நிகழ்ந்த ஹார்தாலுக்கும் கவர்ன்மெண்டாரின் மேலிருந்த அருவருப்புக்கும் ஜனங்கள் டாலின்டன் (Tollinton) என்பவர் அந் நகரிலிருந்திருந்தால் ராணுவச்சட்டம் அமுலுக்கு வந்திராதென்று சொன்னார்கள். ஜனங்களைச் சுட்டதினால் சர் மைக்கேல் ஓட்வியர் லெப்டினெண்டு கவர்னராயிருக்கும் வரையில் கடைகளைத் திறப்பதில்லையென்று அவர்கள் சொல்லிக்கொண்டார்கள். அப்படிக் கடைகளை மூடி வைப்பதால் சர் மைக்கேல் ஓட்வியர் வேலையினின்றும் நீக்கப்படுவாரென்று ஜனங்கள் நம்பியிருந்தனர்.

## III

லாகூர் காலேஜில் எம். ஏ. (M. A.) பரிக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்த ஷாம்ஜி மோஹன் என்பவர் கொடுத்த வாக்குமூலம் :



சென்ற ஏப்பிரல்மீ 10உ மகாத்மா காந்தியைப் பிடித்து விட்டதாகச் சங்கதி எட்டியதும் கடைகளெல்லாம் மூடப்பட்டன. லாகூர் நகரவாசிகள் அனர்க்களி என்றவிடத்திலிருந்து கூட்டமாகவந்து கிங் எட்வர்டு தோட்டத்தை (King Edward Square) யடைந்தனர். “மகாத்மா காந்திக்கு ஜே!” என்று கத்தினார்கள், நான் என் சிநேகிதர்களுடன் பந்து விளையாடுமிடத்தில் பேசிக்கொண்டிருந்தேன். காந்தியைப் பிடித்துக் கைது செய்ததாக நான் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்ததால் ஜனங்கள் அங்கு கூடினதற்குக் காரணம் நன்குணர்ந்தேன். நாங்களனைவரும் கூட்டத்திற் கருகாமையில் சென்றோம். மகாத்மா காந்தியினுடைய உருவப்படத்தை தூக்கிக்கொண்டு மாலை (Mall) நோக்கிச் சென்றுகொண்டிருந்தார்கள். நானும் என்ன நடக்குமென்றறிய ஆவலுடன் கூடவே சென்றேன். Y. M. C. A. கட்டிடத்தினருகில் என்னுடைய காலேஜ் பிரின்ஸிபால் நின்றுகொண்டிருந்தார். நான் அப்பொழுது சரியாக உடுத்திக்கொண்டிராமையால் அவர் பார்க்காமலிருக்கும்படி மற்றொரு பக்கமாய்ச் சென்றேன். போஸ்டாபீசிற்கும் தந்தியாபீசிற்குமிடையில் பிரிட்டிஷ் சிப்பாய்கள் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களைக் கண்டதும் கூட்டத்தில் பெரும்பாலோர் திரும்பிவிட்டார்கள். ஆயினும் சுமார் 300-பேர்கள் நிற்காமற்சென்றனர். கொஞ்சதூரம் செல்லவும் ஒருபோலீஸ்

உத்தியோகஸ்தர் அக்கூட்டத்தினிடையில் வந்து "இக் கலகக்காரர்களுக்குத் தலைவர் யார்?" என்று வினவ; நான் "இவர்கள் கலகக்காரர்களல்ல; தலைவர் யாருமில்லை" என்று விடையளித்தேன். அவர் கேட்ட மற்ற கேள்வி களுக்கு நான் அனைவரும் ஒருவிதமான கெட்ட எண் ணத்துடன் செல்லவில்லையென்றும் தங்களால் அபி மானிக்கப்பட்டத் தலைவரைப் பிடித்ததினாலுண்டான துக் கத்தைக் காண்பிக்கும்படி மாலுக் (Mall) குச் செல்லுவ தாகவும் சொல்ல அவர் போய்விட்டார். கூட்டம் ஜோல் ஜர் கிளப்பினருகில் செல்லவும் இரண்டு ஐரோப்பியர்கள் கைகளிற் கழிகளைப்பற்றிக்கொண்டு 10 அல்லது 12 இந்தி யச் சிப்பாய்களுடன் எங்கள் முன்னால் தோன்றினார்கள். அவர்கள் அவ்வழி செல்லக்கூடாதென்று சொல்லியும் ஜனங்கள் கேட்கவில்லை. சிலர் அவர்கள் அனுமதி கேட் டும் மறுதளித்துவிட்டதால், நான் திரும்பிவிட்டேன்.

நான் நாலைந்து தப்படிகள் வரவும் ஜனங்களை அடிக் கும் சப்தம் காதில் விழுந்தது. உடனே ஜனங்கள் ஓட ஆரம்பித்தனர். அச்சமயம் சிப்பாய்களிடம் அவ்விரு ஐரோப்பியரும் ஏதோ இரகசியமாகச் சொல்வதைக் கண் டேன். சிப்பாய்கள் இரண்டொரு தடவைகள் மயங்கிப் பின்பு சுட ஆரம்பித்தனர். நான் இப்படி சுடப்படுவார் களென்று நினைக்கவேயில்லை. சற்று நேரம் பிரக்ஞையற் றிருந்தேன். சுட ஆரம்பித்துக் கொஞ்ச நேரமானதும் கூட்டங் கலைந்து விட்டது. நான் மெதுவாகப் போய்க் கொண்டிருக்கையில், பக்கத்திலிருந்த குழியில் ஒருவர் திடீரென்று வந்து விழுந்தனர். நான் திடுக்கிட்டுக் கீழே குனிந்து பார்க்கையில் அவர் பிராம் டட் (Brahm Datt) என்பவரென்றறிந்தேன். குனிந்து அவரைப் பார்த்துக்கொண்டிருக்கையில் என் கழுத்தில் ஒரு எரிச்ச

லேற்படத் திரும்பிப் பார்த்தேன். என்னையும் சுட எத்தனித்தார்கள். தெய்வாதீனமாகத் தப்பினேன். அச் சமயம் இன்னொருவர் வந்து சேர, நாங்களிருவரும் அவரை மெதுவாகத் தூக்கிக்கொண்டு போக எத்தனித் தோம். ஆனால் முடியவில்லை. ஜனங்கள் எங்கு சென்றார் களென்று எனக்குத் தெரியாது. அங்கே ஒரு மோட்டார் வண்டி நிற்கவும் அதிலிருப்பவரை உத்திரவு கேட்டு பிராம் டட்டை அதில் ஏற்றிக்கொண்டு மேயோ ஆஸ்பத்திரி போய்ச் சேர்ந்தோம்.

ஆஸ்பத்திரியில் ஒரு தாழ்வாரத்தின் வழியே செல் லும்பொழுது இரண்டொரு நர்சுகள் (Nurse) கண்டு என்னவென்று வினவ நாங்கள் அவர் சுடப்பட்டுக் காய மடைந்தாரென்றுரைத்தோம். உடனே ஏதோ சொல்லி விட்டு அவர்கள் போய்விட்டனர். அங்கிருந்த மெடிகல் மாணாக்கர்கள் எங்கள் வேண்டுகோளிற்கிணங்கி சிகிச்சை செய்ய ஒப்புக்கொண்டார்கள். மாடியில் ஒரு அறைக்குள் கொண்டு சேர்த்தோம். நான் பின்பு வீட்டிற்குத் திரும்பி னேன். என்னுடைய துணிகள் இரத்தக் கரைகள் பட் டிருந்தன.



IV

லாகூர் "இந்தியன் கேசுகள்" ஆபீசைச் சேர்ந்த ஆஸ்குவித் (Asquith) என்பவர் கொடுத்த வாக்கு மூலம்.



லாகூர் நகரில் ராணுவச்சட்டம் அமுலில் இருந்த பொழுது நான் நேரில் கண்டதைச் சொல்லுகிறேன்:—

நான் ஒரு பென்ஷனர். லாகூரில் நகரில் மகம்மது லட்டீப் தெருவில் "இந்தியன் கேசுகள்" ஆபிஸில் இருப் பது வழக்கம். நான் ஆபீசிலிருந்து திரும்பி வரும்பொழு

தாவது போகும்பொழுதாவது என்னை ஒருவரும் ஹிம்சிக்கவில்லை. ஜனங்கள் எப்பொழுதும் நடந்து கொண்டாற் போலவே யிருந்தனர். ஹார்தால் நிகழ்ந்த காலத்தில்கூட ஜனங்கள் ஒரே மாதிரியாகவே யிருந்தனர். மாறுதல் ஒன்றும் ஏற்படவில்லை. ராணுவச் சிப்பாய்களின் தலைவர் என்னை ஒருநாள் நகரில் பிரவேசிக்க வேண்டாமென்றும் ஏதேனும் தொந்திரவேற்படுமென்றும் எச்சரித்தார். நான் அதைக் கவனியாமல் வழக்கம்போல் சென்று வந்தேன். ஹார்தால் ஏற்பட்டிருந்த காலத்திலும் ராணுவச் சட்டம் அமுலுக்கு வந்தபின்னும், ஐரோப்பியர்கள் செல்வது அபாயகரமென்று எனக்குத் தோன்றவேயில்லை. ஏப்பிரல் மாதம் 10-ந்தேதி அமிர்தசரஸில் நிகழ்ந்தனவைகளைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.



V

லாகூரில் டனிசண்டின் பிள்ளையாகிய லாலா காளுராம் என்பவர் கொடுத்த வாக்குமூலம்.



ஏப்பிரல் மாதம் 17-ந் தேதி மாலை 5-30 மணிக்கு சப் இன்ஸ்பெக்டர் சர்தார் தோடா சிங் என்பவர் இன்னும் சிலருடன் என் ஹோட்டலுக்கு வந்து என் ஆபீசை பரிசோதிக்க வேண்டுமென்றார். இரண்டு பெரிய மனிதர்களை வைத்துக்கொண்டு தேடியதில் ஒன்றும் விசேஷமாக அகப்படாமையால், 'போலீசார் ஒன்றையும் எடுத்துச் செல்லவில்லையென்று எழுதி அதில் என்னைக் கையெழுத்துப் போடும்படி சொல்ல நான் அப்படியே செய்தேன். உடனே என்னை சௌக்கண்டி வழியாக அழைத்துச் சென்று அங்கிருந்த இருவருடன் அனார்க்களி போலீஸ் டேஷனுக்குப் போனார்கள். அங்கு போனதும் நான்

மயக்கமடைந்தேன். மயக்கம் தெளிந்து பார்க்க கைவிலங்குடனிருந்தேன். என்னை ஒரு அறையிலடைத்தார்கள். அன்றிரவே "டிரிபியூன்" பத்திராதிபராகிய காளிநாத்ராயும் அங்கு அடைக்கப்பட்டார். மறுநாள் காலையில் என்னையும் காளிநாத்ராயையும் இன்னும் சில பையன்களையும் விலங்கிட்டுத் தந்தியாபீஸிற் கழைத்துச்சென்றனர். பிறகு செண்டிரல் ஜெயிலில் அடைத்தனர். நான் அங்கே எப்பிரல் மாதம் 26-ந் தேதி வரையிலிருந்தேன். பிறகு என்னை அனர்க்களி போலீஸ்டேஷனுக்கு அழைத்து வந்தனர். தினந்தோறும் அங்கிருந்து 10, 12 பேர்கள் ஒன்ருய் விலங்கிட்டு நகரிலுள்ள ஜெயிலுக்கு அழைத்துச் செல்வது வழக்கம். 30-ந் தேதி வழக்கப்படி போலீஸ்டேஷனுக்குச் செல்லாமல் எங்களை C. I. D. ஆபீஸிற்கு அழைத்துச்சென்று அங்கிருந்து விடப்பட்டோம். அன்றயதினமே எங்களுக்கு ஜாமீன் கொடுக்க வந்திருந்தவர்களைப் பிடித்து, ராணுவச் சட்ட அதிகாரிகளிருந்த பஞ்சாப் கிளப்பிற்கு அழைத்துச் சென்று அங்கே விதிக்கப்பட்ட அபராதங்களைச் செலுத்தினபிறகு விடுவித்தார்கள்.

ஒரு கான்ஸ்டேபிள் சொல்லும் வார்த்தைகளைக் காரணமாகக் கொண்டே இவர்களைப் பிடித்ததாகக் கேள்வியுற்ருேம். நான் என்ன குற்றஞ்செய்தேனென்று எனக்கு இன்னும் விளங்கவில்லை. என்னைப் பிடித்து வைத்திருந்ததால் ரூ 3000 க்கு மேல் நஷ்டம் உண்டாயிற்று. நான் செண்டிரல் ஜெயிலில் வயிறுகடுப்பு நோயால் கஷ்டப்பட்டேன். எனக்காக என் உறவினர் பணம் கட்டியிருந்தும் நான் பலதடவைகள் கேட்டும் எனக்கு பால் கொடுக்கவில்லை.

## VI

லாகூர் ஹோமியோ பதிக் மெடிகல் காலேஜ் (Homœpathic Medical College) பிரின்ஸிபால், டாக்டர் கே. ஸி. ஹிதேஷி (K. C. Hiteshi) என்பவர் கொடுத்த வாக்கு மூலம்.



(1) சண்டை நிகழ்ந்தபொழுது எல்லா இந்திய க்ஷத்திரிய சபையின் ஆள்சேர்க்கும் காரியதரிசியாகயிருந்தேன். என்னுடைய தூண்டுகோலின் பேரில் காலேஜிலிருந்து 60 மாணுக்கர்களும் உபாத்தியாயர்களும் சண்டையிற் சேரச் சித்தமாயிருந்ததைக் காலேஜ் கமிட்டியார் கவர்னர் ஜனரலுக்குத் தெரிவித்தனர்.

(2) மறுபடி ஜூன் மாதம் 6-ந் தேதி எழுதிய லெட்டரில் சுமார் ரூ 16,000 பெருமான காலேஜ் வைத்திய சாலையையும்; காயம்பட்ட சிப்பாய்களுக்கு 10 படுக்கைகள் போடக்கூடிய காலேஜ் ஹாஸ்டலேயும், ரூ 6000 பெருமான மோட்டார் வண்டியையும் காலேஜ் மானேஜருடைய பங்களாவையும் கவர்ன்மெண்டார் வசம் ஒப்புவிக்கத் தயாராகவிருப்பதாகக் கமிட்டியார் அறிவித்தனர். இவைகளை அங்கீகரித்துக்கொண்டு கவர்ன்மெண்டார் மிகவும் புகழ்ந்தனர்.

(3) அப்படி யிருந்தும் என்னைக் கைதுசெய்து மற்ற தேசாபிமானிகளுடன் லாகூர் கலகக் கேசில் சம்பந்தப்படுத்தி விசாரிக்கத் தொடங்கினர்கள்.

(4) நான் ஏப்பிரல்மாதம் 6-ந் தேதி நடந்த மீட்டிங்கிற்குப்போயிருந்தேன். அன்று நகரெங்கும் விரதமனுஷ்டிக்கப்பட்டது. ரௌலட் மசோதாவினுல் ஜனங்களுக்கேற்பட்டிருந்த கோபத்தைத் தணித்துச் சக்ரவர்த்தி பெருமானிடத்தில் நம்பிக்கை வைக்கும்படிக்கு ஒரு கவி

யெழுதி அதைப்படித்தேன். இரகசியப் போலீசாருக்காக (C. I. D) ரிபோர்ட்டு எடுத்தவர், சிலவரிகளை நீக்கி எழுதிக்கொண்டு போகவே அர்த்தபேத மேற்பட்டது. கேசு நடந்தபொழுது C. I. D. தாப்பில் விசாரித்த சாக்ஷிகள் அதை ஒப்புக்கொண்டனர். "பஞ்சாபி" "டிரிபியூன்" முதலான பத்திரிகைகளில் நான் மீட்டிங்கில் படித்த கவிமுழுமையும் வெளிவந்திருந்தது. அப்பத்திரிகைகள் கோர்ட்டார்முன்பு தாக்கல் செய்யப்பட்டன.

(5) இதில் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. எப்பிரல்மாதம் 6-ந் தேதி நடந்த மீட்டிங்கில் மூன்று இரகசிய போலீசார்சேர்ந்து ரிபோர்ட்டு எடுத்தனர். அதைத் தாக்கல் செய்யும்படி நான்கேட்க, அவைகளைக் கிழித்தாய் விட்டதென்று பதில் சொல்லிவிட்டார்கள்.

(6) ஹார்தால் (Hartal) நடந்தபொழுது மிஸிஸ் கர்ஷா என்ற ஒரு ஆங்கிலோ இந்தியஸ்திரீயின் பார்வையின்கீழ் ஏழைகளுக்காகச் சாப்பாட்டுச்சத்திரம் ஏற்பட்டிருந்தது. கவர்ன்மெண்டார் தாங்களே ஏற்பாடு செய்ய ஆரம்பித்தவரையில் அச்சத்திரம் நடந்துவந்தது. கவர்ன்மெண்டாபீசுகளிலுள்ள பியூன்களும், வண்ணான்களும் அந்த மிஸிஸ்கர்ஷா சத்திரத்தில் சாப்பிட்டதால் வேலை நிறுத்தஞ் செய்யாதிருந்தனர். இப்படி பொது நன்மைக்காக ஏற்பட்ட சத்திரத்தைக் குறித்துப் போலீஸார் கெடுதலாக ரிபோர்டு செய்ததாகத் தெரிந்தது.

(7) என்னை எப்பிரல்மாதம் 16-ந் தேதி கைதுசெய்தனர். என்கைகளில் விலங்கிட்டு ஜெயிலி லடைத்தனர். விசாரணை தொடங்குவதற்குமுன் கைவிலங்குடன் கடுமையான வெயிலில் போலீஸ் கோர்ட்டிற்கு நடத்தியழைத்துச் சென்றார்கள்.

(8) ஒரு தனிமையான இடத்தில் சுமார் 1½ மாதம் அடைபட்டிருந்தேன். என்னை வெளியில் விடுவதே யில்லை. ஜெயில் டாக்டரிடத்தில் "டாக்டர்! என்னைக் கொன்றுவிடுங்கள், அல்லது வைத்தியம் செய்யுங்கள்" என்று சொல்லவும், ஒருநாளைக்கு 15-நிமிஷநேரம் வெளியில் உலாவுவதற்கு அனுமதி யளித்தனர்.

(9) ஜெயிலிலிருந்தமுதல் 15 நாட்களில் என்மனைவியும் சகோதாரும் ஒருவாரத்திற் கொருதடவை இரண்டொரு நிமிஷங்கள் வரையில் என்னுடன் பேசும்படி விடப்பட்டனர்: பிறகு 24 நாட்களாகத் தினந்தோறும் என்மனைவி நடந்துவந்து என்னைப் பார்க்கும்படி கேட்டும் விடவில்லை.

(10) என்னை ஜெயிலில் அடைத்து அதனால் பல சௌகரியங்கள் குறையவும் வியாதியடைந்து ஆஸ்பத்திரியில் 10 நாட்களிருக்கும்படி நேர்ந்தது.

(11) முதலில் சிலதினங்களுக்கு ஜெயிலாகாரமும் உடையுமே எனக்குக் கொடுக்கப்பட்டன. நான் தரையிலேயே தூங்கும்படி நேர்ந்தது.

(12) இம்மாதிரியான செய்கைகள் பல நடந்ததற்கும் காரணம் நான் ஏதோ குற்றஞ்செய்துவிட்டதாலல்ல. ஆனால்ராணுவச்சட்டத்தைப்பிரயோகித்தவர்களுக்குஇரக்கம் என்பதேயில்லாமல் இந்தியர்களுடைய ராஜபக்தியை நன்குணராமையே—பிரிட்டிஷ் ராஜாங்கத்திற்கு விரோதமாக ஏதோ செய்வதாக அவர்கள் நினைத்துக்கொண்டு ஜனங்களைக் கஷ்டப்படுத்தினார்கள்.

## IV

பாரிஸ்டர் லாலா ஹரிகேஸன்லால் கொடுத்த வாக்கு மூலம்.



சென்ற 25-ந்து வருஷகாலமாகப் பஞ்சாப் கவர்ன்மெண்டில் பிசுனகுணமுள்ள உத்தியோகஸ்தர்களே அதிகாரம் செலுத்திவந்தார்கள். ஜனங்களுக்கும் அதிகாரிகளுக்கும் சுபாவமான ஒற்றுமையின்றி யிருந்தது. ஒருவருக்கொருவர் அவநம்பிக்கைப்படுவது அதிகரித்தது. பஞ்சாபில் ஜனங்கள் தங்கள் குறைகளை எடுத்துச் சொல்லிக் கொள்வதில் மற்ற இராஜதானிகளிலுள்ளவர்களைப்போல் முன்னேற்றமடையாததால், யாராகினும் குற்றங்குறைகள் சொல்வதற்குத் தலைப்பட்டால் அதிகாரிகள் அவர்மேல் வெறுப்படைவது சகஜமாயிருந்தது. அதோடு அக்குற்றங்களைப் பேராசையென்றே கருதினார்கள். ஜனத்தலைவர்களைப் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டிற்கு விரோதிகளென்று பாவித்து ஒன்றிலும் சேர்த்துக்கொள்ளாமலே யிருந்தார்கள். பஞ்சாபில் பிறந்துவளர்ந்த ஒருவகுப்பினர் எல்லா விஷயங்களிலும் ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களின் அபிப்பிராயப்படியே நடந்து விருத்தியடைந்துகொண்டிருந்தனர். 1907ஹு லாலா லஜபதிராயைத் தேசப்பிரஷ்டம் செய்தபின்பு ஜனங்களுக்கும் அதிகாரிகளுக்கும் ராசியுண்டாக்க எண்ணிப் பாடுபட்டேன். அப்பொழுதுதான் முதன்முதல் பஞ்சநதிதீரவாசிகளைப்பற்றியும் மற்றவிஷயங்களைப்பற்றியும் முற்றிலும் தவரான அபிப்பிராயம் அவர்கள் மனத்திற் குடிகொண்டிருப்பதை அதிகாரிகளிடமிருந்தே யறிந்தேன். சர் லூயி டேன் (Sir Louis Dane) என்பவர் லெப்டினெண்டு கவர்னராக இருந்தபொழுது நான் சட்டசபையில் மெம்பராகி அதன் காரணமாகப்

பன்முறை சர் லூயி டேனுடன் சம்பாஷிக்க நேரிட்டது. அவர் அங்கிருந்தவரையில் எங்களிருவருக்கும் சிநேக பாவம் நீடித்திருந்தது. அவர் என்னுடன் பேசும்பொழுது சிலசமயங்களில் அதிகாரிகள் ஜனத்தலைவர்களைப்பற்றி கெட்ட அபிப்பிராயத்துடனிருந்த காரணத்தால் தன்னால் ஒன்றும் செய்யமுடியவில்லையென்று சொல்லியிருக்கிறார். நானே பல ஐரோப்பியரின் வெறுப்பிற்குப் பாத்திரமானேன். அதற்குக்காரணம் சர் கார்டன் வாக்கர் (Sir Gordan Walker) என்பவர் சொல்லியபடி 'நான் உண்மையான பெரிய சுவதேசி' என்று அவர்கள் என்னைப் பாவித்ததேயாகும். நான் ஒரு வித்தியாசாலைக்கும் "டிரிபியூன்" என்ற பத்திரிகைக்கும் பொறுப்பாளியா யிருந்தேன். அனேக வியாபார தொழிற்சாலைகளில் டைரக்டராகவும், 72 பிரிவுகளுடன் கூடின பீபிள்ஸ் பாங்கிக்கு (People's Bank of India) அமிர்தசரஸ் பாங்கிக்கு (Amritsar Bank Ltd.) இவைகளின் மானேஜிங் டைரக்டராகவுமிருந்தேன். இந்தியர்களாலேயே ஏற்படுத்தப்பட்ட முதல் இன்சூரன்ஸ் கம்பெனிக்கு (Life Insurance Company) சேர்மெனாகவிருந்து, இந்தியர்களுக்கு ஐரோப்பிய வழிகளையனுஷ்டித்துக் காட்டினேன். நான் இந்த மாகாணத்தில் மூன்று காங்கிரஸ் மகாநாட்டைகூட்டி நடத்தினேன். நான் இரண்டொரு பொது நன்மைக்கென் றேற்பட்ட சபைகளின் அக்கிராசனாதிபதியானேன். லாலா லதிபதிராய் லாகூர் முனிஸிபல் மெம்பராகக்கூடாதென்று டிபுடி கமிஷணர் தடுத்தபொழுது நான் லாலா லஜபதி ராய் பக்கம் ஒட்டு கொடுத்தேன். அப்பொழுது டிபுடி கமிஷணர் என்னைப்பார்த்து " இந்த இராஜதானியில் உம்மால் செய்யக்கூடாத விஷயமென்ன இருக்கிறது? ஹரிகேஸன்லால்! தயால் சிங் (Dyal Singh College) கா்லேஜிற்காக ஸ்தலம்

வாங்க எங்களுடைய உதவியை நீர் நாடுவானேன்?" என்றார். ஆகையால், லெப்டினெண்ட் கவர்னரே சொல்லியிருந்துங்கூட டிபுடி கமிஷணர் அந்த ஸ்தலத்தை வாங்காமலிருந்துவிட்டார். சர் மைக்கேல் ஓட்வியர் லெப்டினெண்டு கவர்னராக வந்தபொழுது ஐரோப்பிய வியாபாரிகளுக்காவது அதிகாரிகளுக்காவது என்பேரில் நல்ல அபிப்பிராயம் கிடையாது.

சர் மைக்கேல் ஓட்வியர் வந்ததும் முதலில் பன்முறை கேட்டுக்கொண்டும் என்னைப் பார்க்கச் சம்மதிக்கவில்லை. இரண்டாவது சர் லூயி டேன் அவர்களால் நான் 1913-ம் வருஷத்திய நாணய கமிட்டிமுன் சாக்ஷி சொல்லும்படி தேர்ந்தெடுக்கப்பட்டு நான் இங்கிலாந்திற்குப் போகச் சித்தமாக இருக்கையில், என்னைச்சாக்ஷியாக நியமித்ததை ரத்து செய்துவிட்டார். என்னுடைய வர்த்தக விஷயங்களிலும், பீபிள்ஸ் பாங்கிற்கு விரோதமாகவும் ஏற்பட்ட கிளர்ச்சிக்கு அநுதாபங் காட்டியது அவருடைய மூன்றுவது செய்கையாகும். அதிகாரிகளின் ஆதரவைக்கொண்டு கிளர்ச்சி யேற்பட்டதால் பீபிள்ஸ் பாங்கிற்கு ஒருவிடத்திலிருந்து உதவியில்லாமல் 1913வரு செப்டம்பர் மாதம் 9ந் தேதி பாங்கி மூடப்பட்டது. ஜாயிண்ட் ஸ்டாக்கு கம்பெனிகளின் ரிஜிஸ்டிராரும் (Registrar of Joint Stock Companies) இன்னும் பல உத்தியோகஸ்தர்களும் என்னைக் கஷ்டத்திற்குள்ளாக்க மிகவும் பாடுபட்டனர். பாங்கியின் வரவு செலவுகளைத் தீர்ப்பதற்கு வங்காளத்திலிருந்து மியூஜன்ஸ் (Meugens) என்பவரையும், பாங்கை மூடுவதற்காக ஒரு ஸ்பெஷல் ஜில்லா ஜட்ஜையும் நியமித்தார் தார்கள். பாங்கியில் பணம் போட்டிருந்தவர்களில் ஒருவரைக் கொண்டு அதை மூடுவதற்காக மனுக்கொடுக்கும்படி செய்ய வெகுபிரயாசைப்பட்டனர்.

திரும்பவும் அதை நடத்துவதற்காக எடுத்துக் கொண்ட முயற்சிகள் உத்தியோகஸ்தர்களால் தடுக்கப் பட்டன. (இவைகளை ரூபிக்கவேண்டிய பத்திரங்கள் இருக்கின்றன.) நான் அடிக்கடி பாங்கி கடன்தீர்க்க வல்லமையுடையதென்று எடுத்துச் சொல்லியதற்கு, இப் பொழுது அனைவரும் தங்கள் தங்கள் தொகை முழுவதை யும் பெற்று நூற்றுக்கு 25 வீதம் வட்டியும் அடைந்தார்க ளென்பதே அத்தாக்ஷியாகும். இப்படிக் கட்டாயத்தால் இவ்விரண்டு பாங்கிகளும் மூடப்படவும் இவைகளின் சார் பாக எற்பட்டிருந்த பல பாங்கிகளும் மூடப்பட்டன. சர் மைகேல் ஓட்வியருடைய கவர்ன்மெண்டாருக்கு, பாங்கியின் உண்மையான நிலைமையைப்பற்றி மியூஜன்ஸ் என்பவரே எடுத்துச்சொல்லியுங்கூட அவர்கள் ஒருவித மான உதவியும் புரியாமலிருந்தார்கள். இப்படி கண்ணி யத்துடனும் மிகவும் உபயோகமாகவும் நல்ல நிலையிலு மிருந்த ஒரு பெரிய அருந்தொழில் சர் மைகேல் ஓட்விய ரின் தூண்டுகோளால் அழிவடைந்தது. பஞ்சாப் சரிதை யில் இம்மாதிரி நடந்த செயல்கள் பிரிட்டிஷ் ராஜாங்கத் திற்கு ஒரு பெருங்குறைவு.

பஞ்சாப் கவர்ன்மெணடார் பன்முறை என்னைக்கேட் டுக்கொள்ளவே நான் என் மனச் சாக்ஷிக்கு விரோதமாக இந்திய தொழிற் கமிஷன் முன்பாக ஸ்டேட்மெண்டு (Statement) கொடுத்தேன். அதன் காரணமாக நான் கவர்ன்மெண்டாருக்கு நண்பனாகவில்லை. ஏனெனில், என்னைப் பிற்பாடு காரணமின்றி தேசப்பிரஷ்டம் செய்து, அபாண்டமான பொய்க்குற்றஞ் சாட்டி அதற்காகப்பொய் சாக்ஷிகள் தயார்செய்ததே போதுமானது. என்னைக் காங் கிரஸ் மகாசபையின் பிரதிநிதியாக இங்கிலாந்து செல்வ தற்கு நியமித்ததும், சர் மைக்கேல் ஓட்வியருக்கு என்

பேரிலிருந்த வெறுப்பு அதிகரித்தது. அதோடு பஞ்சாப் மாகாண கான்பரன்சிற்கு என்னையே அக்கிராசனுதிபதியாகத் தேர்ந்தெடுத்தார்கள். ஆதலால் அவருடைய கொடூரமான பிரிட்டிஷ் தன்மையற்ற செயல்களையும் சண்டைக்காக ஆட்களும் திரவியமும் சேர்ப்பதற்காக அநுஷ்டித்த வழிகளையும் நான் விடாது எடுத்துச் சொல்வேன் என்று அவர் பயந்தார் என்று நான் நம்புவதற்கு இடமிருக்கிறது. நான் ரௌலட் மசோதா, தேச சீர்திருத்தங்கள் இவைகளின் நிமித்தம் ஏற்பட்ட கிளர்ச்சிகளில் வெகு நாட்களாகச் சம்பந்தப் படாமலிருந்துங்கூட மேற்கூறியபடி என்னை நடத்தியதற்கு முன்னே சொன்னதைத் தவிர வேறு ஒருகாரணமும் என்னுல் சொல்ல முடியவில்லை.

டிபுடி கமிஷணர் என்னை இன்னும் பலருடன் வரும்படி சொன்னபொழுது நான் போகாமல் ஏதோ காரணத்தைச் சொல்லிவிட்டேன். ஆனுல் 11ந் தேதியன்று ஜனங்களைச் சுட்டதாகக் கேள்வியுற்றபின் நான் தலையிடுவது அவசியமென்று கருதி டிபுடி கமிஷணரிடம் சென்றேன். அன்று முதல் 14ந் தேதி என்னைக் கைது செய்வதற்காக வரவழைத்ததற்கு முன்னுல் நான் ஹார்தாலை முடிவிற்குக் கொண்டுவரவும் ஜனங்களுக்கும் அதிகாரிகளுக்கும் ஒருவர்க்கொருவர் நம்பிக்கையுடனிருக்கும்படி செய்யவும் மிகவும் கஷ்டப்பட்டேன். அதற்காகக் கவர்ன்மெண்டாரின் வந்தனத்தை எதிர்பார்த்திருக்கையில், தீபாந்தரசிக்ஷையும் பெற்று என் சொத்துகளையும் இழந்தேன்.

இதை முடிப்பதற்கு முன்பாக 15-ந் தேதி காலையில் நான் வைசிராய் அவர்களுக்கு (Viceroy) மியன் வாலாவிலிருந்து என்னைப் பஞ்சாப் கவர்ன்மெண்டார் தங்க

ளுடைய அக்கிரமச் செயல்களை ஜல்லண்டரிலும் (Jullundur) இங்கிலாந்திலும் பகிரங்கப்படுத்துவேனென்றெண்ணி வேறு காரணமின்றி ஐஸாகேல் (Isa Khel) என்றவிடத்திற்கு என்னை அழைத்துச் செல்வதாக ஒரு தந்தி கொடுத்தேன். விசாரணை நடந்தபொழுது என்னுடைய வக்கீல் கனம் மோட்டிலால் நீரு என்பவர் மூலமாய் கேசைப்பற்றியும் சாக்ஷிகள் தயார் செய்ததைப்பற்றியும் இன்னும் மற்ற விஷயங்களைப்பற்றியும் இந்தியா மந்திரிக்கு நேரில் தந்திகள் கொடுத்தும் ஒரு பயனும் விளையவில்லை. தந்திச் செலவு மாத்திரம் சுமார் ரூ 10,000யும், விசாரணைக்காக ரூ 12,000 யும் அப்பீலில் பெருந்தொகையும் செலவழிந்தது. கணக்குகள் இன்னும் சரிவரப் பார்த்து முடிக்கவில்லை. என் தொழிலிழந்தமையால் மூன்று லக்ஷத்துக்குக் குறையாமல் நஷ்டமடைந்தேன். இதல்லாது நானும் என்னைச் சேர்ந்தவர்களும் இக்காலங்களில் அடைந்த துயரத்தையும் கஷ்டங்களையும் சொல்லி முடியாது.



## VIII

### வாக்குமூலங்கள்—லாகூர் (காசூர்)

வக்கீல் மோல்வி அப்துல் காதர் (Maulvi Abdul Kader) கொடுத்த வாக்குமூலம்.



சென்ற ஐரோப்பிய யுத்தத்தில் வெற்றியடைந்தும் சாமான்களின் விலையும் பணக்கஷ்டமும் அதிகரித்தது. இந்தியாவில் மற்ற கவர்ன்மெண்டுகளைப் போலல்லாது பஞ்சாப் கவர்ன்மெண்டார் ஜனங்களிடம் இரக்கமென்பதில்லாமல் எல்லா விஷயங்களிலும், கொடுமையான வழி

களை யனுஷ்டித்தனர். நமது பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு சண்டையில் ஜெயமடைந்ததின் காரணமாக ஜனங்கள் தங்கங்களைப் பெருந்தன்மையுடன் நடத்துவார்கள் என்று எதிர் பார்த்திருக்க, ரௌலட் மசோதா ராஜப்பிரதிநிதி சட்டசபையின் பொதுஜன மெம்பர்களின் விருப்பத்திற் கெதிராகச் சட்டமாக்கப்பட்டது.

காசூர் ஒரு வியாபாரஸ்தலம். ஆங்கு ஆங்கிலக் கல்வி கற்றோர் மிகவும் கற்றோர் மிகவும் சிலர்தான். ஆதலால் இராஜாங்கத்திற்கடுத்த விஷயங்கள் ஒன்றும் நடக்க வில்லை. அக்காரணத்தாலேயே ஒரு காங்கிரஸ் சபையின் பிரிவுகூட அங்கு ஏற்படாமலிருந்தது. ஏப்பிரல் மாதம் 6-ந் தேதி, மார்ச்சு மாதம் 30-ந் தேதிகளில் நடந்த ஹார் தலில் இந்நகர் சம்பந்தப்படவேயில்லை. அந்த தினங்களில் மற்ற விடங்களில் நடைபெற்ற விஷயங்களைக் காசூர் ஜனங் கள் கேட்டுப் பின் அவமான மடைந்தனர். தாங்களும் அம்மாதிரி விஷயங்களில் சம்பந்தப்படாதிருந்தால் லாகூர் அமிர்தசரஸ் இந்த விடங்களிலுள்ள வியாபாரிகள் தங் களைத் தள்ளிவிடுவார்களோவென்று சிந்திக்கலானார்கள். பிறகு அமிர்தசரஸில் ஜனத்தலைவர்களைப் பிடித்து கைது செய்த விஷயமும், ஏப்பிரல் மாதம் 11-ந் தேதி பஞ்சாப் கவர்ன்மெண்டார், மகாத்மா காந்தியை அம்மாகாணத் திற்குட் வரக்கூடாதென்று விடுத்த உத்திரவு காசூரில் எட்டவும் அன்று ஹார்தால் ஏற்பட்டது. ஒவ்வொரு கடையும் மூடப்பட்ட போதிலும் ஒருவிதமான சச்சரவு இல்லாது அமைதிவாகவே அன்றையதினம் சென்றது. அன்று மாலை 5 மணிக்கு ஒரு மீட்டிங்கு நடைபெற்றது.

12-ந் தேதியன்றும் ஹார்தால் நீடித்தது. ஜனங்கள் கூட்டங் கூட்டமாக நகரெங்கும் சுற்றினார்கள். அனைவரும் 10 மணிக்கு முன்னாலேயே, ரெயில்வேஸ்டேஷனிலுள்ள

கடைகளை மூடும்படி செய்யவும், லாகூர் அமிர்தசரஸ் இவ் விடங்களிலிருந்துரெயிலில்வரும் பிரயாணிகளுக்குத்தங்கள் ஊரிலும் ஹார்தால் ஏற்பட்டிருப்பதை அறிவிக்கும்படிக் கும் ஸ்டேஷனை நோக்கிச் சென்றார்கள். ஸ்டேஷனை யடைந்ததும் ஐரோப்பிய வழக்கத்தை யனுசரித்து பூச் சட்டிகளையும் ஜன்னல் கண்ணாடிகளையும் உடைக்கத் துவக்கினார்கள். போலீசாரின் சிறுமையைக்கண்டு மனத் திடமடைந்து டிக்கட்டுகள் விற்றபணத்தைக் கொள்ளை யடித்து தந்திக் கம்பிகளையும் அறுத்து விட்டார்கள். பின்பு ரெயில்வே பாலத்தில் இரண்டு வண்டித்தொடர்கள் நிற்கவும் அதை நோக்கியோடினார்கள். உள்ளூர் அதிகாரி களுக்காவது அல்லது மற்ற ஜனங்களுக்காவது ரெயில்வே ஸ்டேஷனில் நடந்த விஷயங்கள் தெரியவேயில்லை. சர்தார் சாஹிப் கண்டாசிங் என்ற பென்ஷன் பெற்ற போலீஸ் இன்ஸ்பெக்டர் என் வீட்டிற்கு வந்து இந்த அமளியைப் பற்றிச் சொன்னார். அப்பொழுது நான் சில வக்கீல் களுடனும் பேசிக்கொண்டிருந்தேன். நாங்களனைவரும் ஸ்டேஷனுக்கு விரைந்தோடினோம். என்னால் அதிக தூரம் ஓடக் கூடாமையால் நான் சிறு மரப்பாலத்தில் நின்றுகொண்டு அதை தீக்கிரையாக்கவிடாது பாது காத்தேன். கூட்டத்தில் பலர் தந்தியாபீசை நோக்கிச் செல்லக்கண்டு நான் அவர்களைப் பின்பற்றினேன். போகும்போது இரண்டு ஐரோப்பியர்கள் காயமடைந்த தாகத் தெரிந்தது. உடனே ஸ்டேஷனுக்குத் திரும்பிச் சென்றேன். நான் அங்கு போவதற்கு முன்பே அதிகாரி கள் வந்திருந்தனர். நான் கண்ணால் பார்த்தும் காதால் கேட்டுமறிந்த விஷயங்கள் பின்வருமாறு.

(1) ஜனங்கள் ஸ்டேஷனுக்குச் சென்றதின் எண் ணம் நான் மேற்கூறியதே.

(2) ரெயில்வே பிளாட்பாரத்தில் போலீஸார் ஒருவருமில்லை.

(3) ரெயிலிலிருந்து சிப்பாய்கள் பிளாட்பாரத்தில் இறங்கி ஜனங்களை நோக்கிச் சுட ஒருவன் காயமடைந்தான். இதுவே அவர்கள் கொலையுண்டதற்குக் காரணமென்று எனது அபிப்பிராயம்.

(4) நான் மரப்பாலத்தினின்றும் கலைத்த ஜனங்கள் நிராயுதபாணிகளாகவே யிருந்தனர்.

(5) ரெயில்வே பிரயாணிகளும் கல் எறிவதிலும் கொள்ளை யடிப்பதிலும் மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டார்கள்.

(6) பிறகு கலகக்காரர்கள் நகர் திரும்பி போஸ்டாபீஸையும் முனிசிப் கோர்ட்டையும் தீ மூட்டி தாசிலையும் எதிர்த்தார்கள். சுடப்பட்டவுடன் கலைந்து சென்றுவிட்டார்கள். இவ்விரண்டு இடங்களிலும் நிகழ்ந்தனவைகளை யான் நேரில் பார்க்கவில்லை.

(7) சுடப்பட்ட பிற்பாடு சிப்பாய்கள் வந்திறங்குமுன் நகர் அமைதியடைந்தது. 15-ந் தேதி வரையில் ஒரு விசேஷமுமில்லை. அமிர்தசாஸ் லாகூர் இவ்விடங்களில் ஹார்தால் முடிவடையவில்லை என்ற சமாசாரம் காசூரில் எட்டியுங்கூட கடைகள் திறக்கப்பட்டு வியாபாரங்கள் நடக்கத் தொடங்கின. 15-ந் தேதி ஜனத்தலைவர்கள் ராணுவச்சட்ட அதிகாரியை யணுகி காசூரில் சென்ற மூன்று தினங்களாக எல்லாம் அமைதியாயிருந்தமையால் ராணுவச்சட்டம் அமுலுக்குக்கொண்டு

வர வேண்டியதில்லை யென்று எடுத்துச் சொல்ல அவர் அதற்கிணங்கி பதில் சொல்லவும் ஜனங்கள் திருப்தி யடைந்தனர்.

16-ந் தேதி ஜனங்களின் விருப்பத்திற்கும் எதிர்பார்த்ததற்கும் விரோதமாக ராணுவச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. வக்கீல் லாலா தண்பத்ராயும் கைது செய்யப்பட்டு எங்கேயோ அழைத்துச் செல்லப்பட்டார். ஜனங்களைத் தாழ்மைப்படுத்தவும் தண்டிக்கவுமே ராணுவச்சட்டம் காசூரில் ஏற்படுத்தினர்கள்.

என்னை ஏப்பிரல் மாதம் 19-ந் தேதி பிடித்தார்கள். கை விலங்குடன் என்னைக் கடைத்தெரு வழியாகவும் மற்ற தெருக்கள் வழியாகவும் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து தாசிலுக்கு அழைத்துச் செல்வது வழக்கம். என்னை என்ன குற்றத்திற்காகப் பிடித்துக் கைது செய்தார்களென்று எனக்கு இதுவரையில் தெரியவில்லை. நான் குற்றவாளியென்று குறிப்பிடுவதற்காக ஐரோப்பிய சிப்பாய்கள் ரெயில்வே உத்தியோகஸ்தர்கள் இன்னும் மற்றவர்கள் முன்பாகவும் நிறுத்தப்பட்டபோது ஒருவனும் சொல்லப்படவில்லை. ஏப்பிரல் மாதம் 29-ந் தேதி மார்ஸ்டன் (Marsden) என்பவர் என்னை ரெயில்வே ஸ்டேஷனுக்கழைத்து "நீர் குற்றவாளியல்ல. உம்மைக் கைது செய்ததற்கு நாங்கள் வருத்தப்படுகிறோம்" என்று சொல்லி என்னை விடுவித்தார்.

விசாரணைகர்த்தாக்கள் ஜனங்களைப் பலவந்தப்படுத்தாமலிருந்ததும் லஞ்சம் வாங்கவில்லை யென்பதும் உண்மையே யானலும், அவசரமாய் விசாரித்ததின் காரணமாக பலர் அகாரணமாகக் கைது செய்யப்பட்டு பின்னர் விடுதலை யடைந்தார்கள். என் மகன் மியான் மொகிதீன் B. A. அப்படி விடுதலை யடைந்தவர்களிலொருவன். வீடு

கள் தோறும் யாதொரு முகாந்தரமுமின்றி பரிசோதனை செய்தார்கள். மே மாதம் முதல் தேதியன்று, ஸ்திரீகளும் குழந்தைகளும் தவிர மற்ற ஒவ்வொருவரும் செயில்வேஸ்டேஷனை யடைந்து கொடும் வெயிலில் மாலை 2 மணி வரையில் தலையில் ஒன்றுமில்லாது உட்கார்ந்திருக்க வேண்டியதாயிற்று. சாக்ஷிகள் முன்பு அந்நிலைமையில் அழைத்துக்கொண்டு போவதற்கென்றே அப்படிச் செய்யப்பட்டது. இந்தியர்கள் வெள்ளையர்களைக் கண்டால் சலாம் செய்ய வேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டனர். தவறுதலாகவோ அல்லது அறியாத் தன்மையாலோ சலாம் செய்யாதிருந்தவர்களைச் சவுக்காலடித்தும் மூக்கால் தரையில் கோடு கிழிக்கும்படி செய்தும் சிறையிலடைத்தும் பலவிதமாகத் தொந்திரவு செய்தார்கள். சிலப் பள்ளிக்கூட சிறுவர்களை ஒரு பொதுவான விடத்தில் கட்டி சவுக்காலடிக்கும்படி செய்தார்கள். சாதுக்களையும் பெரிய மனிதர்களையும் தினந்தோறும் செயில்வெ ஸ்டேஷனுக்கு வருவித்து வெயிலில் உட்கார்ந்து கொள்ளும்படி செய்தார்கள். என்னால் ரூபிக்கக் கூடிய விஷயங்கள் இன்னும் எவ்வளவோ நடந்தன.



## IX

### வாக்குமூலங்கள்—காசூர்.

காசூர் முனிஸிபல் கமிஷனர் ஷேயிக் அமீனுதீன் (Sheik Amin-ud-din) கொடுத்த வாக்கு மூலம்.



ஏப்பிரல் மாதம் 11-ந் தேதி ஊரில் கடைகளெல்லாம் மூடப்பட்டன. அன்று மாலையில் ஒரு மீட்டிங்கு நடந்தது: நான் அதற்குப் போயிருந்தேன். பிரசங்கங்கள் அமெரிக்

கையாகவே யிருந்தன. ரௌலட் சட்டத்தை ரத்து செய்யும்படி தீர்மானங்கள் ஏற்பட்டு இந்திய கவர்ன்மெண்டிற்கும் பஞ்சாப் மாகாண கவர்ன்மெண்டிற்கும் தந்தி யடிக்க ஒப்புக்கொண்டார்கள். ஏப்ரல் மாதம் 12-ந் தேதி ஹார்தால் முடிவடையாமலிருந்தது எனக்கு ஆச்சரியமாயிருந்தது.

சுமார் 9 மணிக்கு ஜனங்கள் கூட்டமாக என்னுடைய தொழிற்சாலைக்கு வந்தார்கள். அப்பொழுது லாலா கோகுல் சண்டும் கான் ஷர்நிவாஸ்கானும் என்னுடனிருந்தார்கள். நாங்கள் ஜனங்களைக் கோவிலுக்கும் மசூதிக்கும் சென்று தொழும்படி கேட்டுக்கொண்டு மகாத்மா காந்தியின் போதனையை அவர்களுக்கு ஞாபகப்படுத்தினோம். உடனே அனைவரும் சென்றுவிட்டார்கள். என்னுடைய மில் (Mill) ஸ்டேஷனிலிருந்து $\frac{1}{3}$ மைல் தூரத்திலிருக்கிறது. கொஞ்சநேரம் சென்று ரெயில்வே ஸ்டேஷனில் நடந்த அமளி காதில் படவும் நான் அங்கு சென்றேன். கைகாட்டி மரத்திற்கப்பால் ஒரு வண்டித் தொடர் நிற்கக்கண்டேன். நான் ஸ்டேஷனுள் இரு ஐரோப்பிய சிப்பாய்கள் காயம்பட்டுக் கிடப்பதாக அறிந்ததும் போய்ப்பார்த்தேன். ஒருவர் காயம்பட்டிறந்து தண்டவாளங்களுக்கருகாமையில் கிடப்பதையும் கண்டேன். ஒரு ஆங்கிலேய குடும்பத்தை ஜனங்கள் சுற்றிக்கொண்டிருப்பதாகக் கேள்வியுற்றதும், அவர்களைக் காப்பாற்றும்படி நான் அதிகாரிகளுடன் அங்கு சென்றேன். நகரில் தீ மூண்டெறிவதைக் கண்டேன். நாங்கள் நகரை நோக்கிச் செல்லவும் போஸ்டாபிஸ் எறிந்துகொண்டிருந்தது. முனிஸிபல் உத்தியோகஸ்தர்களும் மற்றவர்களும் தீயை அணைத்துக்கொண் டிருந்தார்கள். அச்சமயம் ஜனங்கள் ஆஸ்பத்திரியை நோக்கிச் சென்றிருப்பதா யுணர்ந்து

கானும் ரஹீம் பக்ஸ் என்பவரும் விரைந்தோடி கூட்டத்தைக் கலைத்து அங்கு விட்டகலும்படி செய்தோம். பிறகு சுமார் 1 மணிக்கு நான் ஆகாரமுண்பதற்கு வீடு சென்றேன். மறுபடியும் வெளியெங்கும் சுற்றினேம். நகரமெங்கும் அமைதி யேற்பட்டுவிட்டது. ஒரு விசேஷமும் நடக்கவில்லை. அப்பொழுது சிப்பாய்கள் வந்திறங்கினர். திரும்பவும் கலகம் ஏற்படுமென்று நினைக்கவே காரணமில்லை. 13, 14, 15-ந் தேதிகளில் ஒரு விதமான விசேஷமும் நிகழவில்லை.

16ந் தேதி ராணுவச் சட்டம் அமுலுக்கு வந்ததாக விளம்பரம் செய்யப்பட்டது. இதற்காக ஜனங்களை டவுன் ஹாலில் (Town Hall) வரவழைத்து, விளம்பரம் செய்தவுடன், 70 வயதுள்ள பழைய வக்கீல் லாலா தண்பத்ராயை கைது செய்தார்கள். குற்றப் பத்திரிகை படிக்கப் படவில்லை. அவரிடம் ஒன்றுமே சொல்லவில்லை. ஜனங்களுக்கு அவரைப் பிடித்த காரணமும் தெரியாது. அதுமுதற்கொண்டே எல்லா முனிஸிபல் கமிஷணர்கள் தினந்தோறும் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போகவேண்டியதாயிற்று. அங்கே காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரையில் காத்திருக்கநேரிட்டது. ஆங்கிலச் சிப்பாய்களைக் கொலை செய்ததால் எங்கள் வீடுகளைப் பாழாக்கிகுழந்தைகளைக் கொல்லப்போவதாகச் சொன்னார்கள். நாங்கள் ராணுவச்சட்ட விளம்பரப் பத்திரிகைகளை ஒட்டும்படிக்கும் அறிக்கைப் பத்திரங்கள் கொடுக்கும்படிக்கும் நியமிக்கப்பட்டோம். காசூர் வாசிகளிற் பெரிய மனிதர்களாகவிருப்பவர்களை வரவழைத்து நிந்தித்தார்கள். பலர் பாதரக்ஷையால் அடிக்கப்பட்டார்கள். பலர் சலாம் செய்யவில்லையென்று குற்றஞ்சாட்டப்பட்டு ஜெயிலிலடைபட்டார்கள். சிப்பாய்கள் நகரெங்கும் சென்று ஜனங்களை

அடித்துச் சாமான்களைக் கொள்ளையடித்து உபயோகப் படுத்தினார்கள். பலர் சவுக்காலடிபட்டார்கள். சிறுபையன் களைச் சவக்காலடித்ததை நான் நேரில் பார்த்தேன். எதற் காக அடித்தார்களென்பது ஒருவருக்கும் தெரியாது. ஏப் பிரல் மாதம் 29ந் தேதி புருஷர்கள் அனைவரும் சாக்ஷிகள் குற்றவாளிகளைத் தேர்ந்தெடுப்பதற்காக ஸ்டேஷனுக்கு வரும்படி கட்டளை பிறந்தது. அனைவரும் சென்று 5 மணி நேரம் காத்திருந்து பிறகு திரும்பினார்கள். மறுபடியும் மே மாதம் 1ந் தேதி இக் கூட்டம் கூட்டப்பட்டது. ஜனங்கள் தலையில் ஒன்றுமில்லாது வெயிலில் உட்கார்ந்து கொண்டு ஒவ்வொருவராக சில ஐரோப்பியர் முன்பாகச் செல்ல வேண்டியதாயிற்று. சாப்பாட்டிற்கு ஒருவித ஏற் பாடும் செய்யவில்லை. அப்படி உட்கார்ந்து கொண்டிருக் கையில் சப் டிவிஷனல் ஆபீசர் (Sub-Divisional Officer) ரௌலட் மசோதாவைப்பற்றிப் புகழ்ந்து அதன் இன்றி யமையாமையையும்பற்றிப் பிரசங்கம் செய்தார். பண்டிட் மாளவியாவும் மகாத்மா காந்தியும் இன்னும் மற்றோரும் நிந்திக்கப்பட்டார்கள். மே மாதம் 19ந் தேதி மோல்வி அப்துல்காதர், மோல்வி குலாம் ஜிலானி இவ்விருவரும் கைது செய்யப்பட்டார்கள். அவர்களைப் பலதினங்கள் சிறையிலடைத்துப் பின்பு விடுவித்தார்கள்.

ஒரு முக்கியமான விடத்தில் தூக்குமரம் ஸ்தாபிக்கப் பட்டது. ரெயில்வே ஸ்டேஷனிலுள்ள உத்தியோகஸ்தர் களைப் பொய்சாக்ஷி சொல்லும்படிக்குத் தூண்டினார்கள். கீழ்ப்படியாதோர் தண்டிக்கப்பட்டார்கள். அநேக சாதுக் கள் சாமான்களிருக்கும் அறையில் வேலைசெய்யும்படி கட் டாயப்படுத்தப்பட்டார்கள். சிலர் வண்டிகளிலிருந்து தோல்களை இறக்கும்படி நேர்ந்தது. ஒரு மகமதியரைப் பிடித்து ஒரு வளைந்த இரும்புக்கம்பியின்மேல் குரங்கைப்

போல் நிற்கும்படிசெய்து அவர் தலையில் ஒரு குல்லாவைப் போட்டார்கள். காப்டின் டௌடன் (Captain Doveton) தம்பட்டங்களைத் தருவித்து இந்த மகம்மதியரைச் சது ராடும்படி செய்தார். ஒரு சாதுவின் தலையில் நீர்கொண்ட ஒருஜாடியை வைத்துச் சங்கிலியால் நன்றாகக்கட்டி வெயி லில் நிற்க வைத்தார்கள். ஒருநாள் முழுவதும் அப்படியே நிற்கும்படியாயிற்று. அவர் கழுத்தில் ஒரு கயிற்றைப் போட்டு அன்று மாலையில் அவரைத் தூக்கில் மாட்டப் போவதாக அவரிடம் சொன்னார்கள். செவிடாகவும் ஊமையாகவுமிருந்த ஒரு கூலிக்காரன் அவன் உத்திரவை மீறி இரவில் சயன மணிக்குப் பிறகு வெளிவந்ததால் சுடப் பட்டு மாண்டான். ராணுவச்சட்டம் ஜூன் மாதத்தில் ஒழிந்தது.



X

காசூரில் (1) மசமத் மோரான், (2) ஜான்டோ, (3) நைஜீர், (4) சர்தார் பேகன், (5) சோனுஜான் (6) பிரோ ஜான் (7) பிஹார்ஜான் (8) அமீரு நிஸ்ஸா என்ற விபசார ஸ்திரீகள் சேர்ந்து கொடுத்த வாக்கு மூலம்.



ராணுவச்சட்டம் அமுலுக்கு வந்தபின் ஒருநாள் எல்லா விபசார ஸ்திரீகளும் தங்கள் பாடகர்களுடன் 4-மணிக்கு ரெயில்வே ஸ்டேஷனில் வந்து கூடவேண்டு மென்று உத்திரவேற்பட்டது. எல்லாரும் ஸ்டேஷனில் கூடினர். எதற்காக எங்களை வரவழைத்தார்களென்று ஒருவருக்கும் தெரியாது. சிப்பாய்கள் யாராவது வராமல் தங்கிவிட்டார்களாவென்று பார்ப்பதற்குச் சென்றார்கள். ரெயில்வே ஸ்டேஷனில் காப்டின் டவுட்டன் (Captain

Doveton) இரண்டொரு ராணுவ உத்தியோகஸ்தர்களுடனிருந்தார். ரெயில்வே பிளாட்பாரத்திலிருந்த இரும்புக் கம்பிக்கருகாமையில் எங்களை நிற்கும்படி உத்திரவிட்டார். சற்று நேரம் செல்லவும் ஒரு மனிதன் ஒரு கம்பியில் கட்டப்பட்டான். எங்களை அவனைக் கவனித்துக் கொண்டிருக்கும்படி சொன்னார்கள். போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவரும் அங்கில்லை. காப்டின் துரையவர்களே எங்களை அங்கும் வரும்படி ஏற்பாடு செய்தார். சவுக்கால் அம் மனிதனை யடித்தபொழுது எங்களால் சகிக்கக்கூடாமையால் நாங்கள் எங்கள் முகத்தை மூடிக்கொண்டோம். ஆனால் காப்டின் டவுட்டன் அந்த கொடூரமான காக்ஷியைப் பார்க்கும்படி கட்டாயப்படுத்தினார். ஐந்து மனிதர்கள் சவுக்கடிபட்டார்கள். பிறகு அடிபட்ட ஒவ்வொரு மனிதனையும் நாங்கள் பார்க்கும்படி எங்களுக்கெதிரில் நிறுத்தினார். எங்களை அக்காக்ஷி மிகவும் வருத்தியது. காம்ஷா என்பவரை அடிக்கும்பொழுது வலிதாங்காது அவர் கூக்குரலிட எங்களால் சகிக்கமுடியவில்லை. கண்களை மூடிக்கொண்டோம். காப்டின் டவுட்டன் எங்களைப் பலவந்தமாய்த்தள்ளி சவுக்கடி அடிப்பதைப் பார்க்கா விட்டால் எங்களையும் கட்டி அடிப்பதாகப் பயங்காட்டினார். எல்லா மனிதர்களையும் அடித்தபிறகு எங்களை வீட்டிற்குச் செல்ல அனுமதி யளித்தார்.



I

## வாக்குமூலங்கள்—குஜ்ரன் வாலா.

குஜ்ரான் வாலாவில் குருகுலத்திற்கு கவர்னராயிருக்கும் லாலா ரல்யாராம் சோப்ரா (Lala Ralya Ram Chopra) கொடுத்த வாக்கு மூலம்.

ஏப்பிரல் மாதம் 6-ந் தேதியன்று நகரெங்கும் ஹார்தால் ஏற்பட்டு அமைதியாகவே சென்றது. ஏப்பிரல் மாதம் 14-ந் தேதி மறுபடியும் ஹார்தால் ஏற்பட்டது. நான் 9-ந் தேதி மாலை முதல் 12-ந் தேதி வரையில் ஊரிலில்லை. ஆதலால் அப்பொழுது என்ன நிகழ்ந்ததென்பது எனக்குத் தெரியாது. 13-ந் தேதி 'வைசாக'ப் பண்டிகை தினம் நான் வழக்கப்படி பட்டணத்தின் வழியாக என்னுடைய சமாஜத்திற்குச் சென்றேன். அன்று "வைசாக" தினம் என்பதைத் தவிர்த்து வேறு ஒரு விசேஷமும் காணவில்லை. என்னுடைய முனிஷியின் மூலமாய் 14-ந் தேதியன்று ஹார்தால் ஏற்படப் போவதாக அறிந்தேன். நான் 14-ந் தேதி காலையில் வழக்கப்படி குருகுலம் சென்று 7-மணிக்கு கல்வி கற்பித்து மறுபடி 7-45 மணிக்கு ¾-மைலுக்கப்பாலுள்ள என் வீட்டிற்குச் சென்றேன். போகும்போது குஜ்ரான்வாலா ரெயில்வே ஸ்டேஷன் வடக்குக் கைகாட்டி மரத்திற்குச் சமீபத்தில் ஜனங்கள் கூட்டமாய் நிற்கக்கண்டேன். ஒரு வண்டித்தொடரும் நின்று கொண்டிருந்தது. வெளியே போகவேண்டிய வண்டித்தொடர்கள் அங்கே நிற்பது விழக்கமில்லையாதலால் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. கூட்டத்தினின்றும் கற்களை வண்டித்தொடர்மீது விட்டெறியவே நான் ஏதோ கெடுதல் நடப்பதாக எண்ணித் திரும்பவும் குருகுலம் சென்று தலைமை உபாத்தியாயரைக் கூப்பிட்டு கதவுகளையும் ஜன்னல்களையும் மூடி சேவகர்களை வெளியில் நிறுத்தி, பையன்களையும் வெளிவிடாமல் பார்க்கும்படிக்கும் ஏற்பாடு செய்து என் வீட்டிற்கு விரைவாகச் சென்றேன். மறுபடியும் குருகுலத்திற்குச் சென்று கதவைச் சாத்திவிட்டுப் பின்னால் நின்றுகொண்டு ஜன்னல்வழியாக இருப்புப்பாதையில் நடந்த விஷயங்களைக் கவனித்தேன். சிலர்

குருகுலத்திற்கு ஓடிவந்து கயிறும் எண்ணெயும் வேண்டுமென்று கதவைத் தட்டினார்கள். கதவைத் திறக்காததால் இரண்டொருவர் வெளிச்சுவற்றின் மீதேற நாங்கள் குருகுலத்திற்குள்ளிருந்து கற்களை விட்டெறிந்தோம். அனைவரும் திரும்பிவிட்டனர். 20 நிமிஷ நேரத்திற்குள் ஜனங்கள் ரெயில்பாலத்தில் தண்டவாளங்களுக் கிடையிலுள்ள மரக்கட்டைகளை எடுத்து ஒன்று சேர்த்து, பாலத்தின் இரண்டு பக்கங்களிலும் குவித்துத் தீ மூட்டினர். ஆனால் பாலத்திற்கு ஒருவிதமான கெடுதியும் நேரவில்லை. பாரிஸ்டர் லாப் சிங் (Labh Singh) வக்கீல் தின் மோட் (Din Mohd) இன்னும் அநேகரும் சமயத்தில் அங்கு வந்திராவிடில் பாலத்தை மறுபடியும் தீ மூட்டிப் பாழாக்கியிருப்பார்கள். லாப் சிங் குருகுலம் வந்து கதவைத்தட்டினார். உடனே கதவு திறக்கப்பட்டது. அச்சமயத்தில் ஒரு ஐரோப்பிய போலீஸ் ஆபீசரும் சில சேவகர்களும் பாலத்தை நோக்கி வரவும் ஜனங்கள் ஓடுவதைக் கண்டேன். தீயைக் குருகுலத்திலுள்ளோரும் மற்றவர்களும் அணைத்துவிட்டனர். போலீசார்கள் தீயை யணைப்பதில் ஒருவித உதவியும் புரியவில்லை. போலீசார்கள் அங்கு விட்டுச் செல்லவும் நானும் ராவ் சாஹிப் திவான் சண்ட் சேதியும் (Rao Sahib Dewan Chand Sethi) மறுபடியும் போலீசார்கள் வரும் வரையில் அங்கேயே யிருந்தோம். நான் என் வீட்டிற்குத் திரும்புவதற்குமுன் என் மகன் பி. ஸி. சோப்ரா வென்பவன் கச்சிபாலம் தீப்பற்றி எறிவதாகக்கேள்வியுற்று அங்கே சென்றான். சுமார் 10-மணிக்கு நான் திரும்பி ரெயில்வேஸ்டேஷனுக்கு என் மகனைப் பார்ப்பதற்காகச் சென்றேன். கச்சி பாலத்திலிருந்து சுடப்பட்ட சப்தம் காதில் விழுந்தது. சற்று நேரம் சென்றவுடன் என் மகனைக்கண்டு விசாரிக்க கச்சி பாலம்

தீப்பற்றி எரிவதாக அறிந்தேன். நான் ரெயில்வே வழி இன்ஸ்பெக்டரைக் கண்டு (Way Inspector) அவருடைய டிராலி (Trolly)யை என்னிடம் ஒப்புவித்து பாலத்திற்குப் போகும்படி எனக்கு ஒரு உத்தரவுங்கொடுக்கும்படி கேட்டேன. அவர் அப்படி உத்திரவு கொடுக்கலாமோ வென்று சந்தேகப்பட்டார். உத்திரவில்லாமல் எனக்குப் போக இஷ்டமில்லை. ரெயில்வே ஸ்டேஷனில் போலீஸ் சூப்பரின்டென்டெண்டு சில போலீஸ் கான்ஸ்டேபில்களுடன் பிளாட்பாரத்தில் வந்து சேர்ந்தார். லாப்சிங் என்பவரும் அங்கிருந்தார். ஸ்டேஷனுக்கு வெளியில் ஜனங்கள் ஒரு பெரியகூட்டங்கூடி ஸ்டேஷனை நோக்கிகற்களை எறிந்தனர். நானும் லாப்சிங்கும் ஜனங்களையடக்க முயன்றோம். எங்களுடைய வேண்டுகோளுக் கிணங்கி அவர்கள் கலையும் சமயம், சுமார் 2000 ஜனங்கள் ஸ்டேஷனுக்கெதிரில் வெளி மைதானத்தில் கூடினர். ஜனங்களுடைய நோக்கம் பயப்படத்தக்கதாக விருந்தது. போலீசார்களும் துப்பாக்கிகளுடன் ஜனங்களுக்கெதிரில் தயாராக நின்றார்கள். இந்திய உத்தியோகஸ்தர்களும் நானும் இன்னும் பல வக்கீல்களும் சுட வேண்டாமென்று போலீசாரிடம் சொல்லிவிட்டு, கூட்டத்திற்கும் போலீசாருக்கு மிடையில் நின்றுகொண்டோம். அப்படியிருக்கையில் போஸ்டாபீஸ் தீப்பற்றி யெறிவதாக சமாசாரம் வர, சில போலீஸ் கான்ஸ்டேபில்கள் அங்கு அனுப்பப்பட்டார்கள். ஜனங்கள் போலீசார் சென்றாலொழிய தாங்களும் விட்டகல மாட்டோமென்று பிடிவாதமாக விருந்தனர். போலீஸ் சூப்பரின்டென்டெண்டு அங்குவிட்டுப் போகும்படி கேட்டுக்கொண்டும் அதற்கிணங்கவில்லை. 2-மணி சுமாருக்கு கச்சேரி தீப்பற்றி எறிவதாகத் தெரிந்தது. அவர் உடனே சில போலீஸ்

கான்ஸ்டேபிள்களை ஸ்டேஷனில் நிறுத்திவிட்டு மற்றவர்களுடன் கச்சேரிக்குச் சென்றார். அரைமணி நேரத்திற்குள் கூட்டமும் கலைந்து விட்டது. நான் அசிஸ்டெண்டு கமிஷனர் லாலா அமர்நாத் என்பவருடன் பிளாட்பாரத்தில் பேசிக்கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு காற்றுக் கப்பல் (Aeroplane) உயரப்பறந்து கொஞ்ச நேரம் கழிந்ததும் சென்றுவிட்டதைக் கண்டேன். ரெயில்வேஸ்டேஷனில் ஜனக்கூட்டமேயில்லை. கட்டிடங்கள்மாத்திரம் அணைப்பாரில்லாமல் எரிந்துகொண்டிருந்தன. நான் ரெயில்வே உத்தியோகஸ்தர்களுடன் சில ஸ்டேஷனைச் சேர்ந்த சாமான்களைக் காப்பாற்றுவதில் உதவிபுரிந்தேன். 3-மணிக்கு நான் என் வீடு சென்றேன். மூன்று நான்கு காற்றுக்கப்பல்கள் உயரப்பறந்தன. அவைகளிற் சில கீழ்நோக்கி வெகு சமீபமாக வந்தன. வெடிகுண்டுகளை அவைகளினின்றும் எறியும் சப்தம் என் செவிகளைத் துளைத்தது. முக்கால் மணி நேரம் இது நடந்தது. பிறகு அவைகள் அகன்றுவிட்டகன்றன. நான் எங்கும் வெளியில்போய் சுற்றிப் பார்க்கவில்லை. ஏப்ரல் வாதம் 15-ந் தேதி கர்னல் ஓப்பிரியன் (Col. O' Brien) சில போலீஸ் அதிகாரிகளுடன் மோட்டார் வண்டியில் போவதையும் ரெயில்வே ஸ்டேஷனில் சிப்பாய்கள் வந்து கூடுவதையும் கண்டேன். நான் ரெயில்வே பிளாட்பாரத்திற்குச் சென்றேன். அச் சமயத்தில் ஹக்கீம் ராய், அமர்நாத், திவான்மங்கள் சென், லாப் சிங், மேலா ராம் இவர்களைப் பிடித்துக் கைது செய்ததைக் கண்டேன். பிறகு ஒருவர் என்னிடம் வந்து என்னைக் குருகுலத்திற்கு மானேஜராகிய லாலா ரல்யா ராம் என்பவரா என்று வினவ, நான் "ஆம்" என்று விடையளித்தேன். உடனே என்னைக் கைது செய்து மற்ற

ஐந்துபேர்களுடன் சேர்த்து சங்கிலி கொண்டு கட்டினார்கள். என்னைப் பிடித்தபின்பு என்ன நடந்ததென்று நான் விரித்துரைக்க வேண்டியதில்லை. ஏனெனில், கைது செய்யப்பட்ட மற்றவர்களுக்கு என்ன நடந்ததோ அதுவே எனக்கும் நிகழ்ந்தது. விசாரணையில்லாமலே மே மாதம் 21-ந் தேதி என்னை விடுவித்தனர். 21-பேர்களுடன் என்னையும் சேர்த்து ஒரே சங்கலியாற் கட்டி நடுவீதிகளின் மார்க்கமாய் எங்களை யழைத்துச் சென்றார்கள். லாகூருக்கு எங்களைத் திறந்த வண்டியில் அழைத்துச் சென்றனர். கைதிகளை அழைத்துச் செல்லும் வண்டியில் எனக்கிடமில்லாமல் இழுத்துச்செல்லப்பட்டேன். அதனால் நான் மிகத்துன்பமடைந்தேன்.



II

குஜரன்வாலாவில் கல் கண்டிராக்டர் ஹரிகிஷன் தாஸ் (Harkishan Das) கொடுத்த வாக்குமூலம்.



ஏப்பிரல் மாதம் 14-ந் தேதி குஜ்ரன்வாலா ரெயில்வே ஸ்டேஷனில் என்னை வேலைக்கு நியமித்தார்கள். "வைசாகி" பண்டிகை வேடிக்கைபார்ப்பதற்கு வாசீராபாத் போவதற்காகப் பலஜனங்கள் வந்திருந்தனர். ஏழு மணிக்குப் பிறகு லாகூரிலிருந்து வாசிராபாத் போவதற்கு ஒரு வண்டித்தொடர் வந்து சேர்ந்தது.

ரெயில்வே பாலத்தில் ஒரு கன்றுக்குட்டி தொங்கவிட்டிருப்பதாகப் பிளாட்பாரத்தில் ஒரு வதந்தி ஏற்பட்டது. ஜனங்கள் உடனே மன வெழுச்சியடைந்து குருகுலத்திற்குச் சமீபத்திலிருந்த ரெயில்வே ஸ்டேஷனைப் பார்க்கச் சென்றார்கள். கொஞ்சநேரத்திற்குப் பிறகு ரெயில்வே பாலம் தீப்பற்றி எறிவதாகச் சமாசாரம் எட்டி

யது. பாலம் எறிந்துகொண்டிருந்ததால் வண்டித்தொடர் செல்லாமல் திரும்பி ஸ்டேஷனுக்கு வந்தது. அதற்குள்ளாக போலீஸ் அதிகாரிகளும் மற்ற உத்தியோகஸ்தர்களும் அங்குவந்து சேர்ந்தார்கள். ரெயில்வே ஸ்டேஷனுக்கு மறுபக்கத்திலிருந்த பாலமும் தீப்பற்றி எறிவதாகச் சமாசாரம் வந்தது. அவ்விடத்தில் சுடும் சப்தம் கேட்டது. ஜனங்களிற் பலர் ஸ்டேஷனுக்குத் திரும்பினார்கள். போலீஸ் சூப்பரின்டன்டெண்டு ஜனங்களின்மேற் சுட்டதாகச் சொன்னார்கள். ஸ்டேஷனில் எல்லாவிடத்திலும் சிப்பாய்களை நிறுத்தினார்கள். கொஞ்சநேரத்திற்குப் பிறகு போஸ்டாபீஸ் தீப்பற்றி எறிந்தது. போலீசார் போஸ்டாபீசிற்கு எதிரிலிருந்தும் தீமூட்டினோர்களைத் தடுக்கா திருந்தனர். போஸ்டாபீசைக் கொளுத்திய பின்பு கூட்டம் ஸ்டேஷனையடைந்தது. போலீசாரும் மற்ற உத்தியோகஸ்தர்களும் ஸ்டேஷனில் போதுமான பேர்கள் இருந்தார்கள். ஜனங்கள் ரெயில்வே ஸ்டேஷனையும் கொளுத்தினார்கள். சில போலீஸ்காரர்கள் சுடப்படுவோமென்ற பயமில்லாமலே ஜனங்கள் தீமூட்டவேண்டுமென்று வெளிப்படையாகவே சொன்னார்கள். சுருக்கமாக ஜனங்கள் தீமூட்டுவதற்காக ஏற்படுத்தப்பட்டாற்போலும் போலீசார் ஒரு தமாஷாக அதைப்பார்த்துக்கொண்டிருந்தாற்போலு தோற்றியது.

சில தினங்கள் சென்றதும் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஒருவர் விசாரணைக்காக வந்தார். ஸ்டேஷனிலிருந்த ஒவ்வொருவரையும் அழைத்துப் பெபரையும் விலாசத்தையும் எழுதிக்கொண்டார். அவர் எங்களையே குற்றவாளிகளைக் குறிப்பிட்டால் நலமென்றும், அப்படி செய்யாவிட்டால் எங்களனைவரையும் உத்தரவாதமுள்ளவர்களாக்க வேண்டிவரும் என்றுமுரைத்தார். என்னை மறுநாள் கூப்

பிட்டு என்னை வேலையைவிட்டு நீக்குவதற்காக எழுதிய ஒரு தந்தியைக் காண்பித்தார். நான் சிலபேர்களைக் குறிப்பிட்டால் அத்தந்தியை அனுப்பாது நிறுத்திவிடுவதாகச் சொன்னார். நான் ஏற்கனவே கைது செய்யப்பட்டவர்களின் பேர்களைக் குறிப்பிடுவதாகச் சொல்லவே தந்தியில் என் பெயரை நீக்கிவிட்டார். ஆயினும் இன்னும் சில புதுப்பெயர்களைச் சொல்லும்படி கட்டாயப்படுத்தினார். எங்களைச் சாப்பாட்டிற்கு விடுவதில்லை. அனுமதிகேட்டால் நிந்திக்கப்பட்டோம். அவர் போகும் பொழுதெல்லாம் சலாம் செய்யவேண்டியதாயிற்று. 8-நாட்களுக்கு எங்களை வேலையினின்றும் நீக்கும்படி செய்தார். பிறகு என்னை வேலைக்குத்திரும்பும்படி அனுமதியளித்தனர். லாகூருக்கு சாக்ஷி சொல்ல நாங்கள் போயிருந்தபொழுது அனர்க்களியில் ஒரு சத்திரத்தில் தங்கினோம். அங்கே சாக்ஷி சொல்வதற்குத் தயார்செய்யப்பட்டோம்.

ஸ்டேஷன் தீப்பற்றி எரிந்த பின்பு நானும் ஸ்டேஷன் மாஸ்டரும் புஸ்தக வியாபாரி திவான்சண்டின் வீட்டிற்கு ஸ்டேஷன் மாஸ்டரின் சாமான்களை வைப்பதற்குச் சென்றோம். திவான்சண்ட் அந்தக் கூட்டத்திலில்லை. அவரைக் கைது செய்தவுடன் அவர் என்னைச் சாக்ஷியாக நியமித்தார். ஆனால் போலீஸார் நான் உண்மையைச் சொன்னால் ஆபத்தில் என்னை மாட்டிவிடுவதாகப் பயங்காட்டினார்கள். நான் பயந்து திவான்சண்டின் வீட்டிற்குப் போகவில்லையென்று பொய்சாக்ஷி சொன்னேன். மறுநாள் டிப்டி கமிஷனர் கர்னல் ஒப்பிரியன் (Col. O'Brien) திவான் சண்ட் முதலானோரைப் பிடிப்பதற்காச் சென்றார். சிப்பாய்கள் இஷ்டப்பட்டபடி ஜனங்களைச் சுடும்படி உத்திரவு பெற்றனர். கைதுசெய்யப்பட்

டவர்களை வீதிகள் வழியாக அழைத்துச்சென்று மான்சிங் தோட்டத்திற் கழைத்துச் செல்லப்பட்டனர். அவர்களிற் சிலர் குற்றவாளியாக்கப்பட்டனர். சிலர் பிராஸிகூஷன் தரப்பில் சாக்ஷிகளாக எடுத்துக்கொள்ளப்பட்டனர்.

சிலநாட்கள் சென்றதும் ரெயில்வே ஸ்டேஷனில் ரூ 400 மோசடியாய் அபகரிக்கப்பட்டதாக ஒரு கேசு ஏற்பட்டது :—

ஸ்டேஷன் தீப்பற்றி எறிந்ததற்கு முதல்நாள் டிக்கட்டுகள் விற்றபணம் ரூ 700 வழக்கப்படி ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொடுக்கப்பட்டது. மறுநாள் ஸ்டேஷன் எறிந்தபொழுது ஸ்டேஷன்மாஸ்டர் அந்தப் பணப்பையை அஸிஸ்டென்டு ஸ்டேஷன்மாஸ்டரிடம் கொடுத்தார். அவர் அதைத் தன் வீட்டிற்கு எடுத்துச் சென்றார். அன்றபதினப் டிக்கட்டுகள் விற்ற பணம் ரூ 250-யும் நான் எடுத்துச்சென்று மறுநாள் ஸ்டேஷன்மாஸ்டரிடம் கொடுக்க, அவர் என்னையே வைத்துக்கொள்ளும்படிக்கும் மறுநாள் தான்பெற்றுக்கொள்வதாகவும் சொன்னார். அப்பொழுது இரண்டு மூன்று குமாஸ்தாக்களும் இருந்தார். மறுநாள் நாங்கள் கணக்குகளை முடித்துக்கொண்டிருக்கையில் பிளாட்பாரத்தில் அந்தப்பணத்தை ஸ்டேஷன் மாஸ்டரிடம் கொடுத்தேன். மகமது ஹுசேயினுடைய வீட்டிலிருந்து பணப்பை கொண்டுவரப்பட்டபொழுது நான்கு ரூ-100 நோட்டுகள் காணப்படவில்லை. ஸ்டேஷன் மாஸ்டர் அதை அடக்கமுயன்று எங்களையும் செல்லாமலிருக்கவேண்டுமென்று கண்டித்தார். அதன்படி நான் கொடுத்த ரூ. 250-ம் முதல் நாள் கணக்கில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. சமாசாரம் எப்படியோ வெளிவரவே D. T. S. எங்களை விசாரித்தார். நாங்கள் நடந்தபடி அவ

ரிடம் சொல்லிவிட்டோம். அவர் கேசைப் போலீசாரிடம் ஒப்புவித்தார். போலீஸ்இன்ஸ்பெக்டர் ஷர் ஜாமன்கான் என்பவர் விசாரிக்கத் தொடங்கினர். எங்களனைவரையும் நாள் முழுவதும் வெயிலில்நிற்கவைத்து பலவிதமான அவமானத்திற்குள்ளாக்கினர். எங்களுடைய பந்துக்களும் பலவிதமாக நிந்திக்கப்பட்டனர். நஷ்டத்திற்குப் பொறுப்பாளியாக இருந்த மகம்மது ஹுசேயினைக் கூப்பிடவேயில்லை. அவர் தன் வீட்டிலேயே யிருந்தார். ஸ்டேஷன் மாஸ்டரைப்பற்றி முனிஸிபல் காரியதரிசியும் இன்னும் மற்றவர்களும் புகழ்ந்து பேசினமையால் அவரை விசாரிக்கவேயில்லை. உண்மையைச் சொல்லக்கூடிய சிலரை நான் குறிப்பிட்டேன். அவர்களைக் கூப்பிடவில்லை. அப்படியே கூப்பிட்ட இரண்டொருவர் கொடுத்த வாக்குமூலம் மகம்மது ஹுசேயினுக்கு விரோதமாயிருந்ததால் எடுத்துக்கொள்ளப்படவில்லை. முடிவில் இன்ஸ்பெக்டர் என்ன ரிபோர்ட்டு செய்தார் என்பது தெரியாது. ஆனல் நாங்களனைவரும வேலையினின்றும் நீக்கப்பட்டோம். ரெயில்வே அதிகாரிகளிடம் மனுக்கொடுத்திருக்கிறோம். இது வரையில் பதில் ஒன்றும் கிடைக்கவில்லை.

கோர்ட்டில் சாக்ஷி சொன்னது முழுமையும் போலீசாருடைய நிர்ப்பந்தத்தின்பேரில் சொல்லப்பட்டது. அது முழுதும் பொய். உண்மையே அல்ல.



III

குஜ்ரன் வாலாவில், ஜமீன்தார் ஈஸ்வர சிங்கின் குமாரர் பகவன் சிங் (Bhaghavan Singh) கொடுத்த வாக்குமூலம்.



நான் முதலில் காமோட்டியில் ஜாயில்தா (Zaildar) ராக விருந்தேன். 1910ௗ நான் நியமிக்கப்பட்டேன்.

ஹாமில்டன் என்பவர் டிபுடி கமிஷணராக விருந்த பொழுது சண்டைக்கு ஆள் சேர்ப்பதற்குத் தொடங்கினர். நான் நிக்காய் என்ற ஒரு ஆளைச் சேர்த்தேன். இன்னும் மற்றவர்களும் சேர்க்கப்பட்டனர். அஸிஸ்டெண்டு கமிஷணர் என்பேரில் புகார் சொல்ல ஹாமில்டன் என்னை வேலையிலிருந்து கொஞ்சகாலத்திற்கு நீக்கினார். பிறகு கர்னல் ஒப்பிரியன் டிபுடி கமிஷணராக வந்ததும் என்னை வேலையிலிருந்து தள்ளிவிட்டார். கர்னல் ஒப்பிரியன் வந்தபிறகு ஆள் சேர்ப்பதில் ரொம்பவும் கடுமையான வழிகளனுஷ்டிக்கப்பட்டன. நான் நாயிப் த்ாசில்தாருடன் மாளிதக்காரான் என்ற விடத்திலிருந்தேன். என் முன்னிலையில் ஒரு காஷ்மீர மனிதனையும் இன்னும் பலரையும் காமோட்டி யென்ற விடத்தில் என் முன்னிலையில் செருப்பாலடித்தனர். ஜகத் சிங் பட்டிதார், குஷால்சிங், லால்சிங், மங்கல்சிங் முதலிய ஜமீன்தார்களையும் தாசில்தார் அடித்தார். இம்மாதிரி பல கிராமங்களில் என் முன்னிலையில் அடித்தனர். என்னுடைய கிராமத்திலிருந்து சுமார் 60 அல்லது 70 பேர்கள் சேர்க்கப்பட்டார்கள். அநேகர் கைது செய்யப்பட்டனர். பலவந்தமாகச் சண்டைக் கடனுக்குப் பணம் வசூல் செய்யப்பட்டது. காமோட்டியில் ஒருநாளும் ஹார்தால் ஏற்படவில்லை. ஒரு மீட்டிங்கும் நடக்கவில்லை. அதிகாரிகள் ஹார்தால் ஏற்படக்கூடாதென்று உத்திரவிட்டனர். ஒருவிதமான கலகமாவது சச்சரவாவது ஏற்படவேயில்லை.

ஜம்மு முதலான இடங்களினின்றும் ‘வைசாக’ பண்டிகைக்காக அமிர்தசரஸிற்குச் சென்ற ஜனங்கள் திரும்பிவந்தபொழுது அவர்கள் மூலமாக அமிர்தசரஸில் ஜனங்களைச் சுட்ட விஷயத்தைப்பற்றி யறிந்தேன். ஏப்ரல் மாதம் 20-ந் தேதி 20 ஆங்கிலச் சிப்பாய்கள் என்

வீட்டிற்கு வந்தார்கள். ஒருவர் என்னை அடித்தார். அவர்களுடன் நான் செல்லும்படி கட்டாயப்படுத்தப்பட்டேன். கிராமத்திற்கு வெளியில் கிராமவாசிகளில் 100 பேர்களிருந்தார்கள். 40 மோட்டார் வண்டிகள் நின்று கொண்டிருந்தன. என்னிடம் சிப்பாய்கள் தந்திக் கம்பிகள் என் கிராமத்திலறுபட்டதாகச் சொல்ல, நான் மறுதளித்து கிராமவாசிகள் அதைப் பாதுகாப்பதாகச் சொன்னேன். பிறகு விசாரித்ததில் 10 அல்லது 11 மைலுக்கப்பால் தந்திகம்பி யறுந்துகிடப்பதாக அறிந்தேன். அப்படிச்செய்தவர்கள் இன்னாரென்று குறிப்பிட எனக்கு அரைமணி நேரம் அவகாசமளித்தனர். அதற்கு நான் கிராமத்திலிருந்து அந்தவிடத்திற்கு ஒருவரும் போகவில்லையென்றுரைத்தேன். கடைசியாக எனக்கு ரூ 200 அபதாரம் விதித்ததோடு சவுக்கால் 16 அடிகள் அடித்தார்கள். நான் மயக்கமடைந்தேன். பிறகு சிப்பாய்கள் சென்றதும் ரூ 200 கொடுத்ததற்கு சப் இன்ஸ்பெக்டர் ஒரு ரசீது கொடுத்தார்.

குறிப்பு :—

இந்த சாக்ஷியை விசாரித்த கமிஷணர் அந்த ரசீதையும் அவருடைய தேகத்தில் சவுக்காலடிபட்ட காயத்தையும் பார்த்தார்.



IV

குஜரான் வாலாவில் பிளீடர் மேலாராம் (Mela Ram) B.A., L. L. B., கொடுத்த வாக்குமூலம்



மார்ச்சு மாதம் 30-ந் தேதிக்குப் பிறகு மகாத்மா காந்தியிடமிருந்து எப்பிரல்மாதம் 6-ந் தேதி தேசத்திற்கு ஒரு இழிவான தினமாகக் கொண்டாடவேண்டுமென்ற

அறிக்கை வெளிவந்தது. அதற்காக ஏப்ரல் மாதம் 5-ந் தேதி மாலையில் லாலா அமர்நாத் என்பவருடைய ஆபீசிற் கருகாமையிலுள்ள மைதானத்தில் ஒருமீட்டிங்குநடந்தது. இந்த மீட்டிங்கு நடப்பதாக முன்னதாகவே நோட்டீஸுகள் கொடுக்கப்பட்டன. அந்த நோட்டீஸில் கையொப்பமிட்டவர்களில் யானுமொருவன். 5-ந் தேதி காலையில் குஜரான்வாலா ஜில்லா மாஜிஸ்திரேட்டாயிருந்த லெப்டினெண்டு கர்னல் எ. ஜெ. ஓப்பிரியன் (Lt. Col. A. J. O' Brien) என்னையும், பிளீடர் அமர்நாத்தையும் பாரிஸ்டர் லாப்சிங், ஸாசப்தயால் சோப்ரா என்பவர்களையும் அழைக்க, நாங்கள் செல்லவும் பின்வருமாறு சம்பாஷணை தொடங்கிறது:

மாஜி — வாருங்கள்! நீங்களெல்லோரும் நாளையதினம் உபவாசமிருக்கப் போவதாகக் கேள்விப்பட்டேன். அப்படியிருப்பது சில சமயங்களில் நல்லதுதான்; ஆயினும் அது மூடத்தனமில்லையா? நீங்கள் உபவாசமிருப்பதில் எனக்கு ஆக்ஷேபணையே கிடையாது. ஆனல் நான் செப்பவேண்டிய கடமையொன்றுண்டு; (மேஜையின்மேலிருந்த ஒரு காகிதத்தைப் பார்த்துவிட்டு) அதென்னவென்றால், நாளையதினம் கடைகளை மூடும்படி ஜனங்களைப் பலவந்தப்படுத்தினல் அது ஊரின் அமைதியைக் கெடுத்ததாகக் கருதப்படும். அறிவினர்களையும் ஒன்றும் தெரியாதவர்களையும் பிடிப்பதில் பயனென்றுமில்லை. நான் உங்களையே அதற்குப் பொறுப்பாளிகளாக்குவேன்."

மேலாராம் — ஐயா! உபவாசமிருப்பதனல் ஏதோ நலம் விளையும் என்று நான் நம்பவுமில்லை. நான் உபவாசமிருப்பதாக உத்தேசிக்கவுமில்லை. ஆனல் ஊர் முழுதும் உபவாசமிருந்தால் நானுமிருக்கலாம். நான்

ஊரில் ஒருபெரிய மனிதனுமல்ல. ஒருவரையும் கடைகளை மூடும்படி சொல்லவும் மாட்டேன். நாளைய தினம் ஹார்தால் ஏற்படப் போவதாகவே எனக்குத் தெரியாது. ஆனால் இன்று மாலையில் ஒரு மீட்டிங்கு நடைபெறும். தங்கள் அதற்கு ஹிரான் என்பவருடன் வரும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

மாஜி — எதற்காக மீட்டிங்கு நடக்கப்போகிறது ?

மேலாராம் — ரௌலட் மசோதாவை எதிர்ப்பதற்காக.

மாஜி — ரௌலட் சட்ட புஸ்தகம் ஒன்று உம்மிடத்திலிருக்கிறதா ?

மேலாராம் — இல்லை.

மாஜி — எனது அருமையான மனிதரே! ரௌலட் சட்டம் இன்னதென்று தெரியாமல் அதை எதிர்ப்பதில் என்ன பயன் ?

மேலாராம் — மன்னிக்கவேண்டும், ஐயா! நான் அதைப் படித்திருக்கிறேன். இன்று காலையில்கூட அதைப் படித்துக்கொண்டிருந்தேன். ஆனால் அது இப்பொழுது என்னிடமில்லை. (மாஜிஸ்திரேட்டு தன் குமாஸ்தாவை ஆபீஸில் அந்த ஆக்ட்டு இருக்கிறதாவென்று வினவ, அவர் இல்லையென்று விடையளித்தார்.)

மாஜி — அந்த ஆக்ட்டு எதைப்பற்றி ?

மேலாராம் — அது ஊர்க்கலகத்தையும் அராஜகக் குற்றங்களையும் தடுப்பதற்காக ஏற்பட்டது.

மாஜி — சரி ; அதற்கெதிராக நீங்கள் என்ன சொல்வதற்கிருக்கிறது. உங்களுக்கு அது வேண்டியதில்லையா ?

மேலாராம் — நான் அதற்கு விரோதமாயில்லை. அச்சட்டமேற்படுத்திக் கொள்ளுங்கள். ஆனால் அதில் ஸ்தாபனம் செய்யப்பட்டுள்ள வழிகள் நியாயஸ்தலத்திற்

கடுத்த வழிகளல்ல. குற்றமற்றவர்களும் அதன்கீழ் சிக்கவழியுண்டு. மாஜிஸ்திரேட்டு என்ற முறையில் நீர் உமது மனத்தில் பட்டதை வைத்துக்கொண்டு மனிதர்களைத் தண்டிக்கிறீர். ஆனால் வக்கீலாக இருக்கும் எங்களுக்கு சில உண்மையான குற்றவாளிகள் விடப்படுவதும் குற்றமற்றவர்கள் தண்டிக்கப்படுவதும் தெரிகிறது. சாதாரணமாகக் கோர்ட்டுகளில் வழங்கும் சட்டப்படியே இம்மாதிரி நடக்குமாகில், இப்புதிய சட்டத்தின்கீழ் இம்மாதிரியான நியாய விரோதமான செய்கைகளதிகரிக்கும்.

மாஜி—இப்பொழுது அதை எதிர்ப்பது முட்டாள்தனமென்றும் உமக்குப் புலப்படவில்லையா ?

மேலாராம்—நீர் சொல்வது அபிப்பிராய பேதமான விஷயம். ஆனால், ஐயா! மீட்டிங்கு அமைதியாக நடப்பதோடு உமதிஷ்டப்படிக்கே ஜனங்களை ஒருவிதமாகவும் பலவந்தப்படுத்தக் கூடாதென்று அறிவிக்கிறோம். இந்த ஜில்லாவில் உம்முடைய நல்ல பெயர் கெடும்படி நான் விடமாட்டேன். அப்படி இந்த மீட்டிங்கு நடப்பதில் உமக்கிஷ்டமில்லாவிடில் சொல்லிவிடும்.

மாஜி—நல்லது நான் சொல்லவேண்டிய என் கடமையைச் சொல்லிவிட்டேன். பிறகு நீங்கள் உங்கள் அபிப்பிராயப்படி செய்து கொள்ளலாம்.

இதோடு சம்பாஷணை முடிவடைய நாங்கள் அங்கு விட்டுச்சென்றோம். அன்று மாலையில் நடந்த மீட்டிங்கில் ஒருவராவது அராஜகத் தன்மையையாவது ஐரோப்பியர் மேல் அகங்காரத் தன்மையையாவது காண்பிக்கவேயில்லை. அதிகாரிகளினிஷ்டப்படிக்கே அமைதியாக நடந்தது. நகரில் ஏப்பிரல் மாதம் 6-ந் தேதி ஹார்தால் ஏற்

பட்டது. நான் என் வீட்டைவிட்டு வெளிக்கிளம்பாத தால் எனக்கு அதைப்பற்றி விரிவாக ஒன்றும் தெரியாது. வாக்களித்தபடி நான் ஒரு வியாபாரியையும் கடையை மூடும்படி தூண்டவேயில்லை. 7-ந் தேதி முதல் 11-ந் தேதி வரையில் ஒரு விசேஷமும் நடக்கவில்லை. 11-ந் தேதி ஓப் பிரியன் என்பவருக்கு நல் விடையளிக்க ஒருதர்பார் கூட் டப்பட்டது. என்னையும் அதற்கு அழைத்தார்கள். ஆனால் நான் போகாமையால் அங்கு நடந்த விஷயங்களொன்றும் எனக்குத் தெரியாது. 12-ந்தேதி அவர் பம்பாய் மெயிலில் அம்பாலா என்ற ஊருக்குச் சென்றார். நானும் என் தம்பி காப்டின் ஆனந்துடன் (Captain Anand) அந்த வண்டி யிலேயே லாகூர்வரையில் சென்று, பிறகு என் தம்பியிடம் விடை பெற்றுக்கொண்டு 13-ந் தேதி இரவில் குஜரன் வாலாவிற்கு வந்து சேர்ந்தேன். 14-ந்தேதி நான் வீட்டை விட்டு எங்கும் வெளியே செல்லாததால் அன்று நடந்த தொன்றும் எனக்குத் தெரியாது. நான் ஸிவில் ஸ்டேஷ னில் வசிக்கிறேன். அவ்வழியே ஒரு கூட்டமும் செல்ல வில்லை. எப்பிரல் மாதம் 15-ந் தேதி நான் 2 மணிக்கு வெளியே சென்று என் வீட்டிற்குப் பக்கத்தில் குலாம் ரஸல் என்பவருடன் பேசிக்கொண்டிருந்தேன். அப் பொழுது போலீஸ் படைகள் ஆயுதபாணிகளாக அவ் வழியே வந்து எனக்கெதிரில் நின்றுகொண்டு துப்பாக்கி களை என்னை நோக்கிக் காண்பித்தனர். உடனே போலீஸ் சூப்பரின்டெண்டெண்டு முன் வந்து "ஜில்லா மாஜிஸ்தி ரேட்டின் உத்திரவின்படி நான் உம்மைக் கைது செய் கிறேன்" என்று சொன்னார். ஒரு போலீஸ் சேவகனால் என் இரு கைகளிலும் இரத்தம் வெளிவர விலங்கிட்டு அப் படையின் நடுவில் நான் நிறுத்தப்பட்டு வேகமாக அழைத் துச்செல்லப்பட்டேன். லாலா ஹக்கீம் ராய் வீட்டிற்குச்

செல்ல அவர் அங்கில்லை. பிறகு திவான் மங்கள் சென் வீட்டிற்குச்சென்றோம். போகும் வழியில் லாப்சிங் என்பவர் கைது செய்யப்பட்டு விலங்கிட்டு என்னுடன் சேர்க்கப்பட்டார். மங்கள் சென் வீட்டிற்குச்செல்லவும், அங்கே போலீஸ் டிபுடி இன்ஸ்பெக்டர் ஜனரல் டொனல்ட் (Donald) என்பவரும் லெப்டினெண்டு கர்னல் ஒப்பிரியனும் இருந்தனர். அவர்கள் திவான் மங்கள்சென் என்பவரைப் பிடித்துக் கைதுசெய்தனர். லாலா அமர்நாத் லாலா ஹக்கீம்ராய் என்பவர்களும் கைதியாக்கப்பட்டார்கள். பிறகு எங்களை ரெயில்வே ஸ்டேஷனுக்கழைத்துச் சென்றனர். அங்கே போய்ச் சேர்ந்ததும் குருகுலத்திற்கு மானேஜராகிய லாலா ரல்யா ராம் என்பவரையும், பி. திவான் சண்டு என்பவரையும் கைது செய்தனர். எங்களையழைத்துக்கொண்டு நகரை நோக்கிச்சென்றனர். 50 சிப்பாய்களும் போலீசாரும் சூழ்ந்துவருவதுடன் முனிஸிபல் கமிஷணர்களும் பின்பற்றினர். ஒருவெடிகுண்டு வண்டியும் கூடவந்தது. நகரைநோக்கிச் செல்லும்பொழுதும் அங்கிருந்து மொத்தம் 22 பேர்களைப் பிடித்தபிற்பாடு ரெயில்வே ஸ்டேஷனுக்குத் திரும்பும்பொழுதும் ஆகாயக் கப்பல்கள் எங்களுக்கு மேலே பறந்துகொண்டு வந்தன. அன்றிரவு 8-30 மணிக்கு எங்களை லாகூர் ஸெண்டிரல் ஜெயிலில் கொண்டு சேர்த்தார்கள். என்னை அங்கு ஒரு தனி அறையிலடைத்து 72 மணி நேரம் வரையில் நடுவில் சில நிமிஷங்களைத்தவிர வெளியில் விடவேயில்லை. என்னை ஸ்நானம் செய்ய விடவில்லை. ஜெயிலாகாரமே எனக்குக் கொடுக்கப்பட்டது. நான், தூர்க்கந்தத்துடனிருந்ததால் வேண்டாமென்று சொல்லிவிட்டு, வதங்கின கடலையைக் கொண்டு ஜீவிக்க வேண்டியதாயிற்று. இரண்டு கந்தலான கம்பளங்களையும் ஒரு பாயையும் கொண்டே கொசுக்கள்

என்னை யணுகாது காத்துக்கொண்டு தூங்கவேண்டியதா யிற்று. சில நாட்கள் கழித்துக் கொஞ்சம் கொஞ்சமாக சௌகர்யங்களேற்பட்டன. சொந்த படுக்கைகளை உப யோகப்படுத்தவும் ஸ்நானம் செய்யவும் தினந்தோறும் சற்று நேரம் வெளியில் உலாவவும் அனுமதியளிக்கப்பட் டன. 18 நாட்களானதும் எங்களை மிகவும் அவக்கேடான நிலைமையில் லாகூரிலிருந்து குஜ்ரான் வாலாவிற்கு அழைத் துச்சென்றனர். ஒருவருடைய வலதுகையும் இன்னொருவ டைய இடதுகையும் சேர்த்து சங்கிலியால் கட்டப்பட்டன. சுயேச்சையாயுள்ள இன்னொரு கையில் படுக்கையை எடுத் துச் சென்றோம். இப்படியே ஜெயிலிலிருந்து மூன்று மைலுக்கப்பாலுள்ள லாகூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லப்பட்டோம். பிளாட்பாரத்தில் வெகு நேரம் காத்தபின் இரவில் சாப்பட்டிற்காக ஒவ்வொரு வருக்கும் ஒரு அணாவீதம் கொடுக்கப்பட்டது. கைதிகளை ஏற்றும் வண்டியில் எங்களைத் தள்ளி தூக்கமின்றி இக்கேவல மான நிலைமையில் எங்களை குஜ்ரான்வாலா ஜெயிலில் கொண்டு சேர்த்தார்கள். என் கையிலிருந்த சங்கிலியை அவிழ்த்து விட்டார்கள். அடுத்தவாரம் வரையில் நான் வலியால் கஷ் டப்பட்டேன். அங்கே 18 நாட்களிருந்த பிறகு இன்னும் 15 பேர்களுடன் லாகூருக்கு ராணுவச்சட்ட கோர்ட்டின் முன் விசாரணைக்காக நான் அனுப்பப்பட்டேன். அங்கே முதலில் ஒருநாள்குறிப்பிட்டு, பின்பு அதைமாற்றி 10 நாட் கள் முன்னதாகவே ஒருதினம் குறிப்பிடப்பட்டது. மறு படியும் இரண்டு நாட்கள் முன்னதாகவே விசாரணை நடந் தது. வேண்டுமென்றே இப்படி அவசரப்படுவதாக எங் களுக்குச் சந்தேகமுண்டாயிற்று. வெளியிலிருந்து வக்கீல் கள் வரக்கூடவில்லை. எங்களுக்கு நன்மையாக சாக்ஷி சொல்லப்பட்டதை யெடுத்துக் கொள்ளவில்லை. விரோத

மாகச் சொல்லப்பட்டதெல்லாம் எடுத்துக் கொள்ளப்பட்டன. ரெயில்வே போக்குவரவு கிடையாது. எங்களுடைய சொந்தக்காரர்கள் ராணுவ உத்தியோகஸ்தர்களுடைய அனுமதியின்றி வெளியில் செல்லக்கூடாது. அனுமதி கேட்டாலும் கொடுக்கப்படவில்லை. இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் நான் குற்றமற்றவனாக விருந்தும் விடுதலையடைவேனென்பது சந்தேகமாகவே எனக்குத் தோற்றியது. ஆயினும் கடைசியில் என்னை விட்டுவிடவே நான் ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் அடைந்தேன்.

---

I

## வாக்குமூலங்கள்—வாசிராபாத்

வாசிராபாத்தில் ஆரிய சமாஜத்திற்கு பிரசிடெண்டாகிய பிரீதம் தாஸ் (Pritam Das) கொடுத்த வாக்குமூலம்.

---

ஏப்பிரல்மாதம் 6-ந்தேதி நானும் லாலா நந்தலால் சோப்ராவும் உபவாசமிருந்து சில வியாபாரிகளிடம் சென்று கடைகளை மூடும்படி கேட்டோம். ஒருவரும் கேட்கவில்லை. ஏப்பிரல்மாதம் 14-ந் தேதி “வைசாக” உற்சவத்திற்கு கிராமங்களினின்றும் ஏராளமான ஜனங்கள் வந்துகூடினார்கள். அவர்கள் சுமார் 5-மணிக்கு வியாபாரிகளைக் கடைகளை மூடிக்கொண்டு ஜும்மா மசூதியில் நடக்கப் போகும் மீட்டிங்கிற்குப் போகும்படி தூண்டினார்கள். அதன்படியே எல்லாரும் மசூதியில்வந்து கூடினார்கள். என்னை ஹார்தாலைப்பற்றி பேசும்படி கேட்டார்கள். நான் அமரிக்கையாகவே பேசினேன். 15-ந் தேதி ஹார்தால் ஏற்பட நியாயமேயில்லையென்று நான் சொன்னேன். இன்னும் இரண்டொருவர் பேசியபின்பு மீட்டிங்கு கலைந்

தது. ஆனால் 15-ந் தேதி 2-மணிக்கு மசூதியில் ஒரு மீட்டிங்கு நடக்கப்போவதாகச் சொல்லப்பட்டது. 15-ந்தேதி காலையில் ஹார்தால் ஏற்பட்டது. மசூதி, ரெயில்வே ஸ்டேஷனுக் கருகாமையிலிருப்பதால் மீட்டிங்கு அங்கே நடத்துவது சரியல்லவென்று சிலர் அபிப்பிராயப்படவே, தான்யமார்க்கட்டில் நடத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டது. ஜனங்களுக்கு அதைப்பற்றித் தெரிவிக்கும்படி மணி அடித்துக்கொண்டு ஒருவர் முன்செல்ல நான் பின்னால் விளம்பரம் செய்துகொண்டு சென்றேன். கொஞ்சநேரம் சென்றதும் தாசில்தார் என்னை அழைத்து ஹார்தால் ஏற்பட்டதின் காரணத்தைப்பற்றிக் கேட்டார். 15-ந் தேதி ஹார்தால் ஏற்பட வேண்டுமென்ற அபிப்பிராயமே ஒருவருக்குமில்லையென்றும் ஆனால் கிராமங்களிலிருந்து வந்தவர்களின் தூண்டுதலின்பேரில் அது ஏற்பட்டதென்றும் நான் சொன்னேன். நான் வீட்டிற்குத் திரும்பிப் போனதும் ஜனங்கள் தந்திக்கம்பிகளை யறுத்துவிட்டதாகவும் கொட்டகையைக் கொளுத்திவிட்டதாகவும் கேள்விப்பட்டேன். நான் ரொம்பவும் விசனப்பட்டேன். என்னுடைய கடையிருந்த தான்யமார்கட்டிற்குக் நான் 2-மணிக்குச் சென்றேன். ஜனங்கள் கூடத்தொடங்கினர். தலைவர்கள் யாரென்று அவர்கள்கேட்கவே அனைவரும் என்னைப்பலாத்காரமாய் அழைத்துக்கொண்டு சென்றனர். கடைசியாக ஹார்தாலை நிறுத்துவதற்கு ஒரு மீட்டிங்கு நடத்தவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. மீட்டிங்குநடந்து பிரசங்கங்கள் செய்யப்பட்டன. ரௌலட் மசோதா சட்டமாகக் கூடாதென்றும் ஹார்தால் முடிவடையவேண்டுமென்றும் தீர்மானங்கள் கொண்டுவரப்பட்டு ஆமோதிக்கப்பட்டன. அதன்பிறகு ரொட்டிக்கடைகளும் தின்பண்டக்கடைகளும் திறக்கப்பட்டன. அன்றையதினம் 4-மணிக்கு

லாலா நந்தலால் தீர்மானங்களைப்பற்றி தந்திகொடுத்தார். அன்றிரவே என்னைக் கைதுசெய்து குஜ்ரான்வாலாவிற்கு அழைத்துச்சென்று அங்கே ஜெயிலில் அடைத்தனர். ஜூன்மாதம் 3-ந் தேதி என்னை லாகூருக்கு அழைத்துச் சென்றனர். அங்கே ஒருநாளிருந்து திரும்பவும் குஜ்ரான் வாலாவிற்குத் திரும்பும்படியாயிற்று. விசாரணை ஜூன் மாதம் 9-ந் தேதி குறிப்பிடப்பட்டது. வாசிராபாத்திற் குச்சென்றதும் போலீசார் என்சாக்ஷிகளைப் பயமூட்டினார் கள் என்றறிந்தேன். என்னை விடுதலை செய்வார்கள் என்ரு வது எனக்கு அனுகூலமாகச் சொல்லப்படும் வாக்கு மூலங் களை எடுத்துக்கொள்வார்கள் என்ருவது நம்பிக்கை ஏற் படாததால், நான் என் சாக்ஷிகளையும் வக்கீல்களையும் அபே க்ஷிக்கவில்லை. எனக்கும் போலீஸ் இன்ஸ்பெக்டர் அக் பர்ஷா என்பவருக்கும், நான் அவர்மேல் கிரிமினல் வியாஜ் யம் முன்பு நடத்தியதின் காரணமாக, பகை யுண்டாயிற்று. நான் அந்த வியாஜ்யத்தின் தீர்ப்புக்கு நகல்வாங்கித் தாகல் செய்யும்படி கேட்டுக்கொண்டேன். ஆனால் அதன்படி செய்ததாக என்னால் சொல்ல முடியாது. ஜூன்மாதம் 9-ந் தேதி 2-மணிக்கு எனக்கு 2-வருஷக்காவலும் ரூ 1000 அபராதமும் விதித்தார்கள். என்மக்கள், வீட்டுச் சாமான் களை விற்று அபராதத்தைச் செலுத்தினார்கள்.

---

I

## வாக்குமூலம்—நைஜாமபாத் (Nizamabad)

நைஜாமபாத்தில் கொல்லன் ஆலன் டின் (Allan Din) என்பவர் கொடுத்த வாக்குமூலம்.

நான் சிக்கந்தர்லாலின் உலைக்களத்திற் வேலை செய்பவன். ஹார்தால் ஏற்பட்ட சில தினங்களுக்குப்

பிறகு, வாசிராபாத் போலீஸார் என்னை யழைத்தனர். அவர்கள் என்னிடத்திலிருக்கும் கொள்ளையடித்த சாமான்களைக் கொடுக்கும்படி கேட்டார்கள். நான் என்னிடம் கொள்ளையிடப்பட்ட சாமான்கள் ஒன்றுமில்லையென்றும் நான் கொள்ளையடித்ததில் சம்பந்தப்படவில்லையென்றும் விடையளித்தேன். என்னை செருப்பாலும் கையாலும் அடித்தார்கள். என்னைக் கீழேதள்ளி ஒருபோலீஸ் கான்ஸ்டேபிள் தன்காலால் என் கழுத்தையமுக்க இன்னொருவர் அடித்தார். மிர்ஜாமாஜித்ஆலி, மிர்ஜா அல்டப்ஆலி, மிர்ஜார் பீஹார்பேக் முதலானோர்களும் அங்கிருந்தார்கள். காலை 6-மணி முதல் மாலை 6-மணிவரையில் நான் சாப்பாடு கூட இல்லாமல் அங்கேயே இருக்கும்படி நேரிட்டது. பிறகு வீட்டிற்குச் சென்றேன். மறுநாள் திரும்பவும் அழைக்கப்பட்டேன். முதல்நாள் அடித்தபடி என்னை அடித்தனர். 7-மணிக்கு வாசிராபாத்தில் சதார் டாணுவிற்கு என்னை அழைத்துச்சென்று அங்கே நாள்முழுவதும் ஆகாரமின்றி இருத்தினார்கள். நான் டாணுவில் 11-தினங்களிருந்தேன். சிலநாட்கள் என்வீட்டிலிருந்து ஆகாரம் வரவிட்டார்கள். மற்றதினங்களில் அனுமதி கொடுக்கவில்லை. இன்னும் பலர் அம்மாதிரியே வைக்கப்பட்டனர். நைஜாம்பாத்திலுள்ள 11-வயதிற்குமேல்பட்ட ஆடவரனைவரும் டாணுவிற்குத் தினந்தோறும் செல்லவேண்டியதாயிற்று. அவ்விடத்தில் இஸ்மெயில் என்பவர் தன்தகப்பனாரைப் பொய்வாக்குமூலம் கொடுக்கும்படி சப் இன்ஸ்பெக்டர் தொந்திரவு செய்வதாகச் சொன்னார். இஸ்மெயில் என்பவர் இன்ஸ்பெக்டரிடம் என்னையும் மற்றவர்களையும் தந்திக்கம்பிகளை யறுத்தவர்களென்று குறிப்பிட்டு வாக்குமூலம் கொடுத்த பின்பு, அப்படிச் செய்ததாகவும் என்னிடம் சொன்னார். சப் இன்ஸ்பெக்டர் என்னை

யழைத்து நானும் அம்மாதிரி ஒருவாக்குமூலம் கொடுத்தால் தப்பிவிடலாமென்றும் இல்லாவிடில் கஷ்டப்பட வேண்டுமென்றும்சொன்னார். அப்பொழுது இரவு 12-மணியிருக்கும். நான் அவரை அவரிஷ்டப்படிவாக்குமூலம்தயார் செய்யும்படி சொன்னேன். அம்மாதிரியே அவர் ஒன்று எழுதி என்னை அதைப்படித்து ஞாபகத்தில் வைத்துக் கொள்ளும்படி சொன்னார். மாஜிஸ்டிரேட் ராஜா அக்ரம் உல்லாகானிடம் அழைத்துச்சென்று நான் அம்மாதிரியே வாக்குமூலம் கொடுத்தபிறகு, என்னை விட்டுவிட்டார்கள். மே மாதம் 12-ந் தேதி லாகூரில் அமார்சிங் முதலானோரின்பேரில் சாட்டப்பட்டகுற்றத்திற்கு என்னைச்சாக்ஷியாக விடுத்தனர். நான் சொல்லிக்கொடுத்த பிரகாரம் சாக்ஷி சொன்னேன். மறுபடி ஜூன்மாதம் 9-ந் தேதிமிர்ஜா முபரக்ஆலிக்கு விரோதமாக என்னை சாக்ஷி சொல்லும்படி ஏவினர். நைஜாமபாத்தில் அவர் ஒரு பெரிய மனிதரானதால் எனக்குப் பொய்சாக்ஷி சொல்ல மனமெழவில்லை. நான் உடனே மாஜிஸ்திரேட்டின் முன்பாக ஆதியோடந்தமாகப் பொய் சாக்ஷி சொல்லும்படி என்னைத் தொந்திரவு படுத்திய விவரங்களைச் சொல்லி விட்டேன். உடனே மாஜிஸ்திரேட் நான் பொய் சாக்ஷி சொன்ன குற்றத்திற்காக மூன்றுமாதம் ஜெயிலிலிருக்கும்படி தண்டனை விதித்தார்.



## II

நைஜாமபாத்தில் கவர்ன்மெண்டு பென்ஷணர் மிர்ஜா பேஹார் பெக் (Mirza Behar Beg) கொடுத்த வாக்குமூலம்.



நான் 43 வருஷங்கள் கவர்ன்மெண்டு உத்தியோகத்திலிருந்தேன். நான் 30 வருஷகாலம் 'கிர்தவார் கனங்கோ'

என்ற விடத்திலிருந்தேன். பென்ஷன்பெற்று 11 வருஷங்களாயிற்று. நைஜாம பாத்தில் 48ல் ஒரு பங்கு என்னுடையது.

ராணுவச் சட்ட நாட்களில் நானும் நைஜாம பாத்திலிருந்தேன். ஏப்பிரல் மாதம் 15-ந் தேதி நான் வாசிராபாத்திற்குச் சென்று அன்று நடந்த கலகத்தைப் பற்றிச் சொன்னேன். தாசில்தாருடன் பலரிருந்தனர். வாசீரபாத்திலிருந்து பல மனிதர்கள் என் கிராமத்திற்குப் போவதாகவும் தந்திக்கம்பிகளை யறுத்து நாசமாக்குவதாகவும் கிராமத்தைக் கொள்ளையிடுவார்களோவென்று பயப்படுவதாகவும் சொன்னேன். தாசில்தார் என்னை அங்கேயே யிருக்கும்படி சொல்ல நான் 1-மணி வரையில் காத்திருந்தேன். நான் கிராமத்திற்குத் திரும்பிச் சென்றதும் வாசிராபாத்திலிருந்து வந்த ஜனங்கள் ரெயில்வே பாதையைப் பாழாக்கிவிட்டுத் திரும்பி விட்டதாகக் கேள்விப்பட்டேன். நாலைந்து நாட்கள் சென்றதும் சப் இன்ஸ்பெக்டர் பிரதாபசிங் ஒரு கான்ஸ்டேபிளுடன் நைஜாம பாத்திற்கு வந்தார். விசாரணை தொடங்கவும் அவர் சிலரைக் குற்றத்தை ஒப்புக் கொள்ளும்படி அடித்தார். ஆனால் அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. மற்றவர்களையும் நிந்தித்துவிட்டு மறுநாள் அனைவரும் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரவேண்டுமென்றுஉத்திரவிட்டார். அதன் பிரகாரம் சில கான்ஸ்டேபில்கள் கிராமவாசிகளை ஸ்டேஷனுக் கழைத்துச் சென்றார்கள். அங்கே ஜாயில்தார் (Zaildar) சுல்தான் ஆமத் என்பவர் அவர்களோடு இருந்தார். அவர் ஜனங்களைக் கொடூரமான நிந்தனைகளுக்குள்ளாக்கினார். இப்படி 15 நாட்கள் சென்றன. கிராமவாசிகள் தினந்தோறும் காலையில் சென்று நாள் முழுவதும் ஆகாரமின்றி வெயிலில் நிற்க வேண்டியிருந்தது. மற்ற

கிராமங்களிலிருந்துவரும் ஜனங்களுக்கஞ்சி கடைகளை மூடி விட்டனர். வாசிராபாத்திலிருந்து வந்தவர்கள் சுமார் 500 பேர்களிருக்கும். பெயிலி (Mr. Bailey) என்பவருடைய சாமான்களைக் கொள்ளையடித்ததில் சம்பந்தப் பட்ட நைஜாமபாத் வாசிகள் முன்னாலேயே தண்டிக்கப் பட்டார்கள். சுல்தான் ஆமத் ஜாயில்தார் பிறகு மற்றவர்களைத் தொந்திரவு படுத்த ஆரம்பித்தார். இராக்காலங்களில் அவர் கிராமத்தார்களின் வீடுகளுக்குச் சென்று கொள்ளையடித்த சொத்துக்களைக் கிராமத்திற்கு வெளியில் ஒரு குழியில் புதைக்கும்படி சொல்லிவந்ததோடு, அப்படி புத்தி சொன்னதற்காகப் பணம் வாங்கி வந்தார். கைது செய்யப்பட்டவர்கள் பொய்சாக்ஷி சொல்வதாக ஒப்புக் கொண்டால் விடுவிக்கப்பட்டனர். பொருட் சம்பாதிப்பதற்கென்றே அவர் இம்முறைகளை யனுஷ்டித்தார். அவர் போலீசாரை எனக்கு விரோதமாகத் தூண்டினார். நான் போலீஸார் வசம் ஒருநாளிருந்தேன். நான் குற்றவாளி யல்லவென்று ருஜூப் படுத்துவதற்காக தாசில்தாரையும் நாயிப் தாசில்தாரையும் வரவழைத்தேன். அவர்கள் நான் 8-மணி முதல் 1-மணிவரையில் வாசிராபாத்தி லிருந்ததாக எழுதிவைக்கவே என்னை விடுதலைசெய்தார். பிறகு என் உறவினர்கள் பிடிக்கப்பட்டு கடைசியில் விடுதலையடைந்தனர். தாசில்தார் குற்றமற்றவர்களைத் தொந்திரவுபண்ணி குற்றவாளிகள் பலரை லஞ்சம் வாங்கிக்கொண்டு விடுவித்தனர். பணம் கொடுக்கக் கூடாதவரைக் கைதுசெய்தனர். என் பந்துக்களில் ஒருவராகிய மிர்ஜாமூபரக்ஆலி என்பவர் அவ்விதமே கைது செய்யப்பட்டு, தயார் செய்த பொய்சாக்ஷிகளின் வாக்குமூலங்களைக்கொண்டு 6-மாதம் காவல்தண்டனை விதிக்கப் பட்டார். அவருக்கு அனுகூலமாகச் சாக்ஷிசொன்ன இரு

வர் 3-மாதம் காவல்தண்டனை யடைந்தார்கள். கிராம வாசிகளிற்பலர் என் ஸ்டேட்மெண்டை ஆமோதித்தார்கள். ராணுவச் சிப்பாய்களை வரவழைக்க அவர்கள் கிராமத்தைச் சூழ்ந்துகொண்டார்கள். ஒரு சிறுவன் சுடப்பட்டான். சில கடைகள் கொள்ளையடிக்கப்பட்டன.



I

## வாக்குமூலங்கள்—அகல்கார் (Akalgarh)

குஜ்ரன் வாலா ஜில்லா அகல்காரிலிருக்கும் திவான் பான்ஸிலால் சோப்ரா (Diuan Bansi Lal Chopra) கொடுத்த வாக்கு மூலம்.



ஏப்பிரல் மாதம் 6-ந் தேதி சாதாரண ஹார்தாலேற்பட்டது. அன்று மாலையில் ஒரு மீட்டிங்கு என் சகோதரர் திவான் கோபால் லாலின் அக்கிராசனத்தின்கீழ் நடந்தது. அதில் ரௌலட் மசோதாவைப்பற்றிய தீர்மானம் ஏற்பட்டது. 14-ந் தேதி மறுபடியும் ஹார்தால் ஏற்பட்டது. ஒருவிதமான கலகமும் நிகழவில்லை.

ஏப்பிரல் மாதம் 21-ந் தேதி மாலையில் பாபு கேடர் நாத், பால் மொகந்து சேச்சார் இவ்விருவரும் என்னிடம் வந்து டிபுடி கமிஷணர் கனலுக்கு (Canal) வருவதாகவும் சில பெரிய மனிதர்களைப் பார்க்க விரும்புவதாகவும் சொன்னார்கள். திவான் கோபால்லாலைப்பற்றி ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் அவர்கள் சொல்ல, நான் நாங்களிருவரும் நிரபராதிகளானதால் எங்களைக் கைது செய்வதற்கு நியாயமில்லையென்று விடையளித்தேன். அவர்கள் ஏதாவது பணத்தைக் கொடுத்து தப்புவதற்கு ஏற்பாடு செய்தல் நலமென்றுரைக்கவே,

நான் கோபால்லாலை வரவழைத்துக் கேட்டேன். அவர் அதற்குச் சம்மதிக்கவில்லை.

மறுநாள் சொன்னபடி டிபுடி கமிஷணர் போலீசார்களுடன் அங்கு வந்து சேர்ந்தார். பல ஜனங்கள் கூடியிருந்தனர். சப் இன்ஸ்பெக்டரை இரகசியமாக விசாரித்த பிறகு அவர் அகல்கார்வாசிகளைப்பார்த்து திவான் கோபால்லால் ரௌலட் மசோதாவைப்பற்றிப் பிரசங்கம் செய்தாரா என்று கேட்டார். அதற்குத் திவான் கோபால்லால் தான் சமாசாரப் பத்திரிகைகளிற் (News Papers) பிரசுரமாயிருந்ததைப் படித்ததாகப் பதில் சொன்னார். உடனே டிபுடி கமிஷணர் அதற்கபராதமாக கனலிலிருந்து பட்டணம் வரையிலுள்ள ரஸ்தாவை தன் மோட்டார் வண்டி இலகுவாய்ச் செல்லும்படி கிராமவாசிகள் பழுது பார்க்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று உத்திரவிட்டார். ரெவினியூ ஆபீசர் எம். சாஹிப்கான் என்பவரை அங்கே விட்டு விட்டு டிபுடி கமிஷணர் ஹபீஸபாத்திற்குச் சென்றார்.

சுமார் 2 மணிக்கு டவுன் ஹாலில் பணம் வசூலிப்பதற்காக நாங்கள் கூடினோம். அப்பொழுது சர்தார் நூர் உசேயின் என்பவர் வந்து ரெவினியூ ஆபீசர் என் துப்பாக்கியையும் வெடி மருந்தையும் கேட்பதாகச் சொன்னார். நான் வீட்டிலிருந்து துப்பாக்கியை எடுத்துக்கொண்டு டாக் பங்களாவிற்குச் சென்றேன். அவர் அங்கே இல்லாமையால் பட்டணத்திற்குச் சென்றேன். போகும் பொழுது என் சகோதரர் கோபால் லாலும், பத்ரி நாத்தும் கைது செய்யப் பட்டதாகக் கேள்வியுற்றேன். நான் துப்பாக்கியை ரெவினியூ ஆபீசரிடத்தில் கொடுத்த பின் டவுன் ஹாலிற்குத் திரும்பினேன். நாங்கள் கொடுக்க வேண்டிய பணம் ரூ. 1500 லிருந்து ரூ. 2000 த்திற்கு

உயர்த்தப்பட்டது. நான் ரூ. 200 கொடுக்க வேண்டிய தாயிற்று. எனக்காக காதர்நாத் என்பவர் அந்தத்தொகையைக் கொடுத்தார். ரசீதும் கணக்குப் புஸ்தகங்களும் என்னிட மிருக்கிறது.

எப்பிரல் மாதம் 22ந் தேதி காதர் நாத் என்னிடம் வந்து "சிறுவர்களைப் பிடித்தாய் விட்டது; பெரிய ஆசாமிகள் பாக்கி யிருக்கின்றனர்" என்று சௌத்திரிகள் பேசிக் கொள்வதாகச் சொன்னார். அவர்கள் பணம் வேண்டுமென்று சொல்வதாகவும் நான் ரூ. 10,000 கொடுக்கும்படி நேரிட்டாலும் யோசிக்காமல் கொடுத்து விடுவதே மேலானது என்றும் சொன்னார். கடைசியாக ரூ. 2000 க்குள் முடிப்பதாகச் சொல்லி நான் அதற்கிணங்கும்படி செய்தார். எப்பிரல் மாதம் 23ந் தேதி காலையில் காதர் நாத் என்னிடம்வந்து வெளியே வரும்படியழைக்க நான் சென்றேன். அங்கே ஒரு செயில்வே ஸ்டேஷன் ஹவில்தாரும் ஒரு போலீஸ்காரரு மிருக்கக் கண்டேன். அவர்கள் என்னிடமிருக்கும் மற்ற வெடி மருந்துகளையும் துப்பாக்கியையும் ரெவினியூ ஆபீசர் கேட்பதாகச் சொல்ல, நான் என்னிடத்திலிருந்தவைகளை எடுத்துக் கொண்டு சென்றேன். ஒரு ரசீது எனக்குக் கொடுக்கப்பட்டது. காதர்நாத் பிறகுவந்து தன்னால் ரூ. 1000 ந்தான் ஏற்பாடு செய்ய முடிந்தது என்றுரைத்தார். நான் ரூ. 1000 கடன் வாங்கி காதர் நாத்திடம் கொடுக்க அவர் அதை அப்படியே குலாம் காதரிடம் கொடுத்தார். அவர் கொடுத்த ரூ. 1000 த்தையும் தன் கணக்கில் "15ந்தேதி வைசாகம் ரூ. 1000 சாப்பாடு முதலானவற்றிற்காக" என்று எழுதியிருந்தார்.

அதோடு திருப்தியடையாமல் சௌத்திரிகள் என்னை அடிக்கடி தொந்திரவு படுத்திக் கொண்டே வந்தார்கள்.

என்னுடைய மைத்துனர் பிராணநாத் என்பவரை குஜ்ரான் வாலாவிலிருந்து அகல்கார் ஜெயிலில் கொண்டுவந்தனர். ஆனால் சில நாட்களுக்குப்பிறகு விடப்பட்டார். என் முன்னிலையிலேயே சர்தார் இக்குபாலசிங் என்பவர் திவான் கோபால்லாலுக்கு விரோதமாக சாக்ஷிசொல்ல மறுத்ததற்காக ஜெயிலிலடைக்கப்பட்டார். தாணிதார் (Thanedar) இக்குபாலசிங்கைப் பற்றி விசாரிக்க, ரெவினியூ ஆபீசர் 'அவர் சாக்ஷி சொல்லும்பக்ஷத்தில் விடப்படுவார். இல்லாவிட்டால் கஷ்டப்படவேண்டிவரும்' என்று விடையளித்தாராம்.

மே மாதம் 10ந் தேதி இரவில் டாணாவிற்கு எல்லாரும் மறுநாட் காலையில் வந்து சேரவேண்டுமென்று பறையடித்து விளம்பரம் செய்யப்பட்டது. அவ்விடத்தில் வெகு நேரம் ஜனங்கள் காத்திருந்த பிறகு, ரெவினியூ ஆபீசர் தாணிதார், சௌத்திரிகள் முதலானோர் வந்தார்கள். வந்ததும் "யார் எங்களிஷ்டப்படி சாக்ஷிசொல்ல மறுத்தாலும், யார் குற்றவாளிகளுக்குச் சாக்ஷி சொல்ல யத்தனப்பட்டாலும் மிகவும் கொடுமையாய் நடத்தப்படுவார்" என்றுரைத்து பயங்காட்டினார்கள். ஆகாரத்திற்காக அரைமணி நேரம் விடப்பட்டது. பிறகுசாக்ஷிகளை ரெயில்வேஸ்டேஷனுக் கழைத்துச் சென்றனர். அங்கிருந்து போலீஸ் காவலுடன் லாகூருக் கழைத்துச்சென்றனர். நான் சாக்ஷி சொல்லியபின்பு, ராணுவச் சட்ட மொழியும் வரையில் அங்கேயே இருக்கும்படி நேர்ந்தது. நான்திரும்பிச் சென்றதும் துப்பாக்கிகளையும் குண்டுகளையும் காண்பித்து ஜனங்களைப் பயமூட்டி ஏராளமான பணத்தை அபகரித்ததாக உணர்ந்தேன். என் சகோதரர் 2½மாதம் சென்றதும் விசாரணை நடந்து விடுதலை யடைந்தார்.

அக்டோபர் மாசம் 20ந்தேதி டிபுடி கமிஷனரிட

மிருந்து குலாம் காதருக்கு விரோதமாகச் சாக்ஷி சொல்லும்படி எனக்குச் சம்மன் வந்தது. காதர் நாத்தும் குலாம் காதரும் என்னிடம்வந்து சௌத்திரிகளுக்கு விரோதமாகச் சாக்ஷி சொல்லக் கூடாதென்று கேட்டுக்கொண்டார்கள். நான் உண்மையைச் சொல்வதாக விடையளித்தேன். குஜ்ரன் வாலாவில் உசேயின் என்பவர் குலாம் காதருக்கு விரோதமாகச் சாக்ஷி சொல்லா திருக்கும்படி மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். அவர்களால் எனக்கு மறுபடியும் என்ன தொந்திரவுகள் ஏற்படக்கூடுமென்பது தெரியாது. எனக்கு ஒருவருடனும் விரோதமில்லை. இப்பொழுதும் கிடையாது.



I

## மகாத்மா காந்தியின் வாக்குமூலங்கள்.

பஞ்சாப் சம்பவங்களைப்பற்றி ஹண்டர் கமிட்டிக்கு மகாத்மா காந்தி கொடுத்த வாக்குமூலம்.



சென்ற 30 வருஷங்களாய் நான் சத்தியாகிரகத்தை உபதேசித்தும் அனுஷ்டித்தும் வருகிறேன். எனக்குத் தெரிந்த வரையில் சத்தியாகிரக கொள்கைகள் படிப்படியான அபிவிருத்திக்கு அனுகூலமாகவே இருக்கும். சத்தியாகிரகத்திற்கும் சாத்விக எதிர்ப்புக்கும் விசேஷ வித்தியாசமுண்டு. சாத்விக எதிர்ப்பானது கேவலம் சக்தியற்றவர்களின் ஆயுதம் என்பதோடு சில சமயங்களில் பலாத்காரமாய் நடந்து கொள்ளவும், அந்த தர்மம் இடம் கொடுக்கிறது. ஆனல் சத்தியாக்கிரகமோ பலவான்களின் ஆயுதம். பலாத்காரமான காரியங்களில் சத்தியாக்கிரகிகள் இறங்கவே மாட்டார்கள். தென் ஆப்ரிகா இந்தியர்

கள் சத்தியாகிரகத்தைக் கொண்டே 8 வருஷம் போல் போராடினார்கள். சில ஐரோப்பியரைப்போல் அவர்கள் துராக்கிரகத்திலும் சாத்வீக எதிர்ப்பிலும் இறங்கவில்லை. சத்தியாகிரகம் என்றால் சத்தியமாகிய சக்தி. ஆத்ம சக்தி என்றும் அதை அழைக்கலாம்.

சத்தியாக்கிரகிகளுக்கு பொறுமையும் அபிமானமும் இன்றியமையாத குணங்கள். அதாவது பிறருக்குத் தீங்கு செய்யாமல் சகல கஷ்டங்களையும் தாமே சகித்துக்கொண்டிருப்பது சத்தியாக்கிரகிகளுக்கு அழகு. ராஜீயத்துறையில் சத்தியாக்கிரகத்தைத் தாராளமாய் அனுஷ்டித்துப் பார்க்கலாம். அநீதமான சட்டங்களை எதிர்த்துப்போராட சத்தியாக்கிரகம் ஓர் ஒழுங்கான ஆயுதம். மனுக்களின் மூலமாயும் மகஜர்களின் மூலமாயும் ஒருவருடைய கோரிக்கைகள் நிறைவேறாமல்போனால் அவருக்கு அப்பால் இரண்டு வழிகள்தான் உண்டு. ஒன்று பலாத்காரமாகப் பிரவேசித்துக் காரியத்தை சாதித்துக் கொள்ளுதல்; மற்றது எக்கஷ்டங்களையும் உற்சாகமாகச் சகித்துக்கொண்டு சட்டத்தை மீறி நடத்தல். அநீதமான சட்டங்களுக்குக் கீழ்ப்படியாதிருப்பது குற்றமாகாது. சத்தியமே நமக்கு பெரிது. ஒரு குறிப்பிட்ட சட்டத்தை மீறி நடப்பதினால் சமூகத்திற்கு நன்மை உண்டாகும் என்று தெரிந்தால் தைரியமாய் அச்சட்டத்தை மீறி நடக்கவேண்டியது சத்தியாக்கிரகிகளின் கடமை. கவர்ன்மெண்டின் காரியங்களில் தங்களுக்குள்ள அதிருப்தியையும் வெறுப்பையும் வெளிப்படையாகக் காட்டும்பொருட்டு சத்தியாக்கிரகிகள் அதிகார கவர்ன்மெண்டாரோடு ஒத்துழையாமல் இருந்தும் அவர்கள் சட்டத்திற்குக் கீழ்ப்படியாதிருப்பதும் ஒற்றுழையாமலிருப்பதும் சத்தியாக்கிரக தர்மங்களில் சில ஆகும். சத்தியாக்கிரகம் என்றால் ஏதோ மலைப்பாம்பு என்று நினைத்து

விடக்கூடாது. சிறுவர்களுக்குக்கூட அந்த தர்மத்தைக்கற்பிக்கலாம். தென் ஆபிரிகாவில் அதே தர்மத்தை அனுஷ்டித்து அபாரக்கணக்கான இந்தியர்கள் நன்மையடைந்தார்கள். ரௌலெட் மசோதா கட்டாயம் பொதுஜன சுயேச்சைக்கு வெகுதூரம் பாதகம் இழைக்கும் என்று என் மனதிற்கு ஆதியிலேயே ஏற்பட்டது. என்ன வந்தாலும் சரி அதை எதிர்த்துப் போராடவேண்டுமென்று எனக்குள் தீர்மானித்துக் கொண்டேன். இந்தியர் ஒருமனதாய் அம் மசோதாக்களை வெறுத்ததால் அதை சத்தியமான போராட்டமென்று கண்டு கொண்டேன். எத்தகைய கொடுங்கோல் ஆக்ஷியிலும்கூட பிரஜைகள் அனைவரும் வெறுக்கத்தக்க விதமாகச் சட்டம்செய்வது வழக்கமில்லை. இந்தியா கவர்ன்மெண்டார் அவ்வாறு செய்வதென்றால், அதை ஒருகாலும் சகித்துக்கொள்ள முடியாது. ரௌலட் மசோதாக்களைக் கண்டு ஜனங்கள் அடைந்த ஆத்திரத்தை நான் கவனித்தபோது பலாத்காரத்தில் ஒரு சமயம் அவர்கள் பிரவேசித்து விடுவார்களோ என்று பயந்தேன். நல்ல வழியை அவர்களுக்குக் காட்டவேண்டுமென்று நான் நினைத்தேன். சத்தியாக்கிரகத்தை உடனே உபதேசிக்க ஆரம்பித்தேன். ஆத்மசுத்தியையும் ஆத்மசோதனையையும் உத்தேசித்து ஏப்ரல் 6-ந்தேதியன்று எல்லாரையும் உபவாசமிருக்கச்சொன்னேன். இந்தியா பூராவும் அன்றைய தினம் ஜனங்கள் உபவாசமிருந்து தெய்வபிரார்த்தனைகள் நடத்தினார்கள். சிறிதும் சந்தடி செய்யாமல் பலாத்காரத்தில் இறங்காமல் விசேஷ அடக்கத்துடன் நடந்து கொண்டது முக்கியமாகக்குறிப்பிடத்தக்கது. யாருடைய தூண்டுதலும் இல்லாமல் கடைக்காரர்கள் கடைகளை மூடியும் வண்டிக்காரர்கள் வண்டியை நிறுத்தியும் எண்ணிறந்த ஜனங்கள் உண்ணா விருதமிருந்தும் சத்தியாக்கிரக

தினத்தை வெகு சிறப்பாகக் கொண்டாடினார்கள். ஏப்ரல் மாதம் 6-ந்தேதிக்குப்பின் "சட்டத்திற்குக் கீழ்ப் படியாமை" என்ற விருதத்தை அனுஷ்டிப்பதாய் ஏற்பாடாயிருந்தது. சிற்சில முக்கிய சட்டங்களை மட்டும் தற்கால ஏற்பாடாய் மீறி நடக்கலாம் என்றும் சத்தியாக்கிரக கமிட்டியார் தீர்மானித்திருந்தார்கள். சர்க்காரால் தடுக்கப்பட்டிருந்த பல துண்டு பிரசுரங்களை மீண்டும் வெளியிட்டு பொது ஜனங்களுக்கு அவற்றை விற்கவும் வினியோகிக்கவும் ஆரம்பித்தோம். மொத்தத்தில் ஏப்ரல் மாதம் 6-ந் தேதி இந்தியாவுக்கு ஒரு புதிய சக்தியை உண்டு பண்ணி விட்டது. பயங்கொள்ளிகளாய் இருந்தவர்கள் அதிகாரிகளைக் கண்டு அஞ்சுவதை அத்துடன் நிறுத்தினார்கள். ஜனத்திரள்களுக்குள் ஒருபுதிய வேகம்பரவலாயிற்று. எல்லோரும் விழித்துக்கொள்ள ஆரம்பித்தனர். ஆனால் சத்தியாக்கிரகத்தை எப்படி அனுஷ்டிப்பது என்று பலருக்கு நன்றாகத் தெரியவில்லை. டில்லியில் வெகு ஜாஸ்தியான ஜனங்கள் அதுவரை அசையாமலிருந்து திடீரென்று ஒரு புதிய சக்தியினால் எழுந்து நின்றவுடன் அன்னாரை வரம்புமீறி நடவாமல் தடுக்கத் தலைவர்களால்முடியவில்லை. அமிருதசரஸ்வாசிகளுக்கு சத்தியாக்கிரக தர்மத்தை நேரில் வந்து உபதேசிக்கும்படி டாக்டர் சத்தியபாலர். எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். ஸ்வாமி சிரத்தானந்தரோ டில்லிக்கு வர வேண்டுமென்று எழுதினார் நான் போய் அங்குள்ள ஜனங்களைச் சமாதானப்படுத்த வேண்டுமென்பது அவ்விரு தலைவர்களுடைய விருப்பமாகும். அமிருதசரஸுக்கு நான் அதுவரையில் போனதில்லை. எனக்கு வந்த இரண்டு கடிதங்களையும் அதிகாரிகள் வாசித்துப்பார்த்தார்கள். ஆகையினால் எந்தக் காரியத்தை உத்தேசித்து நான் டில்லிக்கும் அமிருதசரஸுக்கும்

போவதாயிருந்தேன் என்பது அதிகாரிகளுக்குத் தெரியும்.

ஏப்ரல் மாதம் 8-ந் தேதி டில்லிக்குப் பம்பாயிலிருந்து வண்டி ஏறினேன். டில்லியில் என்னை வந்து காணும்படி சத்தியபாலருக்கு ஒரு தந்தி கொடுத்தேன். ஆனால் வட மதுரையை நான் கடந்து செல்லுமுன் என்னை டில்லிக்குள் போகக் கூடாதென்று ஓர் உத்திரவு எனக்குப் பிறப்பிக்கப்பட்டது. இந்த உத்திரவுக்குக் கீழ்ப்படிந்து நடக்க எனக்கு இஷ்டமில்லாததால் நான் வண்டியில் போய்க் கொண்டே யிருந்தேன். பால்வால் என்ற ஸ்டேஷன் வந்து சேர்ந்தவுடன் எனக்குப் பிறப்பித்த மற்றோர் உத்திரவில் நான் பஞ்சாப் மாகாணத்தில் அடிவைக்கக் கூடாதென்றும் பம்பாய் மாகாணத்தை விட்டு அசையக் கூடாதென்றும் குறிப்பிட்டிருந்தது. அத்துடன் என்னை போலீசார் கைது செய்து வண்டியிலிருந்து என்னை அப்புறப்படுத்தி விட்டார்கள். என்னை கைது செய்த போலீஸ் சூப்ரின்டென்டெண்டு வெகு மரியாதையாய் என்னிடம் நடந்து கொண்டார். வட மதுரைக்கு என்னை அடுத்த வண்டியில் அழைத்துச் சென்றார்கள். அங்கிருந்து ஒரு சாமான் வண்டியில் சி. வ. மதுப்பூர் என்ற விடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டேன். பிறகு பம்பாய் போய்க் கொண்டிருந்த மெயில் வண்டியில் ஏற்றப்பட்டு, ஏப்பிரல் 10-ந் தேதி பம்பாயில் போயிறங்கினேன். இதற்குள் ஆமதபாத், வீரங்காம் ஆகிய விடங்களிலுள்ளவர்கள் நான் கைது செய்யப்பட்ட விஷயத்தை எப்படியோ அறிந்து ஆத்திரம் தாங்கமாட்டாதவர்களாகக் கடைகளைமூடி கட்டடங்களுக்குத் தீவைத்து தந்திக் கம்பிகளை அறுத்து ரயில் வண்டிகளை நிறுத்தி கொலைகள் புரிந்து கொள்ளையிட ஆரம்பித்துவிட்டனர். கெய்ரா ஜில்லாவில் என்னைப் பல

ருக்குந்தெரியும். ஸ்ரீமதி அனுஸூயாபாயும் நானும் சேர்ந்துழைப்போமென்று ஆமதாபாத்மில் தொழிலாளருக்கு நன்ருய்த் தெரியும். அனுஸூயாபாயைக் கைது செய்து விட்டதாக ஒரு வதந்தி எப்படியோ உண்டாகி ஆமதாபாத்தில் கலவரம் ஆரம்பித்துவிட்டது.

எங்களிருவரிடத்திலும் ஜனங்களுக்கிருந்த ப்ரீதியினுலும் எங்களைக் கைது செய்துவிட்டதாகக் கேட்டவுடனே அவர்களுக்கேற்பட்ட ஆத்திரத்தினுலுமே வீரங்காமிலும் ஆமதாபாத்திலும் கலவரம் நடந்தது. அதைக் கலகம் என்று சொல்லக்கூடாது. அராஜகப்புரட்சியுமன்று. புரட்சிக்காரர்கள் பின்னுலிருந்துகொண்டு வேலை செய்ததாயும் நம்ப இடமில்லை. இப்படியிருக்க அரசரோடு யுத்தஞ் செய்ததாக அவர்களின்மீது குற்றஞ் சுமத்தி அவர்களில் பலரைக் கவர்ன்மெண்டார் தண்டித்தது பெரிய பிசகென்பதே என்னுடைய அபிப்பிராயம். ஆமதாபாத் வாசிகளுக்கு விதிக்கப்பட்ட அபராதம் மகா கடுமையானது. அனுவசியமான கஷ்டத்துக்கு ஜனங்கள் ஆளாகிவிட்டார்கள். தண்டத் தொகையை வசூலிப்பதில்கூட அதிகாரிகள் கடுமைகாட்டினுர்கள். பலருக்குச் கோபத்தை மூட்டினுர்கள். லட்சத்து எழுபத்தாராயிரம் ரூபாயையும் கொடுங்கள் என்று கேவலம் தொழிலாளரைப்பார்த்துச் சொல்லியது முற்றிலும் தர்மமல்ல. ப்ராணிபாக்களுக்கும் பட்டிதார்களுக்கும் அனுவசியமான கஷ்டம் உண்டுபண்ணப்பட்டிருக்கிறது. ராணுவச் சட்டத்தை ஆமதாபாத்தில் அமுல் நடத்தியதும் அநியாயம். தலைகால் புரியாமல் ராணுவ அமுல் நடத்தியதால் பல நிரபராதிகள் வீணே உயிர் துறக்கும்படி ஆயிற்று. இவ் விசனகாமான சம்பவங்கள் நீங்கலாக வேறு சந்தர்ப்பங்களிலும் பம்பாய் மாகாணத்தின் மற்ற விடங்களிலும் அதிகாரிகள் விசேஷ

அடக்கத்துடன் நடந்து கொண்டதை இங்கு அவசியம் குறிப்பிடவேண்டும்.

### லார்ட் ஹண்டரின் குறுக்கு விசாரணை.

இவ்வாறு மகாத்மா காந்தி எழுதிக்கொடுத்த ஸ்டேட்மெண்டை ஆதாரமாகக்கொண்டு விசாரணைக் கமிட்டியின் தலைவராகிய லார்டு ஹண்டர் பிறகு அவரைக் குறுக்கு விசாரணை செய்ய வாரம்பித்தார். லார்டு ஹண்டரின் கேள்விகளும் அவற்றிற்கு மகாத்மா அளித்த பதில்களும் பின்வருமாறு:—

கேள்வி:—ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சிக்குத் தாங்கள் தான் காரணபூதரோ?

பதில்:—ஆம், ஐயா.

கேள்வி:—ஸத்தியாக்கிரஹம் என்றால் என்ன? அதைக் கொஞ்சம் விவரித்துச் சொல்லவேண்டும்.

பதில்:—பலாத்காரமான நடவடிக்கைகளைத்தடுக்கவும் ஸத்தியமார்க்கத்தில் நடக்கும்படி ஜனங்களைத் தூண்டவுமே ஸத்யாக்கிரஹ நிகழ்ச்சி ஏற்பட்டதாகும். இந்தியர் தங்கள் குறைகளை யகற்றிக்கொள்ளவும், முரட்டுத்தனமான காரியங்களில் பிரவேசிக்காமலிருக்கவும் ஸத்தியாக்கிரஹந்தான் ஒப்பற்ற ஆயுத மென்பது என்னுடைய அனுபோகம். ரௌலட் சட்டம் சம்பந்தமாய் ஸத்தியாக்கிரஹத்தை நான் ஆரம்பித்தேன். ஸத்தியாக்கிரஹ சபதம் பூணும்படி ஜனங்களுக்குச் சொன்னதும் இதை யொட்டித்தான்.

கேள்வி:—இந் நிகழ்ச்சியில் எத்தனை பேரை சம்பந்தப்படுத்த முடியுமோ அத்தனைபேர்களையும் சம்பந்தப் படுத்துவதாகத்தானே ஜனங்களுடைய உத்தேசம்?

பதில்:—ஆம்; ஸத்தியத்துக்கு மாறுபடாமலும், பலாத்காரத்தில் பிரவேசிக்காமலும், எத்தனை பேரை இந்

நிகழ்ச்சியில் சம்பந்தப்படுத்தலாமோ அத்தனை பேர்களைச் சேர்ப்பதாகத்தான் எனது உத்தேசம். 10 லட்சம்பேர் அம்மாதிரி அகப்பட்டாலும் அவர்களைச் சேர்த்திருப்பேன்.

கேள்வி:—சர்க்காருக்கு எதிரிடையான நிகழ்ச்சியல்லவா இது?

பதில்:—கவர்ன்மெண்டுக்கு விரோதமானநிகழ்ச்சியென்று ஜனங்கள் கருதவில்லை. சட்டங்களை மீறி நடப்பதற்காகமட்டும் இந்நிகழ்ச்சி ஏற்பட்டதல்ல. கவர்ன்மெண்டு என்னுடைய வசத்திலிருந்து அதீதமான சில சட்டங்களை அகற்ற வேண்டுமென்று ஸத்தியாக்கிரஹிகள் சொல்லுவார்களானல் அப்படிப்பட்ட ஸத்தியாக்கிரஹத்தை நான் நிச்சயம் ஆதரிப்பேன். அவர்களுடைய ஆலோசனையையே நான் கேட்டு நடப்பேன். ஸத்தியாக்கிரஹிகள் ஸத்தியத்துக்குப் போராடுவோராதலால் அவர்களுடைய வார்த்தைக்குச் செவிகொடுத்தே ஆகவேண்டும்.

கேள்வி:—கவர்ன்மெண்டுக்கு எதிரிடையான லட்சியங்களுள் ஒரு புதிய கட்சியைக் கிளப்பிவிட்டு, அதைப் பலப்படுத்திவந்தால் கவர்ன்மெண்டு வெகு காலம் இருக்கமுடியுமா?

பதில்:—முடியும் என்பதே என்னுடைய திடமான அபிப்பிராயம். தென்னுப்பிரிக்காவில் எனது அனுபோகம் இதுதான். ஜெனரல் ஸ்மட்ஸ் அங்கு வந்து ஸத்தியாக்கிரஹப் போராட்டத்தை முடிவுவரையில் பொறுமையாய்ப் பார்த்திருந்து கடைசியாய் ஸத்தியாக்கிரஹிகளின் நடத்தையைப் பெரிதும் சிலாகித்தார். எல்லோரும் அதேமாதிரி நடந்தால் ஸத்தியாக்

கிரஹத்தைக்கண்டு யாரும் சந்தேகப்படத்தேவை யில்லையென்று அவர் அபிப்பிராயப்பட்டார்.

கேள்வி:—தென்னாப்பிரிக்காவில் இதேமாதிரி ஸத்தியாக் கிரஹ சபதம் பூண்டதுண்டா?

பதில்:—உண்டு. அநீதமான சட்டங்களை ஒவ்வொருவரும் மீறி நடக்கவேண்டுமென்று விதியிருந்தது. அதன் படியே ஒவ்வொருவரும் நடந்தார்கள்.

கேள்வி:—ஸத்தியாக்கிரஹ சபதம் எடுத்துக் கொள்ளு வோரனைவரும் ஒரு கமிட்டியார் குறிப்பிடுகிற சட் டங்களை மீறி நடப்பதாகத்தானே உத்தேசம்?

பதில்:—ஆம்; இந்நிர்ப்பந்தம் எதற்காக வைத்திருக்கிற தென்றால் ஒவ்வொரு ஸத்தியாக்கிரஹியும் தன்னிஷ் டப்படி எந்தச் சட்டத்தையும் மீறி நடக்காதிருப்ப தற்குத்தான். எந்தெந்த சட்டங்களை மீறி நடக்கலா மென்று ஒரு கமிட்டியார் ஆலோசனை சொன்னால் அதை மற்ற ஸத்தியாக்கிரஹிகள் பின்தொடர்ந்து நடக்க வெகு அனுகூலமாயிருக்கும்.

கேள்வி:—வைத்தியர்களுக்குள் அபிப்பிராய பேதமிருப் பதுபோல் ஸத்தியாக்கிரஹிகளும் மாறான அபிப்பிரா யம் கொண்டிருப்பது ஸகஜந்தானே?

பதில்:—முடிவில் அப்படித்தான், பிரபுவே, ஆய்விட்டது.

கேள்வி:—ஒரு குறிப்பிட்ட சட்டம் நியாயமென்று ஒரு ஸத்தியாக்கிரஹிக்குத் தோன்றி அச்சட்டம் அநீத மானதென்று ஸத்தியாக்கிரஹ மத்திய கமிடியார் அபிப்பிராயப்பட்டால் அந்தஸத்தியாக்கிரஹி என்ன செய்வது?

பதில்:—அச்சட்டத்தை அவர் மீறிநடக்கவேண்டியதில்லை. மனச்சாட்சியின்படி நடக்க அவருக்குரிமையுண்டு.

அத்தகைய ஸத்தியாக்கிரஹிகளும் எத்தனையோபேர் இருந்தார்கள்.

கேள்வி:—அப்படியானால் அது ஆபத்தான போராட்டமல்லவா? ஒருவனுடைய மனச்சாட்சியைக் கட்டுப்படுத்துவது தர்மமா?

பதில்:—தேசத்தில் பலாத்காரம் என்ற கெட்ட குணம் அடியோடு ஒழிந்து ஒவ்வொருவருடைய ஆத்மாவும் பரிசுத்தமடைய ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சியே உத்தமமான வழியென்று எனக்குத் தோன்றுகிறது. யாருடைய மனச் சாட்சியையும் ஸத்தியாக்கிரஹ கமிட்டியார் கட்டிப்போடவில்லை. ஆகையால் ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சியை அபாயமான நிகழ்ச்சியென்று சொல்லக்கூடாது.

கேள்வி:—நான் ஏதோ ஸத்தியாக்கிரஹ விஷயமாய்த் தங்களுக்கு ஆலோசனை சொல்லுவதாக நினைத்துக் கொள்ளவேண்டாம். சந்தேக நிவர்த்தியை உத்தேசித்தே நான் கேட்டேன். ரௌலட் சட்டத்தைத் தாங்கள் எதற்காக ஆட்சேபிக்கிறீர்கள்?

பதில்:—ரௌலட் கமிட்டியின் யாதாஸ்தை அடி முதல் நுனிவரையில் வாசித்துப்பார்த்தேன். அதில் சொல்லப்பட்டிருக்கும் யோசனைப்படி சட்டம் செய்தால் ஜனங்களுக்கு அனர்த்தந்தான் என்றும் கண்டுகொண்டேன். பொதுஜன சுயேச்சையையும் ஜனங்களின் தன் மதிப்பையும் அத்தகைய சட்டங்கள் நிச்சயம் கெடுத்துவிடக்கூடும். மேலும் ரௌலட் கமிட்டிக்குக் கிடைத்துள்ள சாட்சியங்களை ஆதாரமாகக் கொண்டு ஒரு கடுமையான சட்டம் செய்யச் சிறிதும் நியாயங்கிடையாது. எனவே அம்மாதிரி ஒரு நியாயமில்லாத மசோதாவைச் சட்ட சபையில்

கொண்டுவந்ததும் தேச ஜனங்கள் ஒருமித்து அதைக் கண்டிக்கலானார்கள். ஏகாதிபத்யத்தின் நன்மையை உத்தேசித்தாவது அப்படிப்பட்ட ஒரு மசோதாவைச் சட்டமாக்கக்கூடாதென்று என் புத்திக்குப்பட்டது. நான் உடனே எதிர்க்கவாரம்பித்தேன்.

கேள்வி:—அராஜகம் முதலிய புரட்சிக்குற்றங்களை அடக்கவல்லவோ அம்மசோதா கொண்டுவரப்பட்டது?

பதில்:—அந்நோக்கங்கள் நல்லவைதான். ஆனால் அனுசரிக்கப்படும் முறைகளையே நான் கண்டிக்கிறேன்.

கேள்வி:—நிர்வாக அதிகாரிகளுக்குக் காப்புச் சட்டத்தின் கீழ் ஏற்பட்டிருந்த அதிகாரத்தைவிடப் புதிதாய் எவ்வித அதிகாரமும் ரௌலட் மசோதாப்படி கொடுக்கப்பட்டுவிடவில்லை.

பதில்:—மகாயுத்தத்தின்போது ஏற்பட்டிருந்த ஒரு நெருக்கடியான நிலைமையை மதித்து காப்புச் சட்டம் செய்யப்பட்டதாகும். அப்பொழுது கூடப்பலர் அதை ஆட்சேபித்தார்கள். அது சட்டமானபின் அதை அதிகாரிகள் அமுல் நடத்திய தோரணையைப்பார்க்கும்போது, ரௌலட் மசோதாவையும் அப்படித்தான் அமுல் நடத்துவார்களென்ற சந்தேகம் தோன்றிற்று. மேலும் யுத்தம் முடிந்தபின் ரௌலட் சட்டத்தைப்போன்ற சட்டம் செய்வதற்கு அவசியமே கிடையாது.

கேள்வி:—மாகாண கவர்ன்மெண்டார் பார்த்து ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் ரௌலட் சட்டத்தை அமுல் நடத்த வேண்டுமென்று தீர்மானித்தாலன்றி அச்சட்டம் அமுலுக்கு வர இடமில்லையே?

பதில்:—வாஸ்தவம்; ஆனால் மாகாண கவர்ன்மெண்டார் தங்களுக்குக் கொடுக்கப்படும் அதிகாரத்தை எப்படி

உபயோகிப்பார்களென்பது எங்களுக்குத் தெரியும். சில சமயங்களில் அவர்களுக்குப் பைத்தியம் பிடித்து விடுகிறது.

கேள்வி:—அப்படியானல் இந்தியா கவர்ன்மெண்டுக்கு ஜனங்கள் ஆட்சேபனையை ஏன் தெரிவித்திருக்கக் கூடாது?

பதில்:—லார்டு செம்ஸ்போர்டை நேரில் பார்த்து நமஸ்காரம் செய்து கேட்டுக்கொண்டேன். அதேமாதிரி ஒவ்வொரு ஆங்கிலேய உத்தியோகஸ்தரையும் கண்டு பேசினேன். ரௌலட் கமிட்டியின் சிபார்சுகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவந்தே யாகவேண்டியிருக்கிறதென்று அவர்கள் பிடிவாதமாகப் பதில் சொன்னார்கள். தங்களைக் கேட்டுப் பயனில்லை யென்றும் தெரிவித்தார்கள்.

கேள்வி:—அதற்காகத் திடீரென்று சட்டத்திற்குக் கீழ்ப்படிவதில்லையெனத் தீர்மானித்து விடுவதா? கொஞ்சங் கொஞ்சமாகவல்லவோ கவர்ன்மெண்டுக்கு நம்பிக்கை யுண்டுபண்ணவேண்டும்?

பதில்:—என்னுடைய சொந்த தகப்பனர் என் மனதுக்கு விரோதமான ஒரு வெறுக்கத்தக்க நிர்ப்பந்தம் விதித்தால்கூட அதை நான் மீறிநடந்தே தீருவேன். அந் நிர்ப்பந்தத்தை யொழித்துவிட்டு மறுகாரியம் பார்ப்பேன். அப்படிச் செய்வதனல் என் தகப்பனருக்கு நன்மை செய்வதாகவே நான் கருதுவேன். அவ்வாறு கருதிப் பலதடவைகளில் பலனடைந்திருக்கிறேன். பிறருக்கும் அதை உபதேசித்திருக்கிறேன் என் தகப்பனருடைய விஷயத்தில் கண்டிப்பாய் நடக்கும் என்னை ஒரு கவர்ன்மெண்டினிடத்தில்

தாட்சண்யம் காட்டும்படி சொன்னால் அதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது.

கேள்வி:—"ஹர்த்தால்" அல்லது 'வேலைநிறுத்தம்' என்ற வார்த்தையின் கருத்தைக் கொஞ்சம் விளக்கிச் சொல்ல முடியுமா?

பதில்:—வெகு காலத்திற்கு சேர்ந்தாற்போல் வேலை நிறுத்தம் ஏற்பாடுசெய்தால் தேசத்துக்குக் கெடுதல்தான். ஒரு நாள் அல்லது சில தினங்கள் கடைகளை மூடி வைத்துவிட்டு வேலை நிறுத்தம் போடுவதனால் அனர்த்தம் வந்துவிடாது. யாரையும் பலவந்தப்படுத்தாமல் வேலை நிறுத்தம் போடச்சொல்ல வேண்டும். துண்டுப் பிரசுரங்களின் மூலமாய் வேலைநிறுத்தம் செய்யும்படி கேட்டுக்கொள்ளலாம். அது பலாத்காரமாகாது. ஆனால் வேலை நிறுத்த தினத்தன்று யாரும் யாரையும் பலவந்தப்படுத்தக்கூடாது. நல்ல வார்த்தைகள் சொல்லிச் சரிப்படுத்துவதே ஸத்தியாக்கிரஹிகளின் கடமை.

கேள்வி:—வேலைநிறுத்தம் ஏற்பாடு செய்தால் கட்டாயம் கலவர முண்டாகுமென்று உங்கள் சீடரான ஸ்வாமி சிரத்தானந்தர் டில்லி சம்பவங்களுக்குப்பின் உங்களுக்கு ஒரு கடிதம் எழுதவில்லையா?

பதில்:—ஸ்வாமி சிரத்தானந்தர் என்னுடைய சீடரல்ல. என்னோடு சேர்ந்துழைக்கும் ஸகாவே யாவர். அவர் எழுதிய கடிதம் இன்னதென்று எனக்கு ஞாபகமில்லை. ஆனால் சட்டத்துக்குக் கீழ்ப்படியாமை என்ற விரதத்தை இனி மேற்கொண்டால் பலாத்காரத்தில் நிச்சயம் ஜனங்கள் பிரவேசித்து விடுவார்களென்று அவர் அபிப்பிராயப்பட்டதாக எனக்குத் தெரிந்தது. ஸத்தியாக்கிரஹத்தை எல்லாப் பொது

ஜனங்களுக்கும் உபதேசிப்பது பிசகென்றும் அவர் அபிப்பிராயப்பட்டார். அவ்வபிப்பிராயங்களை நான் ஆதரிக்கவில்லை. ஜனங்களின்மீது போதியவளவு கட்டுப்பாடு எனக்கில்லாமற் போனமையால் சட்டத்திற்குக் கீழ்ப்படியாமை என்ற தர்மத்தை நான் நிறுத்திவிட வேண்டியதாயிற்று. ஜனங்களின் மனத்தையும் கவர்ன்மெண்டின் கவனத்யையும் கவருவதற்காக வேலைநிறுத்தம் ஏற்பாடு செய்யப்பட்டது. தன்னடக்கமும் பொறுமையும் தியாகம் செய்யும் குணமும் ஒருவனுக்கு ஏற்படும் வண்ணம் சட்டத்திற்குக் கீழ்ப்படியாதிருத்தல் என்ற நோன்பு சிருஷ்டிக்கப்பட்டது. வேலைநிறுத்தத்தினுல் பலனுண்டு என்பதைமட்டும் நான் கண்டுகொண்டேன்.

கேள்வி:—வேலைநிறுத்தம் ஸத்தியாக்கிரஹம் ஆகிய இரண்டையும் ஏககாலத்தில் ஜனங்களை அனுஷ்டிக்கும்படி சொல்வதனுல் பலாத்காரமான காரியங்கள் கட்டாயம் நடக்காதா ?

பதில்:—என்னுடைய அனுபோகத்தில் அப்படியில்லை. ஆயிரக்கணக்கான ஜனங்கள், ஸ்திரீ குழந்தைகள் உள்பட, சாந்தமாயும் சந்தடி செய்யாமலும் ஊர்வலம் போனதைக்கண்டு எனக்கு அத்தியாச்சரியம் உண்டாயிற்று. ஸத்தியாக்கிரஹ தர்மத்தை அவர்களுக்கு ஒழுங்காய் போதித்திராதிருந்தாலல்லவா சாந்தமாய் ஊர்வலம் போயிருக்கமுடியாது, வேலைநிறுத்தங்களும் நடந்திருக்காது. பால்வால் ஸ்டேஷனில் என்னைக் கைதுசெய்தது உண்மையே. கைதுசெய்யவில்லையென்று யாரும் சொல்ல முடியாது. "மகான்காந்தி உங்களைக் கைதுசெய்கிறேன்" என்று போலீஸ் சூபரின்டென்டென்டுகூடச் சொன்னர்.

ஏதோ என்னைக் கைதுசெய்யவில்லைபோல் சிலர் பேசுவதும் எழுதுவதும் விநோதமாகவேயிருக்கிறது.

கேள்வி:—டில்லிக்கும் பஞ்சாபுக்கும் போகக்கூடாதென்று தானே உங்களுக்கு உத்திரவு பிறந்தது ?

பதில்.—அவ்வாறு உத்திரவு பிறப்பித்ததோடு நிற்காமல் என்னைக் கைதுசெய்து பலவந்தமாகப் பம்பாய்க்குத் திருப்பி யழைத்துச் சென்றார்கள். என்னை யவ்வாறு பஞ்சாபுக்கும் டில்லிக்கும் போகவிடாமல் தடுத்தது பிசகு. ஜனங்களைச் சமாதானப்படுத்தவே நான் அவ்விடங்களுக்குப் புறப்பட்டேன்.

கேள்வி:—நீங்கள் அங்குபோனால் நிச்சயம் கலவரமுண்டாகுமென்று கவர்ன்மெண்டார் மனப்பூர்வமாய் நம்பியே அத்தகைய தடையுத்திரவு பிறப்பித்ததாக நீங்கள் கருதலாகாதா ?

பதில்:—அதைப்பற்றி நான் ஆட்சேபிக்கவில்லை. என்னைக் கைது செய்தபின்புதான் டில்லியிலும் பஞ்சாபிலும் ஆமதாபாத்திலும் கலவரம் நடக்க வாரம்பித்தது.

கேள்வி:—ஆமதாபாத்தில் நடந்த சம்பவங்களைப்பற்றி தாங்கள் ஏதாவது சொல்ல முடியுமா ?

பதில்:—என்னிடத்தில் ஆமதாபாத்வாசிகளுக்கு அத்தியந்தப் பிரீதியுண்டு. என்னைக் கைதுசெய்துவிட்டதாக சமாசாரம் கிடைத்ததும் அவர்களுக்கு ஆத்திரமுண்டாய்விட்டது. அப்பால் இன்ன நடந்ததென்பதை நான் நேரில் பார்க்கவில்லை. ஆனால் ஜனங்கள் அங்கு செய்ததாகச் சொல்லப்படும் காரியங்கள் முற்றிலும் நியாயத் தவறுஎன்று நான் கண்டிப்பாகச் சொல்லுவேன். தன்னடக்கத்தை யிழந்து அவர்கள் காரியஞ் செய்துவிட்டார்கள். ஆனால் அவர்களை வெகுதூரம் கவர்ன்மெண்டார் சோதித்ததும் பிசகு. மொத்தத்

தில் கவர்ன்மெண்டார் செய்த பிசகைவிட ஜனங்கள் செய்தபிசகை நான் அதிகமாகக் கண்டிக்கிறேன். நான் விடுதலையடைந்து ஆமதாபாத்திற்குத் திரும்பியதும் ஏப்ரல் 14-ந் தேதி அங்கு ஒரு பொதுக்கூட்டம் நடத்திவைத்து கூடியவரையில் அமைதியையுண்டுபண்ண முயன்றேன். ஆமதாபாத்தில் நடந்த கலவரம் கட்டுப்பாடாய்ச் செய்யப்பட்டதாக எனக்குத் தெரிந்தது. அதைப் பகிரங்கமாயும் சொன்னேன். மற்றவிடங்களில் கட்டுப்பாடாய் கலவரம் நடந்ததாக நான் சொல்ல முடியாது. ஆமதாபாத்தில்கூட ஆழ்ந்த சதியாலோசனை முற்கூட்டி நடந்ததாக நான் சொல்லமாட்டேன். புரட்சிக்காரர்களின் தொகை அங்கு வெகுதூரம் குறைந்துவிட்டது. அரைப் படிப்புக்காரர்களும், பயாஸ்கோப் சாலைகளுக்கு அடிக்கடி போவோரும், வீண்வதந்திகளைப் பரப்புவதில் இச்சையுள்ளோரும் செய்த விஷமத்தினாலேயே ஆமதாபாத்தில் அனாவசியமான உயிர்ச்சேதத்திற்கும் பொருட்சேதத்திற்கும் இடமேற்பட்டது. பி. ஏ. எம். ஏ. பட்டப்பரீட்சைகளில் தேறியவரே கலவரத்துக்குக் காரணமென்று நான் ஒருபோதும் சொன்னதில்லை. படித்தவர்கள் என்ற வார்த்தைக்குப் பட்டதாரிகள் என்று அர்த்தங் கொண்டுவிடக்கூடாது. எழுத்துவாசனை யுள்ளவர்கள் என்றுதான் பொருள் கொள்ளவேண்டும்.

கேள்வி:—கலகக்காரர்களுக்குப் பொதுவாய் ஒரு நோக்கமிருந்த தென்பதை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா?

பதில்:—அப்படிச் சொல்லிவிடக்கூடாது. நானும் அப்படிச் சொல்லவில்லை. இரண்டொரு அஸாமிகளின் நோக்கம் ஒரேமாதிரியா யிருந்திருக்கலாம்.

கேள்வி:—மொத்தத்தில் ஐரோப்பியருக்கு விரோதமாய்க் கலகம் நடந்ததென்பது உண்மைதானா?

பதில்:—கவர்ண்மெண்டுக்கு எதிரிடையாய் நடந்ததென்று சொன்னால் அதை நான் ஒப்புக்கொள்வேன். ஐரோப்பியருக்கு விரோதமாய் அது நடக்காமலிருந்திருந்தால் எனக்குச் சந்தோஷந்தான். ஆனால் நிச்சயமாய் ஒன்றும் சொல்லமுடியவில்லை.

கேள்வி:—ஸத்தியாக்கிரஹக் கொள்கையின்படி குற்றஞ் செய்தவர்களைச் சிவில் அதிகாரிகள் தண்டிப்பது சரிதானா?

பதில்:—எந்த தண்டனை விதித்தபோதிலும் அதை ஆட்சேபிப்பது ஸத்தியாக்கிரஹிகளின் காரியமன்று. போலீஸாருக்கு உதவியா யிருந்து குற்றவாளிகளின் பெயரைச் சுட்டிச்சொல்லுவதும் ஸத்தியாக்கிரஹிகளின் கடமையன்று. ஆனால் ஜனங்களை பலாத்காரத்தில் இறங்காதபடி புத்திசொல்லி அவர்களை நல்வழிப்படுத்தி அதன்மூலமாய் அதிகாரிகளுக்கு ஸத்தியாக்கிரஹிகள் உதவிபுரியலாம்.

கேள்வி:—ஒரு கொடூரமான காரியம் தமக் கெதிரில் நடந்தால் அதைக்கூட ஸத்தியாக்கிரஹிகள் போலீஸாருக்கு அறிவிக்கவேண்டியது கடமையல்லவா?

பதில்:—ஸத்தியாக்கிரஹிகளுக்கு எல்லோரும் சகோதரர்கள்தான். ஸத்தியாக்கிரஹிகள் எப்போதும் ஒரு எதிரி தரப்பில் வாதிக்கும் வக்கீல்களுக்கு ஒப்பாவர். எத்தனையோ மகாபாதகர்களை எனக்கு நேரில் தெரியும். அவர்களை நல்வழிப்படுத்த நான் முயன்றிருக்கிறேன். ஆனால் அவர்களுடைய பெயரை வெளியிடுவது தர்மமல்ல. அவர்களை ஒழுங்குக்குக் கொண்டுவரமுடியாமற் போனால்கூட அவர்களை நான் போலீ

ஸாருக்குக் காட்டிக் கொடுக்கமாட்டேன். தம் முன்னால் நடந்த குற்றங்களைக்கூட ஸத்தியாக்கிரஹிகள் போலீஸாருக்குத் தெரிவிக்கக் கடமைப் பட்டவர்களல்ல. ஆனால் இதே சந்தர்ப்பத்தில் நான் எப்படி இன்னொரு சமயம் நடப்பேனோ என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது.

கேள்வி:—ராணுவ அமுலைப்பற்றி உங்களுடைய அபிப்பிராய மென்ன ?

பதில்:—ராணுவ அதிகாரிகள் பிறப்பித்த உத்திரவை அவ்வளவாக நான் சிலாகிப்பதற்கில்லை. நாலைந்துபேர் அகஸ்மாத்தாய் ஒன்றுகூடிவிட்டால்கூட அவர்களை ராணுவத்தார் சுட்டுத்தள்ளுவதென்றால் அதை யார்தான் ஒப்புக்கொள்ளமுடியும். ராணுவ அதிகாரிகளின் விளம்பரத்தைப்படிக்காதவர்கள்எத்தனையோ பேர் இருக்கலாம். அத்தகைய நிரபராதிகள் எங்கேயாவது ஒன்றுசேரநேர்ந்தால் அவர்களைச் சுட்டுவிடுவது தர்மமாயிராது. அரசரோடு யுத்தஞ்செய்ததாகச்சால்லி ஸ்பெஷல் விசாரணை சபையார் சிலருக்குத் தண்டனை விதித்திருப்பதாகத் தெரிகிறது. அதுவும் நியாயமல்ல. ஒரு நாகரீக கவர்ண்மென்டுக்கு எடுத்த நியாயம் இதல்ல. அளவுக்கு மிஞ்சிய கஷ்டத்துக்கு ஜனங்கள் அனுவசியமாய் ஆளாகியிருக்கிறார்கள். தாங்கமுடியாத அபராதம் ஏழை ஜனங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. நடியாடு கலெக்டரின் காரியங்கள் அக்கிரமமானவையென்று நான் நிச்சயமாய்ச் சொல்லுவேன்.

ஸர் சிமன்லால் சேதல்வாட்டின் கேள்விக்குப் பதில்.

கேள்வி:—ஸத்தியாக்கிரஹம் என்றால் ஸத்தியத்துக்காகப்

பாடுபடுவதும், இடையே கஷ்டம் வந்தால் அதைச் சகித்துக் கொள்வதுந்தானே ?

பதில்:—ஆம்.

கேள்வி:—ஒரு விஷயம் ஸத்தியந்தான் என்று நிர்ணயிப்பது யார்?

பதில்:—அவரவரே அதை நிர்ணயிக்க வேண்டும். ஒரு ஸத்தியமான விஷயத்தில் விசேஷ அபிப்பிராய பேதமிருக்க முடியாது. ஸத்தியத்தைப் பின்பற்றி நடப்பதனால் குழப்பமும் ஏற்படாது. ஒருவருக்கு ஸத்தியமாய்ப்படுவது மற்றவருக்கு மாருகப்படலாமென்ற நோக்கத்தின்பேரில் தான் ஸத்தியாக்கிரஹிகள் பலாத்காரத்தில் பிரவேசிக்கக் கூடாதென்று கண்டிப்பாய் விதி ஏற்பட்டிருக்கிறது.

கேள்வி:—ஸத்தியத்தைக் கடைப்பிடித்து நடப்போருக்கு விசேஷ தைரியமும் புத்தி தீட்சண்யமும் வேண்டுமல்லவா ?

பதில்:—அப்படியல்ல. சாதாரண அறிவு ஒருவனுக்கிருந்தால் அதுவே போதுமானது.

கேள்வி:—ஸத்தியாக்கிரஹம் உண்மையில் பலன்தர ஸத்தியாக்கிரஹிகளின் தொகை அதிகமாய்த் தானேயிருக்க வேண்டும்?

பதில்:—ஒழுங்கான ஸத்தியாக்கிரஹி ஒருவர் இருந்தால் கூட வெற்றிக்கு அது போதுமானது.

கேள்வி:—நீங்களே ஸத்தியாக்கிரஹியல்லவென்று சொல்லும்போது மற்றவர்கள் எப்படியிருப்பார்கள் ?

பதில்:—நான் ஒரு அபூர்வமான மனுஷ்யனல்ல. என்னைவிட மேலான ஸத்திய ஸந்தர்கள் இருக்கக்கூடும். படிப்பு வாசனையில்லாத சுமார் நாற்பதினுயிரம் இந்தியர் தென்னுபிரிக்காவில் ஸத்தியாக்கிரஹ சபதம்

பூண்டொழுகினார்கள். அவர்களுடைய அடக்கத்தையும் பொறுமையையும் நான் இங்கு அதிகமாய் சிலாகிக்கக்கூடாது.

கேள்வி:—ஆனால் அங்கு எல்லோரும் ஒரு மனதாய் நின்று காரியங்கள் நடத்தினார்கள்.

பதில்:--ஒரு மனதான அபிப்பிராயம் தென்னாப்பிரிக்காவை விட இந்தியாவில் ஜாஸ்தியாயிருக்கிறதென்பதே என்னுடைய அபிப்பிராயம். ரௌலட் சட்டத்தை ஆட்சேபிக்காத இந்தியர் கிடையாது. பலாத்காரத்தினால் ஒருவன் அடையக்கூடிய நன்மையைவிட ஸத்தியாக்கிரஹத்தினால் அதிக நன்மையை ஒருவன் நிச்சயமாய் அடையலாம் என்று நான் ஜனங்களுக்குத் தெளிவாய் வற்புறுத்தி வந்தேன்.

கேள்வி:—தன்னடக்கமுள்ள ஸத்தியாக்கிரஹிகளே கஷ்டத்தைச் சகித்திருக்க முடியும்?

பதில்:—கஷ்டத்தைச் சகித்திருக்க பிரமாதமான தன்னடக்கம் வேண்டியதில்லை. இத்தேசத்தாருக்கு அடக்கம் உண்டென்று பிரத்தியட்சத்தில் பல தடவை காட்டியிருக்கிறார்கள். கெய்ரா ஜில்லாவில் ஜனங்கள் சென்ற வருஷம் எத்தனையோ கஷ்டங்களுக்கு ஆளாகியும் அடக்கத்தை மட்டும் இழக்கவில்லை. சென்ற எப்ரல் மாதம் நடந்த ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சியின் பலனாக தேசம் ஓரளவு பரிசுத்தமடைந்திருக்கிறதென்பதே என்னுடைய அபிப்பிராயம்.

கேள்வி:—இப்படிச் செய்வதனால் கவர்ண்மெண்டாருடன் ஒத்துழைப்பதாகத் தாங்கள் நினைத்து வருகிறீர்கள். கஷ்டப்பட ஒருவன் தயாராயிருக்கிறானென்றால் கவர்ண்மெண்டினிடத்தில் அவனுக்குள்ள கெட்ட

எண்ணத்தை அது விளக்கவில்லையா? கெட்ட எண்ணத்தை உண்டு பண்ணுதா?

பதில்:—எனது 30 வருஷ அனுபோகத்தில் அவ்வாறில்லை. தென்னுப்பிரிக்கா இந்தியர் எத்தனையோ கஷ்டங்களுக்கு ஆளாகியும் கவர்ண்மென்டாருடன் நெருங்கிப்பழகாமலில்லை. ஜெனரல் ஸ்மட்ஸுக்கு இந்தியர் ஒரு வாழ்த்துப் பத்திரங்கூட வாசித்துக் கொடுத்தார்கள்.

கேள்வி:—ஸத்தியாக்கிரஹ சபதம் எடுத்துக் கொள்ளாமல் அந்நிகழ்ச்சியில் யாரும் சம்பந்தப்பட முடியாதோ?

பதில்:—சபதத்தில் கையெழுத்துப் போட்டாலன்றி சட்டத்திற்குக் கீழ்ப்படியாமல் இருக்கக் கூடாதென்று ஒரு கட்டுப்பாடுண்டு. கையெழுத்துப் போடாதவர்கள் வேறு விதங்களில் ஸத்தியத்தையனுஷ்டித்து நடக்கும்படி கேட்டு விடப்பட்டார்கள். பலாத்காரத்தில் பிரவேசிக்காமல் ஸத்தியத்தைக் கடைப்பிடித்து நிற்கும்படி பலருக்கு உபதேசிக்கப் பட்டது.

கேள்வி:—மிஸஸ் பெஸண்டுக்கும் ஜனங்களுக்கும் இதையொட்டி அபிப்பிராய பேதமுண்டல்லவா? அராஜகக் காரர்களே ரௌலட் சட்டத்துக்குக் கீழ்ப்படியாம லிருப்பரென்று மிஸஸ் பெஸன்டு சொல்ல வில்லையா?

பதில்:—சட்டத்துக்குக் கீழ்ப்படிந்து நடந்தே ஸத்தியாக்கிரஹம் அனுஷ்டிக்கப் போவதாய் மிஸஸ் பெஸன்டு தெரிவித்தார். அப்பால் அதுகூடத் தாம் சொல்ல வில்லை யென்று தெரிவித்து விட்டார். அராஜகக் காரர்களே ரௌலட் சட்டத்திற்குக் கீழ்ப்படியா திருப்பர் என்றும் அந்த அம்மாள் சொல்லியதுண்டு.

கேள்வி:—ஸத்தியாக்கிரஹிகள் இப்படி யெல்லாம் செய்

தால் கவர்ண்மெண்டு நடப்பதே, அசாத்தியமாய்ப் போய் விடாதா ?

பதில்:—ஒரு நாளுமில்லை. கவர்ண்மென்டை நடவாமற் செய்வது ஸத்தியாக்கிரஹிகளின் நோக்கமல்ல. என்ன கஷ்டம் வந்தாலும் சகித்துக்கொண்டு அதன் மூலமாய் ஸத்தியாக்கிரஹிகள் அனுகூலமடையப் பார்ப்பார்கள். கவர்ண்மென்டார் அசட்டுத் தனமாய் புத்தியில்லாமல் காரியங்கள் செய்தால் அந்த கவர்ண்மெண்டு நடவாமலிருந்தால் கூட பாதகமில்லை.

கேள்வி:—பலாத்காரம் கூடாது என்று நீங்கள் சொல்லுவது வாஸ்தவந்தான். ஆனால் உண்மையில் பலாத்காரமான காரியங்கள் நடவாமலிருந்தனவா ?

பதில்:—வெகு காலமாய் பலாத்காரத்தில் நம்பிக்கை வைத்திருந்தவர்களுக்குத் திடீரென்று அப்புத்தி மறைந்து விட்டது. ஆமதாபாத்தில் கட்டுப்பாடாய்க் கலவரம் நடந்ததென்பதையும் நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் அஸாமிகளைக் குறிப்பிட்டுச் சொல்ல நான் தயாராயில்லை.

கேள்வி:—கட்டுப்பாடாய்க் கலவரம் நடந்ததென்பதற்கு ஆதாரங்களென்ன ?

பதில்:—தக்க ஆதாரங்கள் இல்லாமற் போகவில்லை. கலவரம் செய்யும்படி தூண்டினவர்களின் பெயர் முதலிய விவரங்கள் எனக்குத் தெரியும். அவர்களுடைய பேச்சைக் கேட்டுக் கலவரம் செய்தவர்களில் பலர் என் வீட்டுக்கு வந்து கத்திகளை என்னிடம் ஒப்படைப்பதாய்ச் சொல்லிப் போனார்கள். ஆனால் அவ்வாறு செய்ய அவர்களுக்குத் தைரியமில்லை. தாங்கள் செய்தது பிசகு என்றுகூட அவர்கள் என்னிடம் ஒப்புக்கொண்டனர். என்னிடத்தில் அவர்களுக்

கிருந்த அன்பின் மிகுதியினாலேயே அவர்கள் கலவரம் செய்ததாக எனக்குத் தெரிவித்தார்கள்.

கேள்வி:—சட்டத்திற்குக் கீழ்ப்படியாமை என்றதர்மத்தை நீங்கள் நிறுத்தும்படி நேர்ந்த காரணமென்ன ?

பதில்:-எல்லா ஜனங்களும் அந்த தர்மத்தை அனுஷ்டிக்கப் பக்குவ மடைந்திருக்கவில்லை யென்று கண்டு கொண்டேன். கவர்ண்மென்டார் தங்களுடைய ராணுவ முஸ்தீப்புகளை ஒருவிதமாய் முடித்துக்கொண்டபின் ஸத்தியாக்கிரஹ தர்மத்தின் ஒரு பகுதியாகிய சட்டத்துக்குக் கீழ்ப்படியாமை என்ற வேலையை ஆரம்பிக்கலாமென்று நான் தெரிவித்தது உண்மையே. ஆனால் ராஜப்பிரதிநிதியும் பம்பாய் கவர்னரும் என்னைக் கூப்பிட்டு இந்தியா பூராவும் துருப்புகளால் நிறைந்திருப்பதைக் காண எனக்கு விருப்பமாமென்று கேட்டார்கள். அதன்மேல் அந்நிகழ்ச்சியை நிறுத்திக்கொண்டேன்.

ஜஸ்டிஸ் ராங்கினுடைய கேள்விக்குப் பதில்.

கேள்வி:—ரௌலட் மசோதா எப்பொழுது சட்டமாயிற்று? ஸத்தியாக்கிரஹம் எப்பொழுது ஆரம்பித்தது ?

பதில்:—1919ஆ பிப்ரவரிமாதக் கோடியில் ஸத்தியாக்கிரஹம் ஆரம்பமாயிற்று. ரௌலட் மசோதா அப்பொழுது சட்டமாயிருக்கவில்லை.

கேள்வி:—சட்டமாகா திருக்கும்போதே அதனைக் கண்டிக்க நாடெங்கும் கிளர்ச்சி நடந்ததல்லவா ? வரி கொடுக்க மறுத்து விடுவதாகக்கூட ஓர் உத்தேசம் இருந்ததாமே ?

பதில்:—ஆம்.

**கேள்வி:**—மாஜிஸ்ட்ரேட்டுகளின் உத்தரவைக்கூட மீறி நடப்பதாகத்தானே ஸத்தியாக்கிரஹிகளுக்கு உத்தேசம்?

**பதில்:**—அதுவேண்டாம் என்பதுதான் என்னுடைய கக்ஷி. போலீஸ் உத்திரவுகளை மீறி நடக்கக்கூடாதென்று நான் கண்டிப்பாய்ச் சொல்லியிருந்தேன். நான் இவ்வாறு சொன்னதாக ருஜூப்பிக்கவும் என்னால் முடியும்.

**கேள்வி:**—தாங்கள் டில்லிக்குப் போனதின் உத்தேசம் கவர்ண்மெண்டை எதிர்த்து நிற்கத்தானே?

**பதில்:**—இல்லை; ஸ்வாமி சிரத்தானந்தர் என்னை அங்கு வரும்படி எழுதியிருந்தார். ஜனங்கள் அங்கு ஹத்து மீறி நடந்துவிடுவார்கள்போலிருந்தது. அதனைத் தடுக்கவே என்னை வரும்படி ஸ்வாமிஜீ கேட்டுக்கொண்டார். அதிகாரிகளுக்கு உதவியாயிருக்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே நான் டில்லிக்குப் புறப்பட்டேன். ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சியை வளர்ப்பதற்காகவல்ல.

**கேள்வி:**—ஏப்ரல் 14-ந் தேதி நீங்கள் பேசியபோது ஜனக் கூட்டத்தின் அசட்டுத்தனமான நடத்தையால் நீங்கள் மீண்டும் கைது செய்யப்பட டில்லிக்குப் போவதில்லையென்று அவர்களுக்குச் சொன்னதாகத் தெரிகிறது. வாஸ்தவத்தில் உங்களுடைய எண்ணம் அப்படித்தானா?

**பதில்:**—என்னுடைய மனதில் இருந்ததையே நான் சொன்னேன். ரௌலட் சட்டம் ஒழியும் வரையில் நான் அடிக்கடி கைதுசெய்யப்பட இஷ்டமுள்ளவனாயிருந்தேன். நானாகவே கஷ்டத்தைத் தேடிக் கொண்டேன்.

கேள்வி:—நீங்கள் அப்படிச் செய்தால் தேசமெங்கும் ஆத்திரமேற்பட்டு அதன்மூலமாய் ரௌலட் சட்டம் ஒழிந்துவிடுமென்று நினைத்தீர்களா ?

பதில்.—ஒருநாளுமில்லை. அவ்வுத்தேசமிருந்தால் நான் நேராக டில்லிக்குப்போயிருப்பேன். அமிருதசரஸில் அச்சமயம் இன்ன நடந்ததென்றுகூட எனக்குத் தெரியாது. ஆமதாபாத்திற்கு வரும்படி தந்திமேல் தந்தியாய் எனக்கு வந்து சேர்ந்தது.

கேள்வி:—இந்தியா பூராவும் உங்களுடைய சித்தாந்தத்தை அர்த்தபேதப் படுத்திக்கொண்டு, மொத்தத்தில் ஹத்துமீறி நடந்திருப்பதாகத்தெரிகிறது.

பதில்:—எனக்கு அப்படித் தோன்றவில்லை.

கேள்வி:—என்னோடு கோபித்துக் கொள்ளாமல் பதில் சொல்ல வேண்டும். சட்ட திட்டங்களுக்கடங்கி நடக்க வேண்டுமென்று ஜனங்களுக்கிருந்த ஓர் உணர்ச்சியைக் கெடுக்க நீங்கள் ஏதேனும் செய்த துண்டா ?

பதில்:—தற்கால ஏற்பாடாய் சிற்சிலருடைய மனதில் அம் மாதிரியான எண்ணம் உதிக்கும் வண்ணம் நான் காரியங்கள் செய்துதானிருக்கிறேன். அக்குற்றத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

கேள்வி:—பஞ்சாபைப் போன்ற இந்தியாவின் சிற்சில பாகங்களில் உங்களுடைய சித்தாந்தத்துக்குச் சரிவா அர்த்தங்கொள்ளத் தெரியாத ஜனங்கள் அதிகமா யிருக்கிறார்களல்லவா ?

பதில்:—அப்படியல்ல. அம்மாதிரி சிலர் இருந்திருக்கலாம். ஸத்தியாக்கிரஹத்தை வெகு திறமையாய் அனுஷ்டித்து நடக்கக்கூடிய ஜனங்கள் அங்கு ஏராளமாய் இருக்கிறார்களென்பதே என்னுடைய அபிப்பிராயம்

பஞ்சாப் கலவரங்களைக்கண்டு அங்குள்ள ஜனங்களுக்கு உண்மையில் வருத்தமாகத் தானிருக்கிறது. ஸத்தியாக்கிரஹிகள் இவ்வாறு வருத்தப்படுவது ஸகஜம்.

பண்டித ஜகத் நாராயணனுடைய குறுக்கு விசாரணை.

**கேள்வி**:—அராஜகத்தையும் குழப்பத்தையும் அடக்க கவர்ண்மெண்டார் நடவடிக்கை எடுத்துக்கொள்வதை ஆட்சேபிக்கின்றீர்களா ?

பதில்:—இல்லை. ஆனால் அத்தகைய குற்றங்களைத் தண்டிக்க சாதாரணச் சட்டங்களே போதுமானவை.

**கேள்வி**:—ரௌலட் சட்டத்தை நீங்கள் எதற்காகக் கண்டிக்க வேண்டும்?

பதில்:—அச்சட்டம் இந்திய மக்களையே அவமானப் படுத்துவதாகும். ஜனங்களின் சுதந்தரத்தைப் பாதுகாக்க அச்சட்டத்தில் பந்தோபஸ்துக்கள் இருப்பதாக உத்தியோகஸ்தர்களின் வேலையில் எனக்கு நம்பிக்கையில்லை.

**கேள்வி**:—ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சி கவர்ண்மெண்டுக்குப் பெருத்த இடையூறாயிருக்கிறதாகச் சொல்லப்படுகிறதே, உங்களுக்கு அம்மாதிரி அபிப்பிராயம் இல்லையா ?

பதில்:—கவர்ண்மெண்டுக்கு இடையூறு இழைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சியை நான் ஆரம்பிக்கவில்லை. சாதாரண ராஜீயக் கிளர்ச்சியின் நோக்கம் ஒரு சமயம் அதுவாயிருக்கலாம். ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சியின் பலனாகக் கவர்ண்மெண்டுக்கு உபத்திரவமுண்டானால் அதையும் ஸத்தியாக்கிரஹிகள் சகித்திருக்க வேண்டியதுதான்.

கேள்வி:—அதிகம் பேரைச் சேர்த்தாலல்லது எந்த நிகழ்ச்சியும் காரியத்தில் பலிக்காதல்லவா ?

பதில்:—அப்படியல்ல ; எத்தனை பேர் இருந்தாலும் பாதகமில்லை. பெரியவனுயிருந்தாலும் சரி, சிறியவனுயிருந்தாலும் சரி, எத்தனைபேர் இருந்தாலும் சரி ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சிக்கு அது அனுவசியம். ஸத்தியத்துக்காகக் கஷ்டப்படத் தயாராயிருப்போர் சொற்பத் தொகையினராயிருந்தால்கூட போதும். ராஜீயக்கிளர்ச்சியில் அப்படியல்ல.

கேள்வி:—தனிப்பட்ட நபர்களில் இரண்டொருவர் ஸத்தியாக்கிரஹதகில் இறங்குவதைக்கண்டு ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள் பணிந்துபோய் விடுவார்களென்று நினைக்கிறீர்கள் ?

பதில்:—தாராளமாய் நடக்கும். நடந்து மிருக்கிறது. கேசவ சந்திரஸேனர் காலத்தில் லார்டு பெண்டிங்க் நடந்துகொண்ட விதத்தைச் சற்று கவனித்துப் பார்த்தால் இதன் உண்மை விளங்கும்.

கேள்வி:—படிப்பு வாசனையற்ற சாதாரண யோக்கியதையுள்ளவர்களையே நான் திருஷ்டாந்தமாகச் சொல்லுகிறேன்.

பதில்:—படிப்பு வாசனையற்றவர்களுக்கு ஸத்தியாக்கிரஹத்தைக் கற்பிப்பது வெகுசுலபமான காரியமென்பதே என்னுடைய சொந்த அனுபோகம்.

கேள்வி:—இந்தப் பொறுப்பற்ற அன்னியநாட்டு உத்தியோகஸ்தர்களை எதிர்க்க உங்களுக்கு வேறு வழியில்லாமற்தானே ஸத்தியாக்கிரஹத்தை மேற்கொண்டீர்கள் ?

பதில்:—நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. நமக்கு வரப்போவதாகச் சொல்லும் ஜவாப்தாரியான ஆட்சியின்

போது, இந்திய மந்திரிகள் செய்யக்கூடிய காரியங்களை ஸத்தியாக்கிரஹத்தாலேதான் நிச்சயம் எதிர்க்க வேண்டும். ஆனால் நமது பழக்கவழக்கங்களை யறியாத அன்னிய ஜாதி உத்தியோகஸ்தர்களிடம் அதே முறையைத்தான் அனுஷ்டிக்கவேண்டுமென்று நான் வரையறுத்துச் சொல்ல முடியாது.

**கேள்வி:**—சுயஆட்சி கிடைத்தபின் கூடவா இந்தியாவில் ஸத்தியாக்கிரஹம் நடக்குமென்று சொல்லுகிறீர்கள்?

பதில்:—சுய ஆட்சி கிடைத்தால்கூட மந்திரிகளை உத்தியோகத்திலிருந்து விலக்க நமக்கு முடியாமற் போகலாம். வெகுஜன வெறுப்புக்கு ஆளான மந்திரிகள் இங்கிலாந்தில் உத்தியோகம் வகிக்கவில்லையா? அது போல் இங்கும் நடக்கலாம். ஆகையால் சுயஆட்சி கிடைத்தபின்கூட நமக்கு ஸத்தியாக்ரஹம் வேண்டியிருக்கும்.

**கேள்வி:**—ஸத்தியாக்கிரஹ நிகழ்ச்சியின் பலனாக அமைதியின்மை ஏற்படாதென்பதுதானே உங்களுடைய நினைப்பு?

பதில்:—ஒருக்காலும் இல்லை. என்னையும் அனுஸூயா பாயையும் இந்த நிமிஷத்தில் கைதுசெய்தால்கூட அமைதியின்மை ஆரம்பித்துவிடும். ஆனால் அதன் பொருட்டு யாரும் பலாத்காரத்தில் இறங்கமாட்டார்கள். மற்றவர்கள் கஷ்டப்படுவதைப் பார்த்தால் ஸத்தியாக்கிரஹிகளுக்குச் சகிக்காது. ஒருவர் ஜெயிலுக்குப்போனால் மற்றவர்களும் பின் தொடருவார்கள். இப்படிப்பட்ட நிலைமை ஏற்படவேண்டுமென்பது தான் எனது விருப்பம்.

**கேள்வி:**—பிடோனி என்றவிடத்தில் நீங்கள் சொல்லிய புத்திமதியை ஜனங்கள் கேட்கவில்லையாமே?

பதில்:—அது சுத்தப் பொய். எனது ஆலோசனைப்படி பலர் உண்மையில் நடந்துகொண்டார்கள். என் பேச்சைக் கேட்டவர்கள் ஒழுங்காகவே நடந்து கொண்டனர்.

மிஸ்டர் கெம்பு அடுத்தாற்போல் கேட்ட கேள்விகளுக்கு மகாத்மா காந்தி பதில் சொன்னதாவது:— ஆமதாபாத்தில் ராணுவச்சட்டத்தை அமுல் நடத்தயிருக்கவே தேவையில்லை. சில நிரபராதிகள் அதன்பலனாகக் கொல்லப்பட்டுப்போனார்கள். ஆனால் மொத்தத்தில் ஆமதாபாத் கலெக்டர் வெகு கண்ணியமாயும் தைரியமாயும் பெரிய மனதுடனும் நடந்துகொண்டதை நான் அவசியம் குறிப்பிடவேண்டும். இதற்காக அவர்கள் செய்த பிசகுகளை மறந்துவிட முடியாது.

மிஸ்டர் தேசாய்:—ஏப்ரல் 14-ந் தேதி நடந்த பொதுக் கூட்டத்தில் சிறிதும் சந்தடியில்லை என்பது உண்மை தானா?

மகாத்மா காந்தி:—ஆம், அங்கு வந்திருந்த மிஸ்டர் ஜில்லன் பியைக்கூட வெகு மரியாதையாய் நடத்தினார்கள்.

மிஸ்டர் தேசாய்:—உங்களுடைய சீடர்களின் தொகையை அதிகரிப்பதற்காகவே நீங்கள் பலாத்காரத்தை வெறுப்பதுபோல் பேசியதாக மிஸ்டர் கைடர் சொல்லுகிறாரே?

மகாத்மா காந்தி:—அப்போது அவர் சொல்லியதானது என் மனதைப் புண்படுத்திவிட்டது. ஆனால் அவர் வேண்டுமென்று அப்படிச் சொல்லியிருக்கமாட்டார்.



I

## ஹண்ட்டர் கமிட்டிமுன்பாக ஜேனரல் டயரின் (General Dyer) வாக்குமூலம்.

நவம்பர் மாதம் 19-ந் தேதி.

மே மாதம் 10-11-ந் தேதிகளில் ஜலந்தூரிலிருந்து 100-ஐரோப்பிய சிப்பாய்களும் 200-இந்தியச் சிப்பாய்களும் அமிர்தசரஸிற்கு அனுப்பப்பட்டதாகவும் தானும் 11-ந் தேதி ஒரு தந்திகிடைக்கவும் மோட்டார் வண்டியில் சென்றதாகவும் ஜெனரல் டயர் சாக்ஷி சொன்னார்.

வினா—நீர் ஜலியன்வாலாபாக்கிற்கு எத்தனை மணிக்குப் போய்ச்சேர்ந்தீரென்று உம்மால் சொல்லக்கூடுமா?

விடை—சுமார் மாலை 5 அல்லது 5-15 மணியிருக்கும். என்னால் சொல்ல முடியாது. நான் என்ன மணியென்று கவனிக்கவில்லை.

வினா—ஜலியன்வாலாவிற்கு வந்து சேர்ந்ததும் நீர் என்ன செய்தீர்?

விடை—நான் சிப்பாய்களை இடதுபக்கமும் வலதுபக்கமுமாக பரவச் செய்தேன். பஞ்சாபிகளை வலப்பக்கத்திலும் கூர்க்கர்களை இடப்பக்கத்திலும் இருக்கும்படி செய்தேன்.

வினா—ஜலியன்வாலா பாக்கிற்கு நீர் இடுக்கமான வழியாகத்தானே சென்றீர்?

விடை—ஆம்.

வினா—உம்முடைய மோட்டார் வண்டிகளை வெளியில் தானே விட்டீர்?

விடை—ஆம்.

வினா—குக்ரிகளை (Kukris) தரித்துக்கொண்டிருந்து கூர்க்கர்களை உம்முடன் அழைத்துச்சென்றீரா அல்லது அவர்களை வெளியில் விட்டுச்சென்றீரா?

விடை—அவர்களும் பாக்கிற்கு (தோட்டம்) வந்தார்கள்.
வினா—அப்படியானால் உம்முடன் 40 கூர்க்கர்களும் துப்பாக்கிளுடன் கூடின சிப்பாய்கள், ஒரு வரிசைக்கு 25-பேர்கள் விதம், இரண்டு வரிசைகளும் இருந்தார்களா ?
விடை—ஆம்.
வினா—சமகோணமான அந்த விடத்திற்கு வடபாகத்திலுள்ள மேட்டின்மேல் வலப்பக்கத்தில் 25 சிப்பாய்களும் இடப்பக்கத்தில் 24 சிப்பாய்களும் இருக்கும்படி ஏற்பாடு செய்ததாகச் சொன்னீரல்லவா ?
விடை—ஆம்.
வினா—அது மிகவும் சௌகர்யமான விடமல்லவா ?
விடை—ஆம்; மிகவும் சௌகர்யமான விடம்.
வினா—அந்தபாக்கிற்கு போக்குவரவிற்கு அதிக வழிகளில்லையே ?
விடை—இல்லை. அகலமாக ஒரு வழியும் இடுக்கமான வழிகள் இரண்டு மூன்றுமிருக்கலாம். நான் பார்த்ததேயில்லை.
வினா—நீர் பாக்கிற்குச் சென்றதும் என்ன செய்தீர் ?
விடை—நான் சுட ஆரம்பித்தேன்.
வினா—உடனேயா ?
விடை—உடனேதான். நான் அந்த விஷயத்தைப்பற்றி யோசித்தேன். என்னுடைய கடமை என்னவென்று தீர்மானத்திற்கு வர எனக்கு 30 ஸெகண்டுகளுக்கு மேல் பிடிக்கவில்லை.
வினா—ஜனக்கூட்டத்தார் அப்பொழுது என்ன செய்து கொண்டிருந்தார்கள்.
விடை—நல்லது. அவர்கள் ஒரு மீட்டிங்கு நடத்திக் கொண்டிருந்தனர். கூட்டத்தின்நடுவில் ஒரு உயர்ந்த

இடத்தில் ஒருவர் நின்றுக் கொண்டிருந்தார். அவருடைய கைகள் அங்கு மிங்கும் ஆடிக்கொண்டிருந்தன. அவர் உண்மையாகவே பிரசங்கம் செய்து கொண்டிருந்தார்.

வினு—நீரும் உம்முடைய சிப்பாய்களும் நின்றுகொண்டிருந்த இடத்திற்கும் அவரிருந்த இடத்திற்கும் எவ்வளவு தூரமிருக்கும்?

விடை—நான் அங்கேபோய்ச் சேர்ந்தபொழுது 8 அல்லது 9 கஜதூரத்திற்கப்பாலிருந்தார். அவர் பிறகு வலதுபக்கமாக ஓடினுர். இன்னும் அனேக மனிதர்களும் ஓடி சுவர்களின்மேலேறினர்.

வினு—நீர் உம்முடைய துருப்புகளுடன் நின்றுகொண்டிருந்த இடத்திற்கு 100-கஜ தூரத்திற்கப்பால் ஒரு வாம்பு இருப்பதாக அறிந்தேன். அது சரிதானே?

விடை—ஆம்.

வினு—பிரசங்கம் செய்துகொண்டிருந்தவர் அந்தவிடத்திலிருந்து எவ்வளவு தூரத்திற்கப்பாலிருந்தார்?

விடை—எனக்குத் தெரிந்தவரையில் அவர் சதுரத்தின் நடுவில்தானிருந்தார். என்னுடைய துருப்புகளிருந்த இடத்திலிருநது 50 அல்லது 60 கஜ தூரமிருக்கலாம்.

வினு—பாக்கிற்குத் தென்புறத்தில் பெரிய கூட்டமிருந்ததா?

விடை—ஆம். பெரும்பாலோரிருந்தனர்.

வினு—உமக்குத் தெரிந்தவரையில் அந்த மனிதர் பிரசங்கம் செய்துகொண்டிருந்ததைத் தவிர்த்து வேறு ஏதாவது நடந்ததா?

விடை—இல்லை. அதைத் தவிர வேறொன்றும் எனக்குப் புலப்படவில்லை.

வினு—அந்த கூட்டத்தில் எவ்வளவுபேர்களிருந்தார்கள்?

விடை—அப்பொழுது சுமார் 5000-பேர்களிருந்தார்களென்று நான் நினைத்தேன். இன்னும் அதிகமாகவேயிருந்ததாகப் பின்னால் கேள்வியுற்றேன்.

வி௲—சுமார் 5000-பேர்கள் கூடி கவனத்துடன் கேட்டுக்கொண்டிருந்ததாக வைத்துக்கொண்டாலும், அந்தக் கூட்டத்தில் பெரும்பாலோருக்கு உம்முடைய விளம்பரத்தைப்பற்றித் தெரியாமலிருக்கலாம் என்ற சந்தேகம் உமக்கேற்படவில்லையா ?

விடை—நன்றாகவே விளம்பரம் செய்யப்பட்டது. அச்சமயம் அவ்விடங்களில் சமாசாரம் வெகு சீக்கிரத்தில் பரவியது. அப்படியிருந்தும், அவ்விளம்பரத்தையறியாதோர் பலருமிருந்திருக்கலாம்.

வி௲—அறிக்கையை உணராத ஜனங்கள் கூட்டத்திலிருப்பதால் அவர்களுக்கு ஆபத்து நேரிடுமென்று நினைத்து அவர்களைக் கலைந்துபோகும்படி சுடுவதற்கு முன் நீர் எச்சரிக்கை செய்திருக்கக்கூடாதா ?

விடை—இல்லை. நான் அச்சமயம் கேட்கவில்லை. என்னுடைய உத்திரவுகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவில்லையென்பதையும், இராணுவச்சட்டம் ஏற்படும் ஜனங்கள் அடங்கவில்லையென்பதையுமே நான் உணர்ந்தேன். உடனே சுடவேண்டியது என் கடமையாகக் கொண்டேன்.

வி௲—நீங்கள் கூட்டத்தைக் கலைப்பதற்குமுன் கூட்டத்தார் எவ்வித பிரயத்தனமும் எடுத்துக்கொள்ளவில்லையா ?

விடை—இல்லை ஐயா. அவர்களிற் சிலர் ஓடத்தலைவக்கினார்கள்.

வி௲—அவர்கள் ஓட ஆரம்பித்தார்களா ?

விடை—ஆம். நான் சுட ஆரம்பித்தபோது நடுவிலிருந்த

பெருங்கூட்டத்தார் வலதுபக்கமாக ஓட ஆரம்பித்தார்கள்.

விஞ—இராணுவச்சட்டம் அமுலுக்கு வரவில்லை. நீர் மிகவும் கொடுமையான வழியைக் கைக்கொள்ளுமுன், நகரின் அமைதிக்குப் பொறுப்பாயுள்ள டிபுடி கமிஷணருடன் கலந்து யோஜிக்க வேண்டியதென்று உமக்குப் புலப்படவில்லையா?

விடை—அச்சமயம் கலந்துயோஜிக்க ஒரு டிபுடி கமிஷணருமில்லை. வேறு ஒருவரையும் யோசனை கேட்பது சரியென்று நான் நினைக்கவில்லை. நான் என்ன செய்யவேண்டுமென்று உடனே தீர்மானித்தாக வேண்டியிருந்தது. ராணுவத்தோரணையின்படி நான் உடனே சுட்டே தீரவேண்டுமென்றும், அப்படிச் செய்யாவிட்டால் நான் என் கடமையைச் செய்யாதவனாவேனென்றுணர்ந்தேன்.

விஞ—நீர் ராம்பாக்கை விட்டுக்கிளம்பியபோது சுட வேண்டி வருமென்று உமக்குத் தோன்றியதா?

விடை—ஆம். எம்மாதிரியான நிலைமையை நான் எதிர்க்க வேண்டிவரும் என்று உணர்ந்தேன்.

விஞ—அப்படிச்செய்ய ஆரம்பிக்குமுன் ஸிவில் அதிகாரிகளைப் பக்கத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று உமக்குப் புலப்படவில்லையா?

விடை—என்னுடன் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தரிருந்தார்.

விஞ—அவர்யார்?

விடை—ரெஹில் (Mr. Rehill) ப்ளோமர் (Mr. Plomer) என்ற இருவரும் என்னுடனிருந்தார்கள்.

விஞ—நான் கேள்விப்படுகிறபிரகாரம் ரெஹிலும் ப்ளோமரும் நீர் சுட ஆரம்பித்தபின்புதானே வந்தார்கள்?

விடை—ரெஹில் என்பவர் சுட ஆரம்பிக்கும் பொழுதே அங்கிருந்தார்.

வினு—முழுவதும் அவரிருந்தாரா ?

விடை—எனக்குத் தெரியாது. நான் என் துருப்புகளை கவனித்துக் கொண்டிருந்தேன். ஆனால் நான் அவரைப் பார்த்தேன். சுட்டான பின்பு நான் அதிக நேரம் அங்கிருக்கவில்லை. கடைசியில் அவர் அங்கிருந் தார் என்பது நிச்சயம்.

வினு—சுடுவதற்கு முன்பு ரெஹிலை அவருடைய அபிப் பிராயத்தில் சுடவேண்டியது அவசியந்தானுவென்று கேட்டீரா ?

விடை—இல்லை ஐயா. என் மோட்டாரில் வரும்பொழுது என் உத்திரவுகளுக்குக் கீழ்ப்பட்டு நடக்காவிடில் உடனே சுட வேண்டியதென்றே தீர்மானத்துட னிருந்தேன்.

வினு—சுடுவதினுல் கூட்டத்தைக் கலைக்க வேண்டுமென் பதுதானே உமது எண்ணம்?

விடை—இல்லை ஐயா. அவர்கள் கலைந்து போகும் வரை யில் சுட நான் போனேன்.

வினு—நீர் சுட ஆரம்பித்த உடன் கூட்டம் கலைய எத்தனப் பட்டதா ?

விடை—ஆம், உடனே.

வினு—நீர் சுட்டுக்கொண்டே யிருந்தீரா ?

விடை—ஆம்.

வினு—கூட்டம் கலைந்து செல்ல எத்தனிப்பதைப் பார்த் தும் நீர் ஏன் சுடுவதை நிறுத்தவில்லை ?

விடை—அவர்கள் கலைந்து செல்லும் வரையில் சுட்டுக் கொண்டே யிருத்தல் என் கடமையென்று நினைத் தேன். நான் கொஞ்சம் சுட்டால் அதனுல் தகுந்த

பயன் ஏற்படாது. நான் கொஞ்சம் சுடுவதானால் சுட்டதே தப்பிதமாக வேண்டும்.

வினா—எவ்வளவு நேரம் சுட்டீர்கள்?

விடை—10 நிமிஷ நேரமிருக்கலாம். கொஞ்சம் குறைச்சலாகவு மிருந்திருக்கலாம்.

வினா—உமக்குத் தெரிந்த வரையில் கூட்டத்தார்கள் கைகளில் கழிகளை வைத்திருந்தனரா?

விடை—எல்லாரும் வைத்திருந்தார்கள் என்று என்னால் சொல்லமுடியாது. அனேகர்வைத்திருந்தனர். ஆனால் அவர்கள் கழிகளை எடுத்துக் கொள்வார்களென்பது எனக்குத் தெரிந்தது.

வினா—உம்முடைய இராணுவ அனுபவத்தில் இதற்கு முன் கூட்டத்தைக் கலைப்பதில் இம்மாதிரியான வழிகளை யனுசரித்திருக்கிறீரா?

விடை—ஒரு பொழுதுமில்லை. இது ஒரு தனிமையான கேசு.

வினா—நீர் ஜனங்களைக் கலைந்து செல்லும்படி உத்திரவிட்டிருந்தால் சுடவேண்டிய அவசிய மேற்படாமலும் கொஞ்சநேரம் சுட்டுக்கொண்டே யிருந்திரா விட்டாலும் அவர்கள் அப்படிச் செய்திருக்க மாட்டார்கள் என்று நினைக்கக் காரணமுண்டா?

விடை—ஆம். சுடாமலும் ஜனங்கள் கலைந்து செல்லும்படி செய்திருக்கக் கூடுமென்றே நான் நினைக்கிறேன்.

வினா—ஆனால் ஏன் நீர் அவ்வழிகளை யனுஷ்டிக்கவில்லை?

விடை—அவர்களெல்லாரும் திரும்பிவந்து என்னைக்கண்டு நகைத்திருப்பார்கள். நான் ஒரு முட்டாள் என்ற பட்டத்திற்காளாகி யிருக்க வேண்டும்.

வினா—உம்முடைய அபிப்பிராயத்தில் அப்பொழுது இருந்த நிலைமை மிகவும் அபாயகரமானதுதானே?

விடை—ஆம். உண்மையில் ரொம்பவும் அபாயகரமான தாக விருந்தது.

வினு—அபாயகரமான கிளர்ச்சி ஏற்பட்டிருப்பதாக உமக்கு வேறிடத்திலிருந்து சமாசாரம் கிடைத்ததா?

விடை—ஆம்.

வினு—அப்படிக் கிடைத்த சமாசாரங்களினின்றும் அந்த ஜில்லாவின் பொது நிலைமையைக் குறித்து நீர் என்ன முடிவிற்கு வந்தீர் ?

விடை—அவர்கள் என்னையும் என் துருப்புகளையும் திடீ ரென்று எதிர்க்க முயல்வதாக நான் நினைத்தேன். இஃதெல்லாவற்றிலிருந்தும் அமிர்தசாஸில் மாத்திர மென்றில்லாமல் எங்குமே ராணுவ சம்பந்தமான கிளற்சி யேற்பட்டதாக நான் உணர்ந்தேன்.

வினு—நீர் எடுத்துக்கொண்ட வழிகள், மேற் கூறியபடி அமிர்தசாஸில் மாத்திரமல்லாமல் ஜில்லா முழுவதும் ஏற்பட்டது என்ற ஆதாரவைக் கொண்டுதானே ?

விடை—ஆம் ஐயா. அப்படியேதான். நான் அந்தக்கூட்டத் தைக் கலகக்காரர்களென்றும் என்னுடைய துருப்பு களை எதிர்த்து ஒவ்வொரு இடத்திலிருந்தும் துரத்த முயலுவதாகவும் நான் பாவித்தேன். ஆதலால் அவர்களைச் சுடவேண்டியது என் கடமையென்றும் நன்றாகவே சுடவேண்டுமென்றும் நினைத்தேன்.

வினு—நீர் சுடுவதற்கென்று சித்தமான பொழுது வேறு காரணங்கள் ஏதாகினும் உமது மனதிலிருந்தனவா ?

விடை—இல்லை ஐயா. அது என்னுடைய கடமையென்றும் ஒரு கொடூரமான கடமையென்றும் நான் நினைத் தேன்.

வினு—சுட்டான பின்பு நீர் உம்முடைய துருப்புகளுடன் ராம் பாக்கிற்குத் திரும்பி விட்டீரல்லவா ?

விடை—ஆம். ஐயா.

வி௵—குண்டுகளை எண்ணிப்பார்க்கவும் 1650 ரவைகள் சுடப்பட்டதென்று உமக்குத் தெரிந்ததல்லவா ?

விடை—முற்றிலும் சரி.

வி௵—இறந்து போனவர்களைப்பற்றி அறிந்தீரா ?

விடை—நான் சுட்டதினின்றும் சுமார் 300 பேர்களிருக்கலாமென்று தீர்மானித்தேன். 300 பேர்களுக்கு மேல் இறந்துபோயிருக்க மாட்டார்களென்றே நினைத்தேன்.

வி௵—இறந்து போனவர்களின் தொகை 400 அல்லது 500 என்பது உமக்குத் தெரியாதோ?

விடை—நான் பத்திரிகைகளிற் பார்த்தேன்.

வி௵—உமக்கு யாராகிலும் சொன்னாலும் சொல்லாவிட்டாலும்சரி. இறந்து போனவர்கள் 400 அல்லது 500 பேர்கள் என்பது இப்பொழுது தெரியுமல்லவா?

விடை—நான் பத்திரிகைகளிற் பார்த்தேன். நான் சுட்ட ரவைகளை ஐந்தால் வகுப்பதைக் காட்டிலும் ஆறால் வகுத்தால் நான் சொல்லியதற்குச் சுமாராக சரியாகவிருக்கும்.

வி௵—ஒரே தாரையாகச் சுடப்பட்டதோ அல்லது தனித்தனியாகச் சுடப்பட்டதோ ?

விடை—ஒரே தாரையாகச் சுடப்படுவதே கிடையாது.

வி௵—கூட்டம் மிகவும் அதிகமாயிருந்ததல்லவா ?

விடை—மிகவும் அதிகமாகவேயிருந்தது.

வி௵—கூட்டத்தை நோக்கி சுட்டால் குறிதவறுதல்லவா?

விடை—தவறுது. ஓடும்பொழுது சிலர்மேல் படவில்லை. சிலர்மேல் பட்டது. அந்த நாற்கோணத்தின் நடுவில் கூட்டம் மிகுந்திருந்தது. அந்த பக்கம் நோக்கிச் சுட்டவன் தவறமாட்டான்.

வினா—ஆதலால் நீர் சுட்ட ரவைகளிலிருந்து 400 அல்லது 500 பேர்கள் இறந்துபோயிருப்பது சகஜந் தானே ?

விடை—முற்றிலும் சகஜந்தான்.

வினா—காயம்பட்டவர்களை அங்கு விட்டகற்ற நீர் ஏதேனும் உதவி புரிந்தீரா ?

விடை—இல்லை ஐயா. அவ்விடத்திலில்லை. என்னைப் பின்பு கேட்டிருந்தால் நான் உதவி புரிந்திருப்பேன். அது ஒரு வைத்தியர் சம்பந்தமான விஷயம். அப்பொழுது உதவிபுரிவது என் வேலையில்லை.

வினா—மறுநாள் "இறந்துபோனவர்களைக் கூடிய சீக்கிரத்தில் கொளுத்தவோ அல்லது புதைக்கவோ வேண்டும். ஒருவிதமான கூட்டமும் ஆர்ப்பாடங்களும் இருக்கக்கூடாது," என்று நீர் உத்திரவிட்டீரா ?

விடை—ஆம் ஐயா.

வினா—சுட்டதன் பிறகு, 14-ந் தேதி நகரின் நிலைமையென்ன ?

விடை—என்னுடைய உத்திரவுகளை ஜனங்கள் கீழ்ப்படிந்தனரா என்று அறிய நான் சுற்றிப்பார்த்தேன். எல்லாம் அமைதியாகவே யிருந்தது.

வினா—ராணுவச்சட்டம் 15-ந் தேதி தானே அமுலுக்கு வந்தது ?

விடை—அமிர்தசரஸில் 15-ந் தேதியன்று தான் ராணுவச் சட்டம் அமுலுக்கு வந்தது என்று நினைக்கிறேன் சற்றுப் பின்னுலுமிருக்கலாம். எனக்கு ஞாபகமில்லை.

வினா—உம்முடைய ரிபோர்ட்டில் நகரில் அமைதி ஏற்பட்டதாக எழுதியிருக்கிறீரல்லவா ?

விடை—ஆம் ஐயா. ஒருவிதமான குற்றமும் நிகழவில்லை.

வினா—அப்படியானல் ராணுவச் சட்டத்தை 15-ந் தேதி

அமுலுக்குக் கொண்டுவர வேண்டிய அவசிய மென்ன?

விடை—அவசியமிருந்தது. அச்சட்டத்தை விளம்பரப் படுத்து முன்பே அதன் வழிகள் அனுஷ்டிக்கப் பட்டன. கொஞ்சம் அமைதி ஏற்படவும் நிபந்தனை கள் சற்று குறைக்கப்பட்டன.

வி௵—ராணுவச்சட்டம் நீர் வந்தது முதலே தானுக ஏற்பட்டு விட்டதோ?

விடை—ஆம். அம்மாதிரியே தானிருந்தது.

வி௵—வேறொரு மீட்டிங்கு நடக்கப் போவதாக 14-ந் தேதி காலையில் உமக்குச் சமாசாரம் வந்ததா?

விடை—ஆம் சுவர்ணுலயத்தில்.

வி௵—அதைப்பற்றி நீர் என்ன நினைத்தீர்?

விடை—நான் மறுபடியும் சுடவேண்டி வாலாமென்று நினைத்தேன். நான் அப்படிச் செய்திருந்தால் சீக் கர்க ளனைவரும் சுவர்ணுலயத்தை நான் அழித்து விட்டதாகப் புகார் செய்திருப்பார்கள். நான் சுடா திருக்கும்போதே சுவர்ணுலயத்தை அழித்துவிட்ட தாக வதந்தி ஏற்பட்டது. ஆகையால் சுட்டிருந்தால் அதுவே ருசுவாக ஏற்படும்.

வி௵—சுவர்ணுலயத்தை இடித்துத் தள்ளியதாக ஏற் பட்ட வதந்தி பொய்தானே?

விடை—பொய்தான். அதைத் தொடக்கூட இல்லை. ஆல யத்தின் மானேஜரையும் இன்னொரு பெரிய மனித ரையும் (அரூர்சிங், சுந்தர்சிங்) தருவித்து அவ்விடத் தில் மீட்டிங்கை நடக்கவிடாமலிருக்கும்படி சொன் னேன். அதற்காக ஏதாவது உதவிவேண்டி யிருந் தால் என்னை யழைக்கும்படி சொன்னேன்.

வி௲—நீர் அந்தவிடத்தினின்றும் சென்றபொழுது யார் அதிகாரத்தைக் கைக்கொண்டார்?

விடை—ஜலந்தூரிலிருந்த கர்னல் ஹாரிஸ் என்பவரிடம் ஒப்புவித்தேன்.

வி௲—ஜெனரல் ஸ்டாபிலிருந்து (General Staff) வந்த தந்தியைப்பற்றி நீர் சொன்ன கடிதம் உம்மிடமிருக்கிறதா?

விடை — அது அட்ஜுடண்டு ஜெனரலிடத்திலாவது (Adjutant General) டிவிஷனல் கமாண்டரிடத்திலாவது இருக்கவேண்டுமென்று நினைக்கிறேன். என்னிடத்திலில்லை.

வி௲—அந்தக் கடிதம் சவுக்கடி அடிப்பதைப்பற்றித்தானே? அனேகம்பேர்கள் சவுக்காலடிக்கப்பட்டார்களல்லவா?

விடை—ஆம். 25-பேர்கள் அடிக்கப்பட்டார்களென்று நான் நினைக்கிறேன்.

வி௲—ராணுவத்தில் சவுக்கடி அடிப்பது ஒருவகையான தண்டனையல்லவா?

விடை— ஆம். முக்கியமாய் ராணுவச்சட்ட மேற்படும் காலத்தில் அனுஷ்டிப்பது வழக்கம்.

வி௲—பகிரங்கமாகச் சவுக்கடி அடிப்பதற்கும் தனியாக அடிப்பதற்கும் பேதமென்ன?

விடை—சிப்பாய்களில் யாரையாவது அடிப்பதென்றால், மற்றவர்களை வரிசையாக நிற்கவைத்துப் பகிரங்கமாய் அடிப்பது வழக்கம். அப்படிச் செய்வதால் குற்றஞ் செய்த அல்லது செய்யநினைக்கும் மற்றவர்களுடைய மனதில் அது நன்றாகப்படும்.

வி௲—ராணுவத்தில் ஒழுங்கு ஏற்படுத்துவதற்குத்தானே?

விடை—ஆமாம்.

வி‌ஞ—ராணுவச்சட்டத்தில் சாதாரணமனிதனை அடிப்பதற்கும் அதேவழி யனுசரிக்கவேண்டுமென்று நீர் நினைக்கிறீர்.

விடை—ஆம். நான் இரண்டையும் ஒன்றாகவே பாவித்தேன். ஏனெனில் ராணுவச்சட்டத்தைப்பற்றி அது சரியான நோக்கத்தை விளக்கும்.

வி‌ஞ—பழய ஸிவில் சட்டங்களின்படி பகிரங்கமாக அடிப்பதுதான் வழக்கம். ஆனால் பலவருஷங்களாகப் பகிரங்கமாய் ஏற்படவில்லை.

விடை—அப்படியா. நான் தெரிந்துகொண்டேன்.

வி‌ஞ—ஜனங்கள் பகிரங்கமாய் அடிக்கப்பட்டனரா?

விடை—ஆமாம். ஆனால் தெருவின் இரண்டுபக்கங்களும் அடைக்கப்பட்டதால் அதுபோக்கு வரவு ரஸ்தாவாக கருதப்படக்கூடாது.

வி‌ஞ—ஆனால் அவ்வழியே சென்றமனிதர்கள் பார்த்திருக்கக்கூடுமல்லவா?

விடை—அங்கேபோக விரும்பியவர்கள் பார்த்திருக்கக்கூடும்.

வி‌ஞ—அங்கே வசித்தவர்கள் பார்த்திருக்கலா மல்லவா?

விடை—ஆம்.

வி‌ஞ—சவுக்கடி அடிப்பது தனிமையான இடத்தில் நடந்திருந்தால் நலமாயிருந்திருக்குமல்லவா?

விடை—நான் அப்படிச் சொல்லமாட்டேன்.

வி‌ஞ—இருந்தாலும், நகரத்தார்களிற் பலர் கலகத்தில் சம்பந்தப்படாது சட்டப்படி இட்ட உத்திரவுகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கத் தயாராக இருந்தார்களென்று நீர் ஒப்புக்கொள்ளவேண்டும்.

விடை—ஆம்.

வி—அடக்கத்திற்கு கொண்டு வரும்படியான சிலரு மிருந்திருப்பார்கள் அல்லவா ?

விடை—துரதிஷ்டவசத்தால் சிலருடைய கேவலமான செய்கைகளால் அனைவரும் ராணுவச்சட்டத்தின்கீழ் வரவேண்டியதாயிற்று. அம்மாதிரியான நோக்கம் கொண்டால் அது மிகவும் துரதிஷ்டந்தான். ஆனால் ராணுவச்சட்டத்தில் அம்மாதிரி யில்லாமல் முடியாது.

வி—ஜனங்களுக்கு வெகுகாலம் மனவெறுப்புண்டாக்கும்படியாகவும் அதிகாரிகளின்பேரில் பிரியம் இல்லாமல் போகும்படியாகவும் உத்திரவுகளை நீர் விடாதிருக்க வேண்டாமா ?

விடை—முற்றிலும் சரி. ஆனால் கெட்டசெயல்களைப் புரிந்தோரை மற்றவருக்கு உதாரணமாக்க வேண்டி யிருந்தது.

வி—ஆனால் அதேசமயத்தில் குற்றவாளிகளைச் சிக்ஷிப்பதில் குற்றமற்றவர்களை மாட்டிவிடாது பார்க்கவேண்டாமா ?

விடை—குற்றமற்றவர்களைத் தண்டித்தது எனக்குத் தெரியாது.

வி—நகர்ந்துசெல்லும் உத்திரவுகளை ஏற்படுத்தியதில் உமது அபிப்பிராயமென்ன ?

விடை—நான் அதைப்பற்றி அச்சிட்ட என் ஸ்டேட்மெண்ட்டில் சொல்லி யிருக்கிறேன். ஸ்திரீகள் அடிக்கப்பட்டதாக உணர்ந்தேன். நாங்கள் ஸ்திரீகளை மிகவும் அருமையாக பாவிக்கிறோம். அதற்குச் சரியான தண்டனையைப்பற்றி என்மூளையை உபயோகித்து ஆலோசித்தேன். என்ன செய்வதென்று எனக்கு விளங்கவில்லை. நான் என் சிப்பாய்களை அத்

தெருவில் ஒரு முக்கோணம் தயார் செய்யும்படி சொன்னேன். அத்தெருவை ஒரு விசேஷஸ்தலமாக பாவிக்கவேண்டுமென் றுணர்ந்தேன். இரண்டுபக் கத்திலும் சிப்பாய்களை நிறுத்தி, இந்தியர்கள் அத் தெருவழியே செல்லக்கூடாதென்றும் அப்படிச் செல்வதாயிருந்தால் நகர்ந்து செல்லவேண்டுமென் றும் உத்திரவிட்டேன். இப்பேர்ப்பட்ட சந்தர்ப்பத் தில் யாராகிலும் அத்தெருவின் வழியாகச் செல் வார்களென்று எனக்குப் புலப்படவில்லை.

வினா—நீர் அந்த உத்திரவை 19-ந் தேதிமுதல் 25-ந் தேதி வரையில் அமுலிலிருக்கும்படி செய்தீர். மிஸ் ஷெர் வுட் என்பவள் 10-ந் தேதி எதிர்க்கப்பட்டாள் அல் லவா ?

விடை—ஆம்.

வினா—அம்மாதை எதிர்த்தவர்களைச் சிக்ஷிப்பதும் குற்ற மற்றவர்களைச் சிக்ஷிக்காது விடுவதுமே உம்முடைய அபிப்பிராயமா யிருந்திருக்கவேண்டுமல்லவா ?

விடை—ஆம்.

வினா—நீர் விளம்பரம்செய்த தெருவின் எல்லையில் அநேக வீடுகள் இருக்கின்றனவா ?

விடை—ஆம். இரண்டுபக்கத்திலும் அனேகவீடுகளுண்டு.

வினா—அனேக வீடுகளுக்குப் பின்வழி கிடையாதென்று நான் அறிந்தேன். அதுசரிதானே ?

விடை—அப்பொழுது எனக்கு அதைப்பற்றித் தெரி யாது.

வினா—அனேக வீடுகளுக்குப் பின்வழி கிடையாதென் றிருக்குமாறைல், நிரபராதிகளாய் அவ்வீடுகளில் வசிப் பவர்கள் வெளியில் நகர்ந்து செல்லும்படியாக உம்

மால் ஏற்படுத்தப்பட்ட உத்திரவிற்கு என்ன நியாய மிருக்கிறது ?

விடை—என்னுடைய சிப்பாய்கள் காலை 6 மணி முதல் மாலை 8 மணி வரையில் தான் அங்கிருந்தனர். மற்ற சமயங்களில் ஜனங்கள் தாராளமாகச் சென்றிருக்கலாம். ஆதலால் அதிக அசௌகர்யங்கள் ஏற்பட்டிருக்க இடமில்லை. கொஞ்சம் கஷ்டப்பட்டிருந்தாலும் பாதகமில்லை. ராணுவச்சட்டத்தின்கீழ் கொஞ்சம் அசௌகர்ய மேற்படாதிருக்க முடியாது. வேறு வழிகளில் தங்களுக்கு வேண்டியவைகளை யடைந்திருக்கலாம்.

வினா—எப்படியடைய முடியும் ?

விடை—அநேகவீடுகளுக்குப் பின்வழியுண்டென்று நான் கேள்விப்பட்டேன். வேண்டிய சாமான்களை யடைய 8 மணிக்குப் பிறகு சென்றிருக்கலாம். அல்லது மற்றவர்களுடைய வீடுகளின் பின் வழியாகச் சென்றிருக்கலாம்.

வினா—நீர் ஏற்படுத்திய இந்த உத்திரவு உமது எண்ணப்படி முடியாமலிருந்திருக்கலாம். உண்மையாகக் குற்றஞ்செய்தவர்களைத் தண்டிக்க வேண்டியிருக்க சம்பந்தப்படாதோர் அவஸ்தைப் படும்படியாய் ஏற்பட்டதல்லவா ?

விடை—அமிர்த சரஸிலுள்ளோரில் பெரும்பாலோர் உதவி புரிந்தோ அல்லது என்ன நடக்கப்போகிறதென்று பார்த்துக்கொண்டோ இருந்தார்கள். தொந்திரவுகள் ஏற்பட்டு முடிந்தபிறகு தான் அவர்கள் உதவி புரியவந்தனர். கொஞ்சம் அசௌகர்ய மேற்படாதிருந்திருக்க முடியாது.

வினா—ஆனால் மிஸ் ஷெர்வுட் என்ற மாதை அடித்த

ஜனங்கள் அத்தெருவையே நாடினர்களென்பது என்ன நிச்சயம் ?

விடை—இல்லை. நான் நடுத்தெருவில் ஒரு மேடை யேற்படுத்தி அப்பக்கமாக அம்மாதை யடித்தவர்கள் சென்றால் அவர்களைச் சவுக்காலடிக்க உத்தேசித்தேன். நான் அந்தத் தெருவை ஒரு விசேஷ ஸ்தலமாகவும் ஏற்படுத்த எண்ணினேன். ஒருவரும் அத்தெருவழியே செல்லமாட்டார்களென்றெண்ண பலர் தற்செயலாகச் சென்றனர்.

வினு—அனேகர் நகர்ந்து செல்லும்படி கட்டாயப் படுத்தப்பட்டனரல்லவா ?

விடை—வேண்டுமென்று யாரையாவது அழைத்துச் சென்றதாக நான் கேள்விப்படவில்லை. நான் அம்மாதிரி வேண்டுமென்று செய்யவில்லை. அது தற்செயலாய் நேர்ந்திருக்கவேண்டும். என்னுடைய உத்திரவு அப்படிச் செய்வதற்கல்ல. புத்தியுள்ளவர்கள் தாமே அவ்வழியே செல்லமாட்டார்களென்று நான் நினைத்தேன்.

வினு—ஜனங்களை அவ்வழியே செல்லாதிருக்கும்படி செய்வது உமது அபிப்பிராயமானல் உம்முடைய உத்திரவு அர்த்தமில்லாத உத்திரவல்லவா ?

விடை—அந்த தெருவை ஒரு புண்யஸ்தலமாக்க வேண்டியதுதான் என் எண்ணம். என்ன சிக்ஷை செய்யலாம் என்று யோசனை செய்ததில் இந்த உத்திரவு தான் என் மனத்தில்பட்டது.

வினு—ஏப்பிரல் மாதம் 19-ந் தேதியிலிருந்து 25-ந் தேதி வரையில் இந்த உத்திரவு அமுலிலிருந்ததல்லவா ?

விடை—ஆம். அதுமுற்றிலும் சரியென்று நினைக்கிறேன். நான் முன்னமேயே அதை ரத்துசெய்ய நினைத்

தேன். ஆனால் நான் 21-ந் தேதி வெளியேபோக நேரிட்டதால் அப்படிச் செய்யக்கூடவில்லை.

வி—அந்த உத்திரவு மாற்றப்பட்டதற்குக் காரணமென்ன ?

விடை—எனக்கு அப்படிச் செய்யும்படி உத்திரவு வந்தது.

வி—அப்படி உத்திரவு வராதிருந்தால் நீர் என்ன செய்ய உத்தேசித்தீர்.

விடை—நல்லது. நான் திரும்பிவந்ததும் சிப்பாய்களை அங்குவிட்டகற்றி யிருப்பேன். நான் யோசிக்க வேண்டியது அதிகமாக இருந்தது. மனிதர்களை அடித்தபிறகு சிப்பாய்கள் அங்கிருக்க வேண்டியதில்லை.

வி—இந்த ஆறுபேர்கள் எப்பொழுது அடிக்கப்பட்டார்கள் ?

விடை—சுமார் 20-ந் தேதியிலிருக்கலாம்.

வி—அது 20-ந் தேதியென்றால் அதன்பிறகு அந்த உத்திரவு இருக்க நியாயமென்ன ?

விடை—நான் அதைக் கவனிக்காமல்விட்டேன். ஆறுபேர்களையும் அடித்த பிறகு அந்த உத்திரவு இருந்ததில் ஒரு நியாயமுமில்லை.

வி—அடிக்கப்பட்ட ஆறுபேர்களும் அம்மாதை எதிர்த்தவர்கள்தானே ?

விடை—ஆம். அப்படிச்சொல்லக் கேட்டேன்.

---

## சில அபிப்பிராயங்கள்

### பார்லிமெண்ட்டு மெம்பர் ஆர்தர் ஹெண்டர்சன்.
### (Arthur Henderson)

உலகத்தில் எல்லா ஜனங்களைக்காட்டிலும் தாங்களே ஏராளமான சுதந்தரத்தைப் பெற்றிருப்பதாகப் பிரிட்டிஷ்காரர்கள் சொல்லிக்கொள்வது முற்றிலும் சரியே. அமிர்தசரஸில் நடந்த கொலைகளைப்போலொத்த குற்றங்கள் நேரிடும்பொழுது அவர்களுடைய புத்தி இடி இடித்தாற்போல் தடுமாட்டமடைந்து தேசத்தில் நியாயம் என்பது இல்லாதொழிந்ததாக அவர்கள் கருதுவது ஒரு ஆச்சரியமல்ல. அமிர்தசரஸ் இங்கிலாந்திலிருந்து ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பாலிருக்கவே, பொது ஜனங்கள் அனுதாபங் காட்டுவது தூரத்திற்குத் தகுந்தபடியிருக்கிறது. அம்மாதிரியான விஷயம் இங்கிலாந்தில் நடந்திருக்குமானால் கவர்ண்மெண்டு 24-மணி நேரங்கூட இருந்திராதென்பது நிச்சயம். எங்களில், பிரிட்டிஷ் ஜனங்களின் சுதந்தரத்தில் பூரண நம்பிக்கையோடு பிறருக்கும் அத்தகைய சுதந்தரத்தை யளித்தலையே கைங்கரியமாகக் கொண்டவர்களுக்கு அமிர்தசரஸில் நடந்த "விஷயமும்" "லூஸிடானியா" (Lusitania) முழுகும்படி செய்த குற்றமும் ஒன்றுதான். ஏனெனில் இரண்டும் மனுஷத்தன்மை யற்றதாகும்

### H. G. வெல்ஸ் என்பவரின் அபிப்பிராயம்

டயர், ஓட்வியர் இவர்களைப்போலொத்த குற்றவாளிகளைத் தண்டிக்காவிட்டால் பிரிட்டிஷ் துரைத்தனம் இந்தியாவில் எப்படி நடக்குமென்பது எனக்கு விளங்கவில்லை. எல்லாருக்கும் நியாயமென்பது பொதுவென்று சொல்லிக்கொண்டு அதிகாரிகள் இம்மாதிரியான செயல்களிற் பிர

வேசித்தது மிகவும் கொடூரம். இத்தகைய மனிதர்களைச் சிக்ஷிக்காதுவிடும் கவர்ன்மெண்டார் இராஜ்யபரிபாலனம் செய்வதற்கே யோக்கியதையற்றவர்களாவார். நான் பேசிக்கொண்டிருந்த இங்கிலீஷ்காரர்களனைவரும், இறுமாப்பும் அடங்காத்தன்மையும் குடிகொண்ட இந்த முட்டாள்தனமான அதிகாரிகள் உலகத்தார்முன் நமக்கு அவக்கேட்டை கொண்டுவந்ததாகவே என்னைப்போல் நினைக்கிறார்கள். ஆனால் இங்கிலீஷ்காரர்களில் பெரும்பாலோர் வேறு விஷயங்களிற் தலையிட்டுக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் தங்களுக்காக நியமிக்கப்பட்ட இந்தக் கொடூரமான உத்தியோகஸ்தர்கள் என்னசெய்திருக்கிறார்களென்பதை உணரவில்லை.

### ஸி. பி. ஸ்காட் (C. P. Scott)

இந்தியாதேசச் சரிதையில் அமிர்தசரஸில் நடந்த கொலை மிகவும் கேவலமானதும் துயரப்படத்தக்கதாகவும் நான் நினைக்கிறதுபோலவே இங்கிலீஷ்காரர்களில் பெரும்பாலோரும் அபிப்பிராயப்படுகிறார்கள் என்பது நிச்சயம். இந்தியாவில், இங்கிலீஷ்காரர்களுடைய இராஜ்ய பரிபாலனத்திற்கு அதை ஒரு அடையாளமாகவோ, அல்லது, திவ்யமான ஆக்ஷிக்கு ஒரு கேவலமான மாசு என்பதைத் தவிர்த்து வேறுவிதமாகவோ நான் பாவித்தால் இனிமேல் என்ன நடக்குமோவென்று ஏங்குகிறேன்.

### ப்ரொபஸர் ஹாப்ஹௌஸ் (Professor Hobhouse)

இந்த வாரத்தில் இந்தியர்கள் கொண்டாடும் அமிர்தசரஸ் கொலை கீழ் தேசங்களில் மறக்கக்கூடாதது. தேசத்தையோ ஒரு வகுப்பையோ அல்லது கோட்பாட்டையோ எடுத்துக் காட்டிக்கொண்டிருக்கும் செயிண்ட் பர்த்தலோமியா (St. Bartholomew) அல்லது செப்டம்பர்

கொலைகளுடன் இதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். ஆங்கிலச் சரிதையில் கிளன்கோ (Massacre of Glencoe) கொலைக்குப் பிறகு இதற்குச் சமனாய் ஒன்றையும் சொல்ல முடியாது. அக்காரணம்பற்றியே, தேசத்தின்மேலல்லாது ராணுவத்தன்மையைப் பூண்ட அதிகாரிகளின் ஒரு வகுப்பின்மேல் குற்றஞ்சாட்டுவது நியாயமாகும். அது எப்படி செய்வதென்பது தேசத்தார் தீர்மானிக்கவேண்டிய விஷயம். அமிர்தசரஸில் அனுஷ்டித்த முறைகளைப்பற்றி தற்காலத்திய இங்கிலீஷ்காரர்களும், தம் முன்னோர்களைப் போலவே, கொடூரமாகப் பாவிக்கிறார்களென்று இப்பவும் ருசுப்படுத்தக்கூடும். அப்படியில்லாத வரையில் காலதாமதத்தால் ஒருநாளும் அழிவடையாத இந்த இழுக்கை ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்.

ஹால்போர்டு நைட் (Holford Knight)

அமிர்தசரஸின் வருஷதினம் இங்கிலாந்திலுள்ள சுதந்தர ஸ்திரீ புருஷாளுக்கும் இந்தியச் சகோதரர்களுக்குமுள்ள உண்மையான நட்பை யுணர்த்துகிறது. இந்தியாவில் ஜனங்கள் பட்ட கஷ்டம் இங்கிலாந்தையும் பாதிக்கிறது. இறுமாப்புடன் கூடிய வெறுக்கத்தக்க ராணுவத்தன்மை ஜனங்களுடைய சுதந்தரங்களை அழித்துவிட்டது. அதிகார வர்க்கத்தினர், ஆட்சி விலக்கத்திற்கஞ்சி, அதற்கு உதவியாய் நின்றனர். இகழத்தக்க தேசப் பிரமாணிகர்கள் வீணே புதிய வழிகள் ஏற்படுத்த எத்தனிக்கிறார்கள். ஆனதால் இந்த தினத்தில் நம்முடைய இந்திய நண்பர்கள் அனுபவிக்கும் அவக்கேடுகளில் நமக்கு உண்டாகும் அனுதாபம் கோபத்துடனுண்டாகிறது. ஆனால் நமக்குண்டாகும் கஷ்டங்களை நாம் நிவர்த்திக்க வேண்டும். இந்தியர்களும் அதே மனத்திடத்தோடு அவர்களுடைய கஷ்டங்களினின்றும் மீட்டுக்கொள்ள வேண்டும். அமிர்த

சரசை நமது சரிதையில் ஒரு கேவலமான பெயராகச் செய்த உணர்வற்ற குரூரமானது புதிய வழக்கங்களை ஏற்படுத்தும் நம்பிக்கைக்கு முற்றிலும் விரோதமாய் இருக்கிறது. ஐரோப்பாவிலும் நாம் அதை ஒழிக்கவேண்டியிருக்கிறதோடு, அதன் அபாயத்தை உணர்ந்தோர் இங்கிலாந்தின் பெயரைக் கெடுத்த ராணுவச் செயல்களை இந்தியாவினின்றுமகற்ற உதவி புரியாமலிரார்கள்...... துக்கமான நேரத்திலிருக்கும்பொழுது நல்ல நாளைப்பற்றி வாக்களிக்க மறக்கக்கூடாது......

பார்லிமெண்ட் மெம்பர் J. R. கிளின்ஸ்
(J. R. Clynes M. P.)

அமிர்த சாஸில் நடந்த குற்றமானது ஜனங்களின் புகழை மாத்திரம் அழிக்கவில்லை. தேசத்தின் பெயரே இம்மாதிரியான செயல்களால் பாழாக்கப்பட்டது. ஆனால் இதினின்றும் மீளவேண்டுமாயின் இந்தியர்களின் விருப்பத்திற்கும் தேவைகளுக்கும் தகுந்தபடி இந்திய கவர்ன்மெண்டைச் சீர்படுத்த வேண்டும்.

பார்லிமெண்ட் மெம்பர் பென். எம். ஸ்பூர்
(Ben. M. Spoor M. P.)

அமிர்தசாஸில் நடந்த கொலைகள் சென்று ஒரு வருஷகாலமாயிற்று. ஹண்டர் கமிட்டியின் ரிபோர்ட்டு வெளிவராவிட்டாலும் ஒரு கேவலமான பிழை நடந்ததென்பதற்குப் போதுமான சாக்ஷி ஏற்பட்டிருக்கிறது.

இராஜ்யபரிபாலனம் செய்வதில் உயர்ந்த பதவிகளில் இருந்து நிர்வகிக்க முடியாமலிருப்பது புதிதல்ல. ஆனால் இச்சமயம் அதற்கிடங் கொடுக்கக்கூடாது. நாம் இப்பொழுது மிகவும் கொடூரமான காலத்திலிருக்கிறோம்.

இப்பொழுது நடந்து முடிந்த யுத்தமானது பழைய ஏற்பாடுகள் பலவற்றையும் ஒழித்து புதிய விஷயங்களை ஸ்தாபித்துவிட்டது. ஒரு தேசத்தார் மற்றவரை கொடுமையான வழிகளைக்கொண்டு கீழ்ப்படுத்துவதென்பது அழிந்தது. அப்படியே எந்நாளும் நடக்கும்படி நாம் வேண்டுவோம். எல்லா ஜனங்களும் ஒன்றுதான் என்று பாவிக்கும் அவா நமக்கேற்பட்டிருக்கிறது. மெஷீன் குண்டுகளோ அல்லது ஆகாயக்கப்பல்களினின்றும் குண்டுகளைப் போடுவதோ அந்த அவாவைத் தடுக்கமுடியாது. காலதாமதமாவதற்கு முன்னால் அதிகாரத்தைப் பெற்றோர் மூடத்தனமான இச்செயல்களால் பின்னால் விளைவதைப் பற்றி அறிவாராக.




---



PRINTED BY P. R. RAMA IYAR AND CO., MADRAS

